# தமிழ் இந்தியா

குமரி நாடு

மேரு

பழைய நாவலம் தீவு

அல்லது

லெமூரியா



திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை.

கழக வெளியீடு—ந.அக



# தமிழ் இந்தியா



ஆக்கியோர் :

யாழ்ப்பாணத்து நவாலியூர்,
திரு. ந. சி. கந்தையா பிள்ளை



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி :: சென்னை

# முன்னுரை

தமிழர் எனப் பெயர் பெற்று, இந்திய நாட்டின் தெற்கே வாழும் மக்கள் ஒரு சிறு தொகையினராவர்; நீண்ட காலம் அவர்களின் பழைமையைப்பற்றி யாதும் அறியப்படவில்லை; ஆரியர் வருகைக்குமுன், தமிழர், நாகரிகம் அற்றவராய் வாழ்ந்துகொண்டிருந்தார்கள் என்றும், ஆரியர் அவர்களை வென்று வடக்கினின்று தெற்கே துரத்தினார்கள் என்றும், தமிழரிடையே நிலவும் நாகரிகமும் பிற உயர்வுகளும், ஆரியரால் தமிழருக்குக் கிடைத்தனவென்றும் முன்பு வரலாற்று ஆசிரியர் சிலர் எழுதுவாராயினர். அவர் கூற்றினை எதிர்த்துப் போராடுதற்குத் தமிழரிடத்திற் பழைய வரலாற்றுச் சான்றுகள் தேவையாயிருந்தன.

இந்நிலைமையில் கால்ட்வெல் என்னும் பாதிரியார் தமிழ் மொழிக்கும் துரானிய மொழிகளுக்குமுள்ள இலக்கண ஒற்றுமைகளையும், வேதங்களில் தமிழ்ச் சொற்கள் காணப் படுதலையும் எடுத்துக் காட்டுவாராயினர். தேயிலர் என்னும் பாதிரியார் நியுசிலந்து மக்களாகிய மயோரியரின் மொழிச் சொற்களுக்கும் தமிழ்ச் சொற்களுக்குமுள்ள தொடர்புகளை எடுத்துக் காட்டினர். டாக்டர் போப் என்பார், மயில், தந்தம், குரங்கு, அகில் முதலியவைகளைக் குறிக்க எபிரேய மொழியில் வழங்கிய சொற்கள் தமிழ் என்பதை எடுத்து விளக்கினர். மாக்ஸ் மூலர் என்னும் பண்டிதர் விவிலிய மறையின் பழைய ஏற்பாட்டிற் காணப்படும் ஒபிர் (Ophir) என்பது இந்தியாவிலுள்ள துறைமுகமென எடுத்து விளக்கினர். 1864-ல் மக்கட் குலநூலார் மேற்கு ஆசிய மக்களும் எகிப்தியரும், சின்ன ஆசிய மக்களும் தமிழரும் ஒரே குல முறையில் வந்தோர் என இயம்பினர். பேராசிரியர் சுந்தரம்

பிள்ளை அவர்கள் இக்கூற்றுக்களையும் பிறவற்றையும் நன்கு ஆராய்ந்த பின்னர், "சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுது நினதாயின்—முதுமொழி நீ அனாதியென மொழிகுவதும் வியப்பாமே!" என முழங்கினர். இதுவரையும் இருளில் இருந்த ஆராய்ச்சியாளர் விழித்தெழுந்தனர். ஆரியர் வருகைக்குமுன் தமிழர் திருந்திய நாகரிகம் அடைந்திருந்தார்கள் எனப் பின்பு அவர்கள் தங்களுடைய நூல்களிற் குறிப்பிட்டு வருவாராயினர்.

1921-ம் ஆண்டு சிந்து வெளியில் புதையுண்டு கிடந்த தமிழரின் மோகஞ்சோதரோ, அரப்பா என்னும் இரு பண்டைய நகரங்கள் கண்டுபிடிக்கப்பட்டு அவ்விடங்களிற் கிடைத்த பழம் பொருள்கள் ஆராயப்பட்டன. நுணுகி ஆராய்ந்தபின்னர் ஆராய்ச்சியாளர், அந்நகரங்களில் வாழ்ந்தோர் தமிழர்கள் என்றும், அவர்களின் நாகரிகம் மெசபெதேமியா, எகிப்து முதலிய நாடுகளின் பழைய நாகரிகங்களை ஒத்துள்ளதென்றும், அந்நகரங்கள் ஆறாயிரம் ஆண்டுகளுக்குமுன் அமைக்கப்பட்டனவென்றும் நவின்றனர்.

மத்தியதரை நாடுகளில் வாழ்ந்து கொண்டிருந்த மக்களே கிழக்குநோக்கிச் சென்று இந்திய நாட்டிற் குடியேறினார்கள் என வரலாற்று நூலார் சிலர் புகன்றனர். இது நேர்மாறாக நிகழ்ந்ததென்று வேறு சிலர் கருதினர். ஹேரஸ் பாதிரியார் மொகஞ்சொதரோ, அரப்பா என்னும் இடங்களிற் கிடைத்த 1800 முத்திரைகளை நுணுகி ஆராய்ந்தார்; ஆராய்ந்த பின்னர் இதுவரையில் மத்தியதரை மக்களே வந்து இந்தியாவிற் குடியேறினார்கள் எனக் கருதப்பட்டு வந்த கொள்கை தவறுடையதென்றும், தமிழர்களே இந்தி

யாவினின்றும் சென்று மத்திய தரைநாடுகள் முதல் எகிப்து ஸ்பெயின், அயர்லாந்து வரையிற் குடியேறினர்களென்றும் பல சான்றுகள் காட்டி எழுதியுள்ளார்.[1]

இந்நூலகத்தே உள்ள "தமிழரின் சமயவரலாறு" என்னும் பகுதி யாம் அச்சிடும் பொருட்டு எழுதி வைத்திருக்கும் விரிந்த நூல் ஒன்றின் சுருக்கம் ஆகும்.

தமிழரின் தோற்றம் முதல் சங்ககாலம் வரையிலுள்ள வரலாற்றினை இந்நூல் கூறுகின்றது. இதுகாறும் தமிழ் மொழியில் வெளிவராதனவும், எம்முடைய மற்றைய வரலாற்று நூல்களிற் காணப்படாதனவுமாகிய பல பொருள்கள்

---

1 பக்கம் 183.

"மெசபெதேமியா, பாபிலோன், கல்தேயா, ஆசியா முதலிய விடங்களுக்குப் போய்க் குடியேறி இராச்சியங்களைத் தாபித்துப் பிரபலமாய் ஆண்டுகொண்டிருந்த தமிழர்கள் மிகுந்த நாகரிகமுடையவர்களாய்ப் பற்பல கலைகளிற் றேர்ந்தவர்களாய்ப் பற்பல சாதியினராய் அழைக்கப்பட்டார்கள் என்றும் அவர்கள் பேசிய தமிழ்மொழி எபிரேய, கல்தேய, பபியோனிய, அசிரிய, சுமேரிய, பாரசீக, பலுச்சிய, பேர்குயிய, பிராகிருத, துருயித்திய, அங்கிலோ, சேர்மனிய, சமஸ்கிருத பாஷைகளில் மிக ஏராளமாகக் கலந்து வருவதனால் தமிழ் மக்களே மிகப் பூர்வமக்களாய் உள்ள குடிகளென்றும், அவர்கள் பல கலைகளிலும் சங்கீதத்திலும் தேர்ந்திருந்தார்கள் என்றும், அவர்கள் இருந்த நாடு கடல்கொள்ளப்பட்டகாலத்தில் தங்களுக்குச் சமீபமுள்ள, ஆசியா, சின்ன ஆசியா, அபிரிக்கா, அமெரிக்கா, ஒஷினியா என்னும் கண்டங்களின் கரை ஓரங்களில் தங்கினர்களென்றும், தப்பிப் பிழைத்தவர்களின் கலைகளின் தேர்ச்சிக் கேற்றவிதமாய் அங்கங்கே சங்கீதம், சிற்பம், சோதிடம் முதலிய அருங்கலைகள் விருத்தியாகிக்

இதனகத்தே வெளிவந்துள்ளன. அவைகளை விளக்குதற்கு ஏற்ற மேற்கோள்களை இடையிடையே எடுத்துக் காட்டியுள்ளோம். அண்மையில் வெளிவர விருக்கும் "தமிழர் வரலாற்று வாயில்கள்" (Sources for history of the Tamils) என்னும் எமது நூல் இந்நூலுக்கு, மேலும் விளக்கம் அளிப்பது ஆகும்.

சென்னை,
28-2-45. ந. சி. கந்தையா.

---

கொண்டு வந்தனவென்றும் நாம் காண்பதற்கு உதவியாகச் சில சரித்திரக் குறிப்புக்களும் சொல்லியிருக்கிறேன்.

"சுருங்கச் சொல்லுமிடத்துச் சரித்திரகாலம் ஆரம்பிப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்னதாகவுள்ள லெமூரியா நாடு தமிழ்நாடாயிருந்ததென்றும், அதில் வசித்தவர்கள் தமிழர்களாயிருந்தார்கள் என்றும் தமிழ் இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழாக வகுக்கப்பட்டு இலக்கண வரம்புடன் மிகுந்த தேர்ச்சியுடையதாயிருந்ததென்றும் அதன்பின்னுண்டான பிரளயங்களில் அந்நாடு கொஞ்சங்கொஞ்சமாய்க் கடலால் விழுங்கப்பட்டபின் பல இலக்கணங்களும் இசைத் தமிழைப்பற்றிச் சொல்லும் அரிய நூல்களும் கொஞ்சங்கொஞ்சமாக மறைந்து தற்காலம் அநுபோகத்திலிருக்கும் சொற்பமுறை மிஞ்சியிருக்கிறதென்றும் தெளிவாக அறிவோம்.

"உலகத்தவர் எவராலும் இதன்மேல் நுட்பமாய்ச் சொல்ல முடியாதென்று சொல்லும்படி மிகுந்த தேர்ச்சிபெற்ற சங்கீத நூலைப்போலவே சிற்பம், சோதிடம், கணிதம், வைத்தியம், வாதம், யோகம், ஞானம் முதலிய அருங்கலைகளும் மற்றும் பாஷைகளில் திருப்பப்பட்டு வந்திருக்கின்றனவென்றும் நூலாராய்ச்சிசெய்யும் அறிவாளிகள் காண்பார்கள்."—கருணாமிர்த சாகரம்—ஆபிரகாம் பண்டிதர்.

# பதிப்புரை

தமிழரையும் தமிழகத்தையும் பற்றிய* வரலாற்று நூலை முதலில் எழுதியவர் பேரறிஞர் பி. கனகசபைப் பிள்ளை யாவர். அக்காலம் முதல் (1898) தமிழ் நாட்டின் பண்டை வரலாற்றினை அறியும் ஆர்வம் தமிழறிஞர் உள்ளத்தில் கிளர்வதாயிற்று. ஆகவே, தமிழகத்தைக் குறித்து எழுதப் படும் நூல்களும் பொருளுரைகளும் அவர்களாற் போற்றிப் பயிலப்படலாயின. தமிழ் மொழியில் இஞ்ஞான்று கிடைக் கப்பெறும் பழந்தமிழ் நூல்களிற் பெரும்பாலன கி. மு. 300க்குப் பிற்பட்டன என்று கருதப்படுகின்றன. ஆகவே, அவைகளைத் துணைகொண்டு தமிழகத்தின் மிகப் பண் டைய வரலாறுகளை அறிதல் இயல்வதன்று. எனவே நில நூல், மொழிநூல், மக்கட் குலநூல், மனித நூல், பழம் பொருள் ஆராய்ச்சிநூல், உலக மக்களின் பழைய வரலாற்று நூல்கள் முதலியவற்றிலேயே தமிழகத்தின் பண்டைய வர லாற்றுக்கு வேண்டும் அடிப்படைச் சான்றுகளைக் காணுதல் வேண்டும். இவ்வழியைப் பின்பற்றி மேல்நாட்டாசிரியர் களிற் சிலர் தமிழரைப்பற்றி ஆராய்ந்து கூறியுள்ளார்கள்.

"ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமி ழர்" காலம் முதல் இன்றுவரையில் தமிழகத்தைப்பற்றி எவ்வளவு அறியப்பட்டுள்ளனவோ அவையிற்றை எல்லாம் நுட்பமாக வாராய்ந்து இந்நூல் ஆக்கப்படலாயிற்று. தமிழ் மொழியும், சிவநெறியும் இவ்வுலகம் முழுமையும் ஒருகால் ஓங்கியிருந்தன என்பதை விளக்கும்பொருட்டுப் பல ஓவி யங்களும், மேற்கோள்களும் இடையிடையே காட்டப்பட் டுள்ளன.

---

* "1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்."

பேராசிரியர் எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை அவர்கள் சில ஆண்டுகட்குமுன் வெளியிட்ட தமிழ் இந்தியா (Tamil India) என்னும் ஆங்கில நூல் தமிழ்மக்களாற் பெரிதும் போற்றிப் பயிலப்பட்டுவருகின்றது. அவ்வகை உணர்ச்சியையும் உள்ளக் கிளர்ச்சியையும் தமிழ் மக்களிடத்துத் தோற்றுவித்தற் பொருட்டே இத் தமிழ் நூலுக்கும் 'தமிழ் இந்தியா' என்னும் பெயர் இடப்படலாயிற்று.

இந்நூல் இயற்றிய திருவாளர் ந. சி. கந்தையா அவர்களைத் தமிழ் நாடு நன்கு அறியும். அவர்கள் முன்னர் எழுதி வெளியிட்டிருக்கின்ற 'தமிழகம்,' 'தமிழர் சரித்திரம்,' 'சரித்திர காலத்திற்கு முற்பட்ட பழந்தமிழர்' முதலிய நூல்களைப் படித்துணர்ந்த அன்பர்கட்கு இந்நூல் ஒரு நல் விருந்தாகும்.

தமிழ் நாட்டுக்குப் பெரிய விழிப்பை யுண்டுபண்ணக் கூடிய இந்த நூலை ஒவ்வொருவரும் வாங்கிப் போற்றின், மேலும் இவ்வரலாற்றுத் தொண்டைத் தொடர்ந்து செய்ய இந்நூலாசிரியர்க்கு ஊக்கம் அளிப்பதாகும்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.



# பொருளடக்கம்.

---

1966

---

## படங்கள்

---



போர்னியோவிற்
கண்டுபிடிக்கப்பட்ட
சிவன் சிலை



கம்போதியாவிலுள்ள
முருகன் சிலை
(மயிலின் கழுத்து உடைந்து
போயிற்று)

(முகப்பு)

# தமிழ் இந்தியா

## தோற்றுவாய்

தென்னிந்தியாவின் நில அமைப்பு உலகிற் பழமை யுடையது [1]. அதன் வரலாறும் அவ்வகையினதே. அதன் ஆராய்ச்சி கல்லில் நார் உரித்தல் போன்ற கடுமையுடைய தாதலின் அதனை ஆதிமுதல் ஒழுங்குபடுத்தி எழுதினோர் யாருமில்லை [2]. வரலாற்று ஆசிரியர்கள் இதுவரையில் தென் னிந்தியாவின் பழைய வரலாற்றினை எழுத முயன்றிருக்கி றார்கள் என்று மாத்திரம் கூறலாம். உலகமக்களின் பழைய வரலாற்று ஆராய்ச்சியில் தென்னிந்திய பூர்வ வர லாற்றினை விளக்கும் பகுதிகள் இடையிடையே காணப்படு கின்றன. அவ்வகை ஆதாரங்களையும் வரலாற்று ஆசிரியர்கள் ஆங்காங்குக் காட்டியுள்ள குறிப்புகளையும் துணைக்கொண்டு இந்நூல் வரையப்படலாயிற்று. வரலாறு கற்பனைக் கதை போலக் கூறத்தக்கதன்றாகலின் இன்றியமையாத இடங்களில் ஏற்ற மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன.

---

1. Deccan Itself one of the most ancient geological formations in the world has since the dawn of history the home of the Dravidians, the oldest of the Indian races—The people of India-P 2,-S. H. Risely.

2. People want to know Something about Dravidian Culture. South India is a land of wonders ; but the wonder of wonders is that the history of south India has not yet come,out,-Bhandarkar, Hindu-March. 1-1939.

## இயல்-க

### தோன்மைக் காலம்

### தமிழ் இந்தியாவின் பழைய நில அமைப்பு

நிலநூலார் பழையகாலத்து இப் பூமியிற் றோன்றியிருந்த கண்டங்களையும் கடல்களையும்பற்றிக் கூறுகின்றனர். அவர்கள் கூறுகின்றபடி, கிழக்குத்தீவுகள் அவுஸ்திரேலியா இந்தியா ஆபிரிக்கா முதலிய தேசங்கள் ஒரு பெரும் நிலப்பரப்பாக விளங்கின. அப் பெரிய நிலப்பரப்பிற்கு அவர்கள் கோங்வான (Gondwana) எனப்பெயர் வழங்கி யிருக்கின்றனர். மேற்குத் தொடர்ச்சிமலை கோங்வானக் கண்டத்தைக் கிழக்குமேற்காகப் பிரித்தது. அராவலி மலைகளுக்கு வடக்கே கடல் இருந்தது. கோங்வானக் கண்டத்தின் பெரும்பாகம் சிறிதுசிறிதாகக் கடலுள் மறைந்தபோது இந்தியா ஆபிரிக்கா கிழக்கிந்தியத் தீவுகள் என்பன கடலாற் பிரிக்கப்பட்டன. இராதகுமுத்முக்கேசி என்பவர் தென்னிந்தியாவின் பழைய நில அமைப்பைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார். அது வருமாறு:

### கோங்வான அல்லது லெமூரியா

"நில நூலார் கொங்வான எனப் பெயரிட்டுள்ள பெரிய பூகண்டத்தின் மிச்சமாக உள்ளது இந்திய நாடு. அப் பூகண்டம் தென்னாபிரிக்கா முதல் அவுஸ்திரேலியா தென்னமெரிக்கா வரையில் பரந்து கிடந்தது. இது அப் பகுதிகளில் கல்லாகச் சமைந்து கிடக்கும் பிராணிகள் தாவரங்களின் சின்னங்களைக்[1] கொண்டு அறியப்படுகின்றது. மேற்குத் தொடர்ச்சிமலை கோங்வானக் கண்டத்தைக் கிழக்குமேற்

---

1. Fossil remains.

காகப் பிரிக்கும் முகடுபோலமைந்திருந்தது. ஆதலினாலேயே இந்தியாவின் ஆறுகள் அராபிக்கடலை நோக்கி உற்பத்தியாகி வங்காளக் குடாக்கடலுள் வீழ்கின்றன. வடக்கே இரெதேக்[1] கடல் மத்திய ஐரோப்பா சின்ன ஆசியா முதலிய நாடுகளை மூடிப் பரந்து கிடந்தது. இந்தியாவிலே அராவலி மலைகள் மாத்திரம் கடலைப்பார்த்து நின்றன. நீண்ட காலத்தின் பின் மலை(இமயம்)எழ ஆரம்பித்தது. இரெதேக்கடல் மேற்கு நோக்கிப் பின்வாங்கிற்று[2].'' விஞ்ஞானத்தின் சுருக்கம் என்னும் நூலில் கொங்வானுக் கண்டத்தைப் பற்றி அதிசயப் படத்தக்க நிகழ்ச்சி ஒன்று கூறப்பட்டுள்ளது. அது வருமாறு:

"ஐரோப்பாவில் நிலக்கரி உண்டாயிருக்கின்ற காலத்தில் அவுஸ்திரேலியா தென்னமெரிக்கா இந்தியா முதலிய இடங்களில் ஒரே வகைத் தாவரங்கள் வளர்ந்தன; ஆதலினால் இந்நிலங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து கொங்வானுக் கண்டமாக விளங்கின'' என்று முடிவுசெய்யப்படுகின்றது.[3] பேராசிரியர் வெசினர்[4] புதியகொள்கை ஒன்றை வெளியிட்டுள்ளார். அவர் கூறுவது, "இக்கண்டங்கள் ஒன்றுக்கொன்று அண்மையில் இருந்தன. அண்டாட்டிக்கா, அவுஸ்திரேலியா, தென்னமெரிக்கா, இந்தியா முதலிய நாடுகளைத் தென்னாபிரிக்காவைச் சுற்றிப் பொருத்தி வைக்கலாம். கடலின் அடியிலுள்ள கருங்கற்பாறை வெடித்தமையால் இக்கண்டங்கள் விடுபட்டுப் பனிக்கட்டி தண்ணீரில் மிதந்து செல்வதுபோல அகன்று சென்றுள்ளன. இது நிலநூலார் கூறும் [5]ஐந்தாவது உகத்தில் நிகழ்ந்தது.'' என்பதாகும்.

---

1. Tethys. 2. Hindu Civilization P, 7, Radda Kumud Mookerji.

3. Outline of Science P. 641 - Prof. Arthur Thomson. 4, Prof. Wegener. 5, Tertiary epoch.

தாவர, உயிர் நூலார் கொந்வாண என்னும் கண்டத்தை லெமூரியா என வழங்குவர்.

## பழைய பூமி சாத்திரம்

இந்திய மக்களின் பழங்கதைகளைக் கூறும் புராணங்களும் இதிகாசங்களும் பூமியின் நடுவே பெரிய பூகண்டமொன்று இருந்ததைக் கூறுகின்றன. மிருகேந்திர ஆகமத்திற் கூறப்படுவதாக மாதவச் சிவஞான யோகிகள் சிவஞானபோதமாபாடியத்திற் காட்டியுள்ள பகுதிகள் சில அப்பெரிய பூகண்டத்தைப் பற்றி ஓரளவு விளக்குவனவாகும். அவைவருமாறு: ஏழு பெருந் தீவின் நடுத்தீவாவது நூறாயிரம் யோசனைப் பரப்புடைத்தாய் வட்டமாய் நிலமகட்கு உந்தித் தானமாயுள்ள நாவலந் தீவு ............... இந் நாவலந்தீவின் நடுவே மேருவரை............மேருவரையைச் சூழ்ந்த நிலமாகிய இளாவிருதம்...............இமயத்திற்கும் தென் கண்டத்திற்கும் நடுக்கண்டமாகிய பாரதவருடத்தில் வாழ்வோர்.......இவற்றுட் [1] பாரதவருடமும் ஒன்பது கண்டமாய் இந்திரத்தீவும், கசேருத்தீவும், தாமிரபர்ணித் தீவும், கபதித்தீவும், நாகத்தீவும், சாந்திரமத் தீவும், காந்

---

1. பாரத வருடமென்பது பழைய பபிலோனியா அசீரியா வென்றும், கங்கையின் உற்பத்தியைக் கூறும் வரலாறு தைகிரஸ் யூபிரதஸ் ஆறுகளின் உற்பத்தி வரலாறென்றும் வி. வெங்கட்டாசலம் ஐயரென்பவர் பாரதவருடம் என்னும் நூலில் ஆராய்ந்து காட்டியுள்ளார்.

The Original Bharatavarsha was the land of the Euphrates. This is what Sir Hentry C. Rawlinson says........ Bharatavarsha therefore originally meant tbe land through which the Euphrates flowed.........so then the earliest monarchs of Bharatawarsha were not .....Bharata of Manu's generations but bearedd semites of Babylon an Assur Calah or Ninervah - Bharatavarsha P. 28. -V. Verkotachalam Iyer.

வடல் (Waddell) என்னும் ஆசிரியர் அக்கேடிய சார்கன் என்பவனே இந்திய சகரன் எனக் கூறுவர்.




பழைய நாவலம் தீவு
அல்லது
**லெமூரியா**

வளைவுள்ள கோட்டின்கீழ் இருக்கும் பகுதி கடுந் தரையாகவும் அதற்கு மேலுள்ள பகுதி கடலாகவும் இருந்தன. தரைப்பகுதி நாவலந்தீவு எனப் பெயர் பெற்றிருந்தது. அம்புக் குறிகள், தமிழ் நாட்டினின்றும் மக்கள் சென்ற வழிகளையும், அவர்கள் தங்கி வாழ்ந்த இடங்களையுங் காட்டுவன.

—பக்கம் 5

தருவத்தீவும், வாருணத்தீவும், குமரித்தீவுமெனப் பெயர் பெற்றுப் பலமலைகளும் பல நதிகளும் பலவேறுவகைப்பட்ட சாதிகளுமுடைத்தாய் வயங்கும். இவ் வொன்பதுள்ளும் குமரிகண்ட மொன்றே வேதாகமவழக்கும், சாதிவரம்பும், கங்கை முதலிய புண்ணிய தீர்த்தங்களும், காசி முதலிய புண்ணிய தலங்களுமுடைத்தாய்ச் சிறந்தது. ஏனை எட்டுக் கண்டங்களும் மிலேச்சர் வாழிடங்களாம்.

"பூமியின் மேற்பரப்பு ஏழுகடலும் ஏழு பெருந்தீவும் நடுவே மேருவரையு முடைத்தாய்ப் பூலோகமெனப் பெயர்பெறும். இந் நாவலந்தீவினடுவே மேருவரை நூறுயிரம் யோசனை அளவுடைத்தாய் வயங்கும்......இது மிருகேந்திரத்திற் கண்டது."

## மேரு உலகுக்கு நடு

புராணங்களும் இதிகாசங்களும் பழைய கடல் நிலங்களைப் பற்றிப் பிறழக் கூறுமாயினும் மேரு உலகுக்கு மத்தியில் உ.ள்ளது என்பதை எல்லாம் ஒருதலையாக ஏற்றுக்கொள்ளும். புத்தசைன நூல்கள் மேருவை மந்தரம் எனக் கூறும். பாகவத புராணமும் கந்தபுராணமும் ஒரு காலத்தில் காற்றுக் கடவுளுக்கும் மேருமலைக்கும் நேர்ந்த போரில் காற்றுக் கடவுளால் முறித்துக் கடலுள் வீசப்பட்ட மேருவின் சிகரமொன்றே இலங்கை எனக் கூறுகின்றன. இது வெப்ப நாடுகளில் அடிக்கடி நேரும் காற்றுக்குழப்பம் ஒன்றையும் அக்காலத்தில் மேருவின் ஒருபகுதி கடலுள் மறைந்த வரலாற்றினையும் குறிக்குமெனக் கருதப்படுகின்றது. ஆகவே இம்மலை பூமத்திய இரேகையை அடுத்து உலகுக்கு மத்தியில் இருந்ததெனத் தெரிகின்றது. பிற்காலத்தில் இம்மலை இமயமலையை அடுத்தோ அதற்கு வடக்கிலோ இருந்ததெனக்

கருதப்பட்டது. கி.மு. 4-ம் நூற்றாண்டில் விளங்கிய மெகஸ்தினஸ் என்னும் கிரேக்கர் மேருமலை பாண்டிநாட்டில் உள்ளதெனக் கூறியுள்ளார் 1.

பாஸ்கராச்சாரியர் எழுதிய வானநூற் குறிப்பில் பூமத்திய இரேகை பழைய இலங்கைக் கூடாகச் சென்றதெனக் குறிப்பிடப்பட்டுள்ளது. பூமத்திய இரேகை சுமத்திராவுக்கூடாகச் செல்கின்றது. இலங்கைப் புத்த நூல்கள் இப்பொழுதுள்ள இலங்கை, முன்னைய இலங்கையில் பன்னிரண்டில் ஒரு பகுதி எனக் கூறுகின்றன. இப்பொழுது இலங்கைக்கு 400 கல் தூரத்திலுள்ள மாலைத் தீவு எனப்படும் தீவுக்கூட்டங்கள் இலங்கையின் பகுதியாக இருந்தன என்று நிலநூலார் கூறுவர். அத்தீவுகளில் வாழும் மக்கள் அவுஸ்திரேலிய மக்களுக்கும் இந்தியாவிற் காணப்படும் சில மக்கட் கூட்டத்தினருக்கும் இனமுடையவர்களாகக் காணப்படுகின்றனர் 2. செங்கோன்றரைச் செலவு என்னும்

---

1. The Pandaeon nation is said to have been governed by females and their first queen is said to have been the daughter of Hercules. The City nysa is assigned to this reign as is also the mountain sacred to Jupiter, *meros* by name. In a cave on which the ancient Indians affirm Father Baccus was nourlshed - Ancient India as described by Megasthenes and Arrian - P. 156.

"இடைபிங் கலையிம வானே டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை"

"மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூடு மிமவா னிலங்கைக் குறியுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலையத்தூ
டேறுஞ் சுழுனை யிவைசிவ பூமியே"

என்னும் திருமந்திர அடிகளும் ஆராயத்தக்கன.

The Greek writers identified the gods of the country with their own. They supposed Siva to be Bacchus and believed Krishna to be Herackles - The Muhammadans-P. 13 J. D. Rees, C.I.E., I.C.S,

2 The formation of Malaidives P 23, - J. S. Gardiner

நூலில் கடல் கொண்ட நாட்டின் சில மலை, ஆற்று, இடப் பெயர்கள் காணப்படுகின்றன. இறையனாரகப் பொருளுரை தலைச்சங்க மிருந்த மதுரையைக் கடல் கொண்டதெனக் கூறுகின்றது. இளங்கோவடிகள் பஃறுளி யாறு குமரியாறு முதலியவைகளைக் கடல் கொண்ட தெனக் குறிப்பிட்டுள்ளார். அடியார்க்குநல்லார் குமரிமுனைக்குத் தெற்கே கிடந்து கடல் கொள்ளப்பட்ட நாற்பத்தொன்பது நாடுகளைக் குறிப்பிட்டதோடு அந்நிலப்பரப்பு 700 காவத[1] முடையதெனவுங் கூறியுள்ளார். இவைகள் எல்லாம் ஒரு காலத்தில் இந்தியக் குடாநாட்டின் அமைப்பு வேறு வகை யில் இருந்ததென்பதை நன்கு விளக்குவன.

## கடல் கோள்

இவ்வுலக மக்கள் எல்லோரும் ஒரு பெரிய கடல் கோளைப்பற்றிக் கூறுகின்றனர். ஒவ்வொரு மக்கட் கூட் டத்தினரும் அது தத்தம் நாட்டில் நிகழ்ந்ததென்பர். இக் கதை சிறிய சிறிய வேறுபாடுகளுடன் ஒரே வகையாக எல்லோராலும் கூறப்படுகின்றது. ஆகவே உலக மக்கள் மத்திய இடமொன்றிலிருந்து பிரிந்து செல்வதன்முன் இக் கடல்கோள் நிகழ்ந்ததெனக் கருதப்படுகின்றது.[2]

இந்திய மக்கள் கடல்கோளைப் பற்றிக் கூறும் வரலாறு சதபதப் பிராமணத்தில் (கி. மு. 1300) முதன்முதற் காணப் படுகின்றது. வடமொழி நூலிற் றனித்து நிற்கும் கதையா யிருப்பதால் இது அக்கேடியரிடமிருந்தோ தமிழரிட

---

1. காவதம் 10 கல் தூரம்.

2. When the ancestors of Indians, the Pereans. the Greeks. the Romans, the Slaves, the Celts and the Germans were living together within the same onclorures. Nay under the same roof, Lectures on the seience of langnge.— 1864-Maxmuller.

மிருந்தோ ஆரியருக்குக் கிடைத்ததென் வரலாற்று நூலார் கூறுகின்றனர். சதபதப் பிராமணத்திலும் புராணங்களி லும் கூறப்படும் வெள்ளப் பெருக்கின் வரலாறு வருமாறு:

மனு தனது காலை வழிபாட்டைச் செய்துகொண்டிருக் கும்போது ஒரு மீன் அவரது கையில் வந்தது. அம் மீன் மனுவை நோக்கி, "என்னைக் காப்பாற்று நான் உன்னைக் காப்பேன்; ஒரு வெள்ளப் பெருக்கு எல்லா வுயிர்களையும் அழித்து விடும்" என்றது. அவர் மீனை ஒரு முட்டியுள் விட்டார். அது பெரிதாக வளர்ந்தபோது அவர் அதனை ஒரு குளத்தில் விட்டார். அது இன்னும் பெரிதானபோது அவர் அதைக் கடலுள் விட்டார். பின்பு மீன் அவரை ஒரு தோணி செய்யும்படி வேண்டிற்று. மனு அப்படியே செய்தார். வெள்ளப் பெருக்கு நேர்ந்தது. மீன் தலையில் ஒற்றைக் கொம்புடன் வந்தது. மனு கொம்பில் ஒரு கயிற் றைக் கட்டினர். மீன் அவரை வடமலைக்குக் கொண்டுபோய் விட்டது. மீன், "யான் உன்னைக் காப்பாற்றிவிட்டேன், தோணியை மரத்திற் கட்டு" என்று மனுவிடங் கூறிற்று.

மாபாரதத்தில் இவ்வரலாறு வேறுவகையிற் கூறப் படுகின்றது. வைவசுவதமனு வைசாலவனத்தில் தவஞ் செய்துகொண் டிருந்தார். அப்பொழுது மீன் ஆற்றங் கரையில்வந்து மற்ற மீன்களைப் பார்த்துத் தன்னைக் காக்கும் படி கேட்டது. மனு அம் மீனை எடுத்துச் சாடியில் விட் டார். பின் மேற்கூறியவாறு சொல்லப்படுகின்றது. மனு ஏழு இருடிகளுடனும் பலவகை விதைகளுடனும் தோணி யில் ஏறினர். மீன் தோணியை இமயமலைக்குக் கொண்டு போயிற்று. அத் தோணி ஒரு மரத்திற் கட்டப்பட்டது. பின்பு அம்மீன் இருடிகளை நோக்கி, "யானே பிரமா; யான்

மீன் வடிவெடுத்து உங்கள் எல்லோரையும் காத்தேன்" எனக் கூறிற்று.

பாகவத புராணத்தில் இவ்விடம் தென்னிந்தியா வென்று கூறப்பட்டுள்ளது. அதில் மனு அல்லது சத்திய விரதன் திராவிட வேந்தன் எனக் கூறப்படுகின்றான். அங்கு மனு மலைய மலையில் ஊற்றெடுத்து வருகின்ற கிருதமாலையில் (வையையில்) பலி செலுத்தும்போது மீன் அவருடைய கையில் வருகின்றது.

புராணங்கள் பழைய ஞாபகங்களை ஓரளவிற் கூறியுள்ளன. இவ் வரலாற்றுள் சில உண்மைகள் இருக்கின்றன என்பது மறுத்தற்கில்லை. புராணங்கள் பிற்காலங்களில் கூட்டியும் திருத்தியும், குறைத்தும் எழுதப்பட்டுள்ளன[1].

## உலக மக்களின் ஓர் உற்பத்திக்குரிய அடையாளங்கள்

கி. மு. 4000 வரையில் உலகமக்களை எல்லாம் ஒரு கூட்டத்தில் இணைப்பதற்குரிய ஆதாரங்கள் காணப்படுகின்றன. இதற்குரிய இரண்டு ஆதாரங்கள் மொழியும், வழிபாடுமாகும். கி. மு. 4000 வரையில் கிழக்குத் தீவுகள் சீன அமெரிக்கா சுமேரியா பபிலோன் கிரேத்தா சைபிரஸ் முதலிய தேசங்களில் வழங்கிய எழுத்துகள் ஓரே உற்பத்தியைச் சேர்ந்தன என்று ஆராய்ச்சியாளர் காட்டி யிருக்கின்றனர். பிரித்தன் தேசம் முதல் யப்பான், அமெரிக்கா

1. In the 4th century (AD) Buddhism declined and there was a Brahmanical revival; and the Brahmans re-edited some of the the books on the religious and the civil laws and gave a new and popular shape to them. The old Puranas were also recasted about the period and a good many new ones written - collected works of R. G. Bhandarkar Vol. II, P. 444.

வரையில் சூரியத்தம்ப வழிபாடு (சிவலிங்கவழிபாடு) காணப் பட்டது. இவ்விடங்களிலெல்லாம் சர்ப்பமும் இடபமும் பரிசுத்த முடையனவாகக் கருதப்பட்டன. இவ்விரண்டு பெரிய எதுக்களால் உலகமக்கள் ஒரு பெருங் கூட்டத்தி னின்றும் பிரிந்து ஆங்காங்கு வாழ்ந்தார்கள் என்பது தெள் ளிதிற் புலனாகின்றது. இதற்காதாரமாக மேல்நாட்டு வர லாற்றாசிரியர்கள் ஆராய்ந்து கூறியுள்ளனசிலவற்றை ஈண்டுத் தருகின்றேம்.

"செம்புக்காலத்தில் கிழக்கே மத்தியதரை முதல் சீனு வரையில் ஒரேவகை நாகரிகம் நிலவியதென விக்ரர் கிறித்தி யன் என்பவர் கூறியுள்ளார்.[1]

"நீலாறு, தைகிரஸ் சிந்து கங்கை இந்துஆசியா ஓசேனியா முதலிய இடங்களின் தோணிகள் மறந்துபோகப்பட்ட மக்க ளின் நாகரிக இணைப்பை வெளியிடுகின்றன. [2] (இவை ஒரே வகை அமைப்புடையனவாதலின்.)

"அமெரிக்கரின் முன்னோர் ஆரியமக்களுக்கு முந்தியவர் களான துரானிய வகுப்பாரின் மொழியை வழங்கியோரா யிருத்தல்வேண்டும். அத் துரானியருள் முக்கியம் வாய்ந்தோர் திராவிடர் எனப் பிரிக்கப்பட்டுள்ள மக்களாவர்.

"அமெரிக்க சாதிகளின் பழைய மொழி ஒட்டுச் சொற் களை உடையது. சொற்களில் வேறுபட்டிருந்த போதும் இலக்கண அமைவில் அது இந்தியமொழிகளை ஒத்திருக்கின் றது. பழைய சொற்கள் மறைந்து போகப் புதிய சொற்கள் புகுந்திருக்கலாம். ஆனால் மொழி அமைப்பு ஒரேவகையாக இருக்கின்றது. இவ்வினத்தையே ஆபிரிக்க அமெரிக்க, பசி

1. India and the Pacific world P. 63.; Victor Christian.
2. Ibid P. 63.

பிக்கிய யப்பானிய கோறிய திராவிட தாத்தாரிய பின்னிய துருக்கிய பாஸ்க் மொழிகள் சேர்ந்தன.

"ஆராய்ச்சியில் அமெரிக்க சாதிகளும் தென்னிந்தியத் தமிழரும் செமித்திய ஆரிய மக்களினின்றும் வழக்கங்களால் வேறுபட்ட ஒரு பொதுக் கூட்டத்திலிருந்து பிரிந்தார்கள் எனத் தெரிகின்றது[1].

"பல தெய்வங்களுடன் சூரியசந்திரக் கடவுளர் திராவிட (துருயிதிய - Druid) கடவுளராவர். பபிலோனிலும் சாலடியாவிலும் சூரியக்கடவுள் வேல்மார்துக்[2] எனப்பட்டார். சந்திரத்தெய்வம் இஸ்தார்[3]. அவ்வாலயங்களில் நடனமாதர் இருந்தார்கள். பெரிய கிரியைகள் நடத்தப்பட்டன. இந்திய ஆலயங்களில் காணப்படும் தேவதாசி வழக்கு, திராவிட வழக்கைப் பின்பற்றியது. இஸ்தார் ஆலயத்தைச் சூழ்ந்து சோலைகள் இருந்தன. அக்கடவுளின் அடையாளம் மரமாக இருந்தது.

"பகற் (Baal)கடவுளும், பலிபீடமும், இடபமும்(சூரியனைக்குறிக்கும்) சிலுவை அல்லது கற்றாணிஞல் குறிக்கப்பட்டன. சாலடியரின் கி. மு. 6000க்கும் கி. மு. 5000க்கும் இடைப்பட்ட களிமண் தகடுகளில் திருவிட (Drauvada) திராபட(Drapada)என்னும் பெயர்கள் பெரிதும் காணப்படுகின்றன. சாலடியர் தமிழரே யாவர்[4].

"திராவிட இடப்பெயர்கள் மெசபெதேமியா, இருன் முதலிய தேசங்களில் காணப்படுகின்றன. மிந்தனி[5] என்னு

---

1. Origin and antiquity of man pp. 131, 148, 81, 84, G. Federick Wright.
2. Bel marduk. 3. Ishtar
4. Links with past ages pp. 215. 222 - E. F. Orlon.
5. Mittani (Kharian)

மிடத்தில் பேசப்பட்ட மொழி இக்காலத் திராவிட மொழியுடன் மிகவும் ஒத்துள்ளது. [1]



"சோட்ஸ்பேண் வூட்[2] என்பவர் அசிரிய கம்பளங்களும் இந்திய கம்பளங்களும் ஒரே வகையாயிருத்தலைக் காட்டி அவர்களின் செமத்தியருக்கும் ஆரியருக்கும் முற்பட்ட பொது உற்பத்தியைப் பற்றிப் பின் வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"தென்னிந்திய ஆலயங்களின் அமைப்பும் பழைய அசிரியரின் கட்டிட அமைப்பும் ஒரேவகையாகவுள்ளன. அசிரியரின் கட்டிடங்களிலும் தாமரை மொட்டும் மலரும் போன்ற மாதிரிகள் காணப்படுகின்றன. அசிரிய இந்திய சிற்பக் கலைகளுக்கிடையில் அதிக ஒற்றுமை காணப்படுகின்றது. இவ்விரு மக்களும் ஒரு பொதுக்கூட்டத்தினின்றும் பிரிந்தவர்களாதலின் இவ்வொற்றுமை காணப்படலாம். [3]

"தென்னிந்திய ஆலயங்களும் சீன யப்பான் (Torii) ஆலயங்களும் ஒரே அடிப்படையின் தோற்றங்களாகும். திருத்தமுறாத பியூசியர் (Figians) எகிப்திய இந்திய ஆலயங்களின் மாதிரியைச் சரியாகப் பின்பற்றமாட்டாமையால் கோபுரங்களின்றிக் கோயில்களை அமைத்திருக்கிறார்கள்.

"கிரேத்தா (Crete) பபிலோன் கிழக்கிந்தியத் தீவுகளில் [4] சங்கு வாத்தியங்களும் முத்து அலங்காரமும் கவனிக்கத்தக்கன. பொனீசியர் இவ் வழக்கத்தை மைசினியரிட மிருந்து பெற்றிருக்கலாம். பிற்காலப் பிராமண புத்த வழக்கங்

---

1. Hindu civilization p. 38, R. K. Mukerjee.
2. George Bernard.
3. The gate ways of India p. 53, Colonel Sir Thomas Holdich.
4. The couch sheil used in Minoan cult for summoning the devinity. Conch shells are themselves of frequent occurance in Minoan shrines - The Palace of Minos at Knossos-vol. IV p. 344.

களுக்கு அடிப்படையாயிருந்த திராவிட வழக்கங்களுள் இது நன்ருக வேரூன்றி யிருந்தது. கற்காலத்தில் இப் பழக்க வழக்கங்களைச் சிலர் பர்மா இந்துசிஞ, சிஞ யப்பான் வரையும் கொண்டுசென்றனர். பின்பு இவை பசிபிக்கிய தீவு களுக்குக் கொண்டுபோகப்பட்டன. கடைசியில் இவை அமெரிக்கக் கரைகளை அடைந்தன. 1

"சிந்து கிழக்குத் தீவுகளின் எழுத்துக்கள் ஒன்று என்று கூறுவதைப் பற்றி ஐயப்பாடு இல்லை. பழைய இந் திய எழுத்து எவ்வாறு பசிபிக்குத் தீவுகளுக்குச் சென்றது என்பதை ஒருவரும் சொல்லமுடியாது. மரக் கட்டைகளில் எழுதப்பட்ட கிழக்குத் தீவு எழுத்துக்களின் காலம் அறியப் படவில்லை. அவர்களின் எழுத்து முழுதும் மறக்கப்பட்டது. இதே எழுத்துகள் இந்திய முத்திரைகளிற் காணப்படுவன போலப் பழைய சுமேரியா, சூசா, தைகிரசுக்குத் தெற்கே உள்ள கரைத் தீவுகளிலும் காணப்பட்டன. வரலாறு அறியப்படாத ஒரு மக்களின் நாகரிகம் இங்குக் காணப்படு கின்றது.

"சுமேரியர், இந்திய எழுத்துகளைச் சுமேரியாவுக்குக் கொண்டு சென்ற இந்திய வியாபாரிகளிடமிருந்து அவைகளை அறிந்திருக்கலாம். அப் பழைய எழுத்துக் குறிகளின் பகுதிகள் காப்பாற்றப்பட்டுள்ளன. இவைகளுட் சில வர லாற்றுக் காலத்துக்கு முற்பட்ட சிந்து எழுத்துகளைப்போல எனக்குத் தோற்றுகின்றன. சிந்துமொழி பேசப்படு கின்றபோதும் எழுதப்படுகின்றபோதும் அதனை முழுதும் அறிந்தவர்கள் சுமேரியர்களேயாவர்.

"பிராமி எழுத்துகள் எல்லம் அரப்பா மகஞ்சொதரோ எழுத்துகளிலிருந்து பிறந்தன. பிராமி எழுத்தைத் தென்

1, The Ancient Egyption culture pp. 22, 23 G. Elliot smith.

செமத்திய பொனீசிய எழுத்துகளோடு இணைத்த ஆசிரியர்கள் ஓரளவில் சரியாகவே கூறியுள்ளார்கள். இவைகளும் அரப்பா மகஞ்சோதரோ எழுத்துகளிலிருந்து தோன்றின என்பதற்குப் போதிய ஆதாரங்கள் கிடைக்கின்றன.[1]

"சிந்து எழுத்துகளுக்கும் மேற்கு ஆசிய, கிட்டிய கிழக்குத் தேசங்களின் அரைகுறையான சித்திர எழுத்துகளுக்கும் தோற்றத்தில் ஒற்றுமை காணப்படுகின்றன. சிந்து எழுத்துக்களை ஆராய்ந்தோர் அவை சுமேரிய, எல்லம், மினேவ, கித்தைதி எழுத்துக்களுக்கு ஒற்றுமையுடையன என்பதைக் காட்டியுள்ளார்கள். இவ் வெழுத்துக்களின் அடிப்படை ஒன்றே. இவைகளின் பொது உற்பத்திக்குரிய காலம் புதிய கற்காலமாகலாம். ஓர் எழுத்தையே ஒவ்வொரு வகையாரும் வெவ்வேறு வகையில் விருத்திசெய்தனர்."[2]

எச்சி வெல்ஸ் (H. G. Wells) என்னும் ஆசிரியர் உலகில் இன்று காணப்படுகின்ற மக்கள் எல்லோரும் தோன்றுவதற்கு அடிப்படையிலுள்ளோர் மத்தியதரைக்கும் கிழக்குத் தீவுகளுக்கும் இடையே கிடந்த பெரிய பூகண்டத்திலே தோன்றிப் பெருகிய கபிலநிற மக்களென்றும், மத்தியதரை நாடுகளில் ஆதியில் வழங்கியது பாஸ்க் (Basqu) மொழி என்றும், பாஸ்க்மொழியும் திராவிடமும் நெருங்கிய உறவுடையன வென்றும் கூறுவர்.

டாக்டர் பாஸ்டவ் (Dr. Basedow), அவுஸ்திரேலியா இந்தியா தெற்கு ஆபிரிக்கா என்னும் நாடுகள் தரையால்

---

1. Introduction by Prof. S. Langdon to the script of Harappa and Mohenjodaro and its connection with other scripts- G. R. Hunter.
2. Mohenjo Daro and the Indus Civilization vol. I. p. 44, -Sir John Marshall.

இணைக்கப்பட்டிருந்தன எனக் கூறுவர். அவர்கூறுவது, "உயிர் நூலார் அக் கண்டத்தை லெமூரியாவென்றும், நிலநூலார் கொங்வானு வென்றும் பெயரிட்டுள்ளார்கள். இக் கண்டமிருந்த இடத்திலேயே நாம் ஆதி மக்களின் தொட்டிலைத் தேடவேண்டும்" என்பதாகும்.[1]

றிவெற் (Revet) என்னும் ஆசிரியர், சுமேரிய ஓசேனிய மொழிகள் மத்தியதரைமுதல் அமெரிக்கா யப்பான் தஸ்மேனியாவரையும் சென்று இந்நாட்டு மொழிகளை இணைத்தன எனக் காட்டியுள்ளார்[2].

ஆரம்பகாலப் பொத்தகம்[3] என்னும் நூலில், எகிப்திய மொழிச் சொற்களோடு ஒற்றுமையுடைய பல மயோரிய (நியூசிலந்து) மொழிச் சொற்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. தேயிலர் (Tailor) என்னும் பாதிரியார் மயோரிய மொழி தமிழுக்கு இனமுடையதாதலை நன்கு விளக்கியுள்ளார்.

## சுமேரியரும் தமிழரும்

"சேர்யோன் மார்சலும் டாக்டர் ஹாலும் சுமேரிய மக்கள் திராவிட மக்களைத் தோற்றத்தில் ஒத்தவர்கள் எனக் கூறியுள்ளார்கள். இது சுமேரியரும் இந்தியரும் ஒரு தொடர்பினுள்ளவர்களென்பதை வலியுறுத்துகின்றது. இருமக்களின் தோற்றப்பொலிவும் தலையை அலங்காரஞ்செய்யும் முறையும் ஒரே வகையின. அரப்பாவிற் கிடைத்த குத்துவாள்கள் சுமேரியரின் அவ்வகை வாளை ஒத்திருக்கின்றன. சுமேரியர் சிந்து மக்களின் நீரருந்தும் கிண்ணங்கள் ஒரே வகையின. சிந்து மக்களின் உருளைவடிவான வெள்ளிப் பாத்திரங்கள்

1. India and the Pacific world p 22. Kalidas Nag.
2. Ibid p. 63,
3. Book of beginnings—Gerald Massey.

சுமேரியரின் கல்நார்ப் பாத்திரங்கள் போன்றன. இருமக்களும் வாசனைப்பொடி முதலிய மேனியலங்காரப் பொருள்களை வைக்கப் பயன்படுத்திய சிமிழ்கள் ஒரேவகையின. பூச்செண்டுகள் பூமாலைகளைப் பயன்படுத்தும் வகையும், வழிபாட்டில் மிருகங்களைத் தொடர்புபடுத்தும் முறையும் இரு நாடுகளுக்கு மொத்தன. இரு நாட்டவர்களும் வண்டி செய்யும் முறையைத் தனித்தனி கண்டுபிடித்தார்களெனக் கூற முடியாது. இருநாடுகளின் வீட்டு அமைப்புகளையும், முத்திரைவெட்டும் முறையையும், மட்பாண்டங்களின் செம்மையையும் நோக்குமிடத்து மூவாயிரமாண்டுகளின் முன் சிந்து மக்கள் பபிலோனியரை விட உயர்நிலை அடைந்திருந்தார்கள் என்பது புலப்படும். இது இந்திய நாகரிக காலத்தின் கீழ் எல்லையாகும். அதற்கு முற்பட்ட இந்திய நாகரிக காலத்தின் வீற்றினால் பபிலோனிய நாகரிகம் தோற்றியிருத்தல் கூடாதா? அப்படியாயின் சுமேரிய மக்கள் சிந்துநாட்டினின்று அல்லது அதன் நாகரிக வாடையைப் பெற்ற இன்னொரு இடத்தினின்று சென்றவர்களாக மாட்டார்களா? இங்குக் காட்டப்பட்ட இருமக்களுக்கு மிடையிலுள்ள ஒற்றுமைகள் குல ஒற்றுமையைக் காட்டுவன. சிந்துவில் உள்ள சிலர் அல்லது அவர்கள் எண்ணங்களிற் பழகிய சிலர் சில்லுள்ள வண்டிகளையும் கிளிஞ்சல்களையும் மற்றும் சுமேரியரது அழகிய பொருள்களையும் தெற்குப் பபிலோனுக்குக் கொண்டு போயிருத்தல்கூடும்."1

"இன்று காணப்படும் இந்தியன் ஒருவனுடைய முகவெட்டு ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் முன் வாழ்ந்த சுமேரிய மக்களின் வடிவம் போன்றது. இக்கால இந்தியர் கிரேக்கர் இத்தாலியர்களிடையே ஆரியரல்லாத மக்களின்

1. The most ancient East - p. 2I0, - Childe.

சாயல் காணப்படுகின்றது. உருவச் சிலைகளிலிருந்து அறியு மளவில் பழைய சுமேரியர் இந்தியாவிலுள்ள திராவிடமக்களை உடலமைப்பில் ஒத்திருந்தனர். அக்காலச் சுமேரியன் தமிழை அல்லது அது தொடர்பான மொழிகளை வழங்கும் இன்றைய ஒரு திராவிடனை மிக ஒத்திருந்தான். சுமேரியர் கடல் வழி யாலும் தரைவழியாலும் தைகிரஸ் யூபிராதஸ் பள்ளத் தாக்குகளை அடைந்த இந்திய மக்கள் என்பது இருக்கக் கூடாததன்று. இவர்களின் நாகரிகம் இந்தியாவிலே சிந்து நதிப் பள்ளத்தாக்குகளில் வளர்ச்சி யடைந்திருக்கலாமென்று யான் எண்ணுகின்றேன்.[1]

உலக மக்களின் பழைய வரலாற்று ஆராய்ச்சியாளர் உலகின் ஆங்காங்கு வதியும் மக்களின் உடற்கூறு, மொழி, வழிபாடு ஆதியன ஒத்திருத்தலைஇவ்வாறுஆங்காங்குக் காட்டி யிருக்கின்றனர். இவை மக்களின் ஒரு பொது உற்பத்தியை யும் சிறப்பாகத் தமிழரின் பழமையையும் நன்கு விளக்குவன. மக்கள் வளர்ச்சி நூலார் (anthropologists) ஓர் ஆதித் தாய் தந்தையரினின்றே உலகமக்கள் பெருகினர்கள் என வலி யுறுத்துவர்.

உலகிலே மிகப் பழைய மனித எலும்பு யாவா தேசத்திற் கிடைத்தது. இதன் காலம் ஐந்திலட்சம் ஆண்டுகள் எனப் படுகின்றது. ஆகவே விஞ்ஞானிகள், பூமியின் மத்தியிற் கிடந்த பெரிய கண்டத்திலேயே மக்கள் தோன்றிப் பெருகி னர்கள் எனத் துணிகின்றனர். அவ்வாறாயின்பெரியவெள்ளப் பெருக்கு, பூமத்தியில் விளங்கிய கண்டத்தில் நிகழ்ந்ததாக லாம் எனக் கூறுதல் பிழையாகாது. பெரிய கடல்கோளுக் குப் பின் சிறிய கடல்கோள்கள் பல நிகழ்ந்தனவாகலாம். பஃறுளி யாறு குமரிக்கோடு முதலியவைகளைக் கடல்

1. The Ancient History of the near East. p. 173 - H. R. Hall.

கொண்ட வரலாறுகள் இவ்வகையினவே. மத்திய இரேகையை அடுத்த நாடுகளில் அடிக்கடி எரிமலைக் குழப்பங்கள் நேர்தலும் அதனால் தரை கடலுள் மறைந்துபோதலும் இயல்பு. 1883-ல் * கறக்கற்றேவாவில் நேர்ந்த பெரிய எரிமலைக் குழப்பமே இதற்குச் சான்று.

## மக்களின் தொட்டில்

கீன் (Keane) என்னும் ஆசிரியர், மனிதகுடும்பத்தின் தொட்டில் மலாயஆசியா (யாவா மனிதன்) வாகவிருக்கலாம் என்றும் இங்கிருந்து மக்கள் வடக்கு ஆசியா மேற்கு ஆபிரிக்கா கிழக்கு மேற்கு ஓசேனிய உலகம் என்பவைகளுக்குச் சென்று பரவினார்களென்றும் அக்காலத்தில் தரைத் தொடர்பு இருந்ததென்றும் பிற்காலங்களில் நிலங்கள் கடலுள் மறைந்து சுருங்கிவிட்டனவென்றும் கூறுவர். 1

கீத் (Keith) என்னும் ஆசிரியர், பத்திலட்சம் ஆண்டுகளின் முன் தோன்றிய யாவா மனிதனினின்றும் வளர்ந்து திருந்தியவர்களே அவுஸ்திரோலிய மக்களென்றும் அக் கூட்டத்தினின்றும் பெருகியவர்களே உலகமக்களென்றும் மக்களின் உற்பத்தித் தானத்தைக் குறித்த தமது ஆராய்ச்சியிற் குறிப்பிட்டுள்ளார்.[2]

கிராம் வில்லியம் என்பார், இந்திய நாட்டிலே தொல்லுயிர்கள் வளர்ச்சியடைந்து பெருகின வென்றும் மனித

---

1 India and the Pacific World. P. 19. * Krakatoa.

2 After inspecting this evidence Keith wrote. 'It is hard to resist the notion that in course of about one million years the descendants of this ape browed Pithecanthropus had been converted into aborigines of the continent of Australia" - Out Posts of science P. 76. - Bernard Jaffee.

னும் அங்குத் தோன்றித் தத்தளித்து மேல்நோக்கி வந்திருத்தல் கூடும் என்றும் புகல்வர்.1

## தமிழ் மக்கள்

தமிழ் மக்கள் பிற நாடுகளிலிருந்து வந்து இந்தியாவிற் குடியேறினர்களா அல்லது, இந்தியாவின் பூர்வகுடிகளா என்பன வரலாற்றாசிரியர்களால் ஆராயப்பட்டுள்ளன. ஆதி மக்களின் கிளையினராய் அக்காலப்போக்குகளிலும் கொள்கையிலும் மாறுபடாதோராய்த் தொன்றுதொட்டு *இந்தியநாட்டில் வாழ்ந்துகொண்டிருப்போரே தமிழ்மக்களென்பது இற்றை ஞான்றை வரலாற்று ஆசிரியர் எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றது.

## இந்தியாவிற் கற்காலம்

உலகமக்கள் பழைய கற்காலத்திலிருந்து படிப்படியான முன்னேற்ற மடைந்திருக்கிறார்களென மக்கள் நூலார் கூறுகின்றனர். இந்திய நாட்டில் பழைய கற்காலம் முதல் உலோக காலம் வரையில் மக்கள் கையினாற் செய்து பயன்படுத்திய ஆயுதங்களும் மட்பாண்டங்களும் காணப்படுகின்றன.

நருமதைப் பள்ளத்தாக்கில் அடிஅழிந்தவிலங்கின்என்புகளோடு கண்டெடுக்கப்பட்ட பழைய கற்கால ஆயுதத்தின் காலம் 400,000 ஆண்டு வரையில் எனக் கருதப்படுகின்றது.2

---

1 India was an amazing breeding ground for the evolution of life forms. Man himself may have struggled upwards out of the anthropoid within the limits of India-The world we live in. Vol. 1. P. 104. Graeme wllliams. "But was Java therefore the region of the human origin; may this not more probably have occured in India where we know there were postanthropoid apes once existing that seem to have been the common stock from which gorilla chimpanzi and orang utan were derived" - Ibid. P. 134.

*சங்க நூல்களில் தமிழ்நாடு நாவலந்தீவு, நாவலந் தண் பொழில் என வழங்கப்பட்டுள்ளது.

2. J. C. Brown, quoted in stone age in India. P. T. S. Aiyengar.

டாக்டர். டி. தெரா (Dr. De. Terra) என்பவர் இந்திய மக்களின் பழைய கற்காலம் கி. மு. 30,000-க்கும் கி. மு. 20,000-க்கும் இடையில் எனக் கணக்கிட்டுள்ளார்.[1]

'விந்திய மலையில் பழைய கற்கால மக்கள் தீட்டிய சித்திரங்கள் காணப்படுகின்றன. அங்கு வேடர் ஈட்டிகளால் காண்டாமிருகத்தைத் தாக்கும் சித்திரம் ஒன்று காணப்படுகின்றது. அவ்வகையான காண்டாமிருகம் இப்பொழுது காணப்படவில்லை. காய்மூர் (Kaimur) மலையில் மானை வேட்டையாடும் சித்திரங்களும், கொஸ்லங்கபாத்தில் ஒட்டைச் சிங்கிகளின் சித்திரங்களும், சிங்கன்பூரில் கங்காரு மான் குதிரை முதலிய விலங்குகளின் சித்திரங்களும் காணப்படுகின்றன. இச் சித்திரங்கள் வரையப்பட்ட இடங்களில் புதிய கற்கால ஆயுதங்களும் கிடைத்தன. பழைய கற்காலத்தவர்கள் பிணங்களைக் காட்டில் எறிந்தார்கள்.

புதிய கற்கால மக்கள் பிணங்களைப் புதைத்தார்கள். புதிய கற்கால மக்களின் என்புகள் மிஸ்ரப்பூரில் (Mirzapur) மினுக்கமான மட்பாண்டங்களுடன் காணப்பட்டன. கோலாப்பூர் என்னும் இடத்தில் 54 புதிய கற்காலச் சமாதிகள் கண்டு பிடிக்கப்பட்டன. அவைகளுள் மட்பாண்டங்கள் காணப்பட்டன. பல்லாவரத்திற் காணப்பட்ட ஈமத்தாழிகளைப் போலச் செங்கற்பட்டு நெல்லூர் ஆற்காடு முதலிய இடங்களிற் காணப்பட்டன. பலவகைக் கற்சமாதிகள் சென்னை பம்பாய் மைசூர் நிசாம் இராச்சியங்களிற் காணப்பட்டன. இவைகளுள் இரும்பு ஆயுதங்களுங்

1. Dr. De'Jerra......tries to fix an approximate date of the early 'Indian Palaeolithic culture' assigning to Java man and to Pekin man 500,000 to 400,000 B. C. He places the Indian early palaeolithic culture in the second interglacial (300,000 - 200,000 B C) and Solo man in Circa 100,000 B C - India and the Pacific world, P. 280.

கிடைத்தன. அக்காலத்திற் பிணங்களைச் சுடுதலும் உண்டு. தாழிகளில் சாம்பர் காணப்படவில்லை; உடலை வெட்டிச் சில துண்டுகள் தாழியில் இடப்பட்ட புதிய கற்காலத்தில் ஈமத்தாழிகள் பயன்படுத்தப் பட்டன. ஆதிச்சநெல்லூரில் 114 'ஏக்கர்' நிலத்தில் 1,000 தாழிகள் கிளறி எடுக்கப்பட்டன. ஆதிச்சநெல்லூர் திருநெல்வேலி மாகாணத்தில் தாமிரபரணி ஆற்றோரத்திலுள்ளது. சில உலோகப் பொருள்கள் இல்லாவிடில் அவை புதிய கற்காலத்தனவாகலாம். அவைகளுள் இரும்பாயுதங்களும் வெண்கல ஆபரணங்களும் காணப்பட்டன.

பிராமணபாத்து சிந்து முதலிய இடங்களிலும் தாழிப் புதையல்கள் காணப்படுகின்றன.

தக்கணத்திலும் தென்னிந்தியாவிலும் பழையகற்காலப் பொருள்கள் அதிகம் காணப்படுகின்றன. அவை பூகோளக் குறுக்குஇரேகைக்கு இருபத்தைந்துபாகையின்கீழ்க் கிடைக்கின்றன. அக்கால மக்கள் ஒரு வகை வெள்ளைக்கல்லால் (quartzite) ஆயுதஞ் செய்தார்கள். இவ்வகை ஆயுதங்கள் குண்டூர் கடப்பா என்னுமிடங்களில் அதிகம் காணப்பட்டன. இன்னும் பல இடங்களிலும் பழைய கற்கால ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டன. இப்பொழுது அடி அழிந்து போன காண்டாமிருக எலும்போடு 'குவாட்செட்' (quartzite) கல்லாற் செய்யப்பட்ட ஆயுதமொன்று கண்டெடுக்கப்பட்டது. மிர்சாப்பூரில் புதிய கற்கால ஆயுதங்கள் பல கிடைத்தன. கங்கைப் பள்ளத்தாக்கில் குன்சிப்பூர் மாகாணத்தில் மீன் முள்ளாற் செய்த தூண்டிலொன்று ஆறிடு மணல்மேட்டில் அகழ்ந்து எடுக்கப்பட்டது.

பழைய கற்கால மக்கள் கடப்பா சென்னைக் கரைகளில் மாத்திரம் வாழ்ந்தார்கள். புதிய கற்காலத்தில் அவர்கள்

இந்தியா முழுமையிலும் பரந்து வாழ ஆரம்பித்தார்கள். அவர்களுடைய ஆயுதங்கள் சிறிய தீத்தட்டிக் கற்கள். அவை அரை அங்குலம் முதல் ஒன்று அல்லது ஒன்றரை அங்குல நீளம் வரையில் உள்ளன. அம்புத்தலை, வில்லுப் பிறை, இவை இரண்டும் கலந்த வடிவமுள்ள கல்லாயுதங்கள் பிடியில் இறுக்கிப் பயன்படுத்தப்பட்டன. இவை அதிகமாக விந்தியமலை பாகெல் கண்ட் (Baghel Kand) றேவா (Rewah,) மிர்சாப்பூர் மலைத் தாழ்வாரங்களிற் காணப்படுகின்றன. மக்கள் வாழ்ந்த ஒதுக்கிடங்களில் அடுப்பு கரி எலும்புகள் மட்பாண்டங்கள் காணப்படுகின்றன. உளி போன்ற ஒருவகை ஆயுதங்கள் சூடியநாகபுரி அசாம் பர்மா இந்துசினம் மலாயா முதலிய இடங்களிற் காணப்பட்டன. பழைய கற்கால ஆயுதங்கள் செய்யப்பட்ட இடங்கள் தென்னிந்தியாவிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. ஆயுதங்கள் பாறைகளில் திட்டிக்கூராக்கப்பட்டன. 10, அல்லது 14 அங்குலம் நீளமுள்ள குடையப்பட்ட பொருள்கள் காணப்பட்டன. இவைகளோடு உயர்தர மட்பாண்ட உடைவுகளும் செங்கற்களும் காணப்பட்டன. இந்தியாவிலே கற்சமாதிகளில் கோப்பை அடையாளங்கள் காணப்படுகின்றன.

## வெண்கலக் காலம்

தென்னிந்தியாவில் கற்காலத்தை அடுத்து வெண்கலக் காலமும் இரும்புக் காலமும் இருந்தன. தகரத்தையும் செம்பையுங் கலந்து வெண்கலஞ் செய்யப்பட்டது. தென்னிந்திய சமாதிகளில் அழகிய வெண்கலப் பொருள்கள் காணப்பட்டன. மிக முக்கியமான செம்புப் பொருள்கள் மத்திய இந்தியாவில் கங்கேரியா (Gungeria) என்னுமிடத்திற் காணப்பட்டன. இங்கு 424 செம்பு ஆயுதங்கள் கண்

டெடுக்கப்பட்டன. இவை கி. மு. 2000 வரையில் பயன் படுத்தப்பட்டனவாகலாம் எனக் கருதப்படுகின்றன. அங்கு 102 வெள்ளித் தகடுகளும் காணப்பட்டன. அவைகளில் சில வட்டவடிவாயுள்ளன. சில தகடுகளின்மீது கொம்புள்ள மாட்டுத் தலைகள் வரையப்பட்டிருந்தன. வெள்ளி இந்தியாவில் அதிகம் கிடையாமையால் அது பிற நாடுகளிலிருந்து வந்திருக்கலாம். செம்பு இந்தியாவிற் கிடைக்கக் கூடியது. இவையல்லாமல், செம்பினுற் செய்யப்பட்ட உளி, எறிஉளி வாள் ஈட்டித்தலை முதலியனவும் கிடைத்தன. இவை கோன்பூர் வாதெல்கார் (Fatelgarh) மணிபுரி முத்தா என்னுமிடங்களிலும் வட இந்தியா முழுமையிலும் காணப்பட்டன.

## தெற்கில் வாழ்ந்த மக்களே வடக்கிற் சென்று குடியேறினர்

ஆராய்ச்சியாளர், தென்னிந்தியாவில் வாழ்ந்துகொண்டிருந்த பழைய கற்காலமக்களே மத்திய இந்தியா கங்கை யமுனை வெளிகள் வடமேற்கு இந்தியாமுதல் இமயமலை வரையில் சென்று குடியேறினுர்கள் எனக் கூறுகின்றனர். கி. மு. 4000 வரையில் இந்தியா முதல் பரசிகம் எகிப்து கிரேத்தா சைபிரஸ் வரையில் ஒரே இனமக்கள் வாழ்ந்தார்கள். 1

---

1. The earliest stone age culture of India is represented by the hand axe technique of Madras, and the old stone age people may have migrated from South India into Central India where in the Narbada valley, have been found middle pleistocene tools and a fauna gradually extended through the Ganges and Jamuna valleys to north western India right up to Himalayan Hills - India and the Pacific World P. 279.

## அரப்பா, மகஞ்சோதரோ

அரப்பா மகஞ்சோதரோ காலம் இந்தியாவின் வெண் கல கால நாகரிகத்தை வெளியிடுகின்றது. இந் நகரங்களின் நாகரிகம் கி. மு. 3500 வரையில் என்று கருதப்படுகின்றது. நாகரிகம் வளர்வதற்கு இனி இடம் இல்லை என்னும்படி அக்கால நாகரிகம் உயர்நிலை அடைந்திருந்தது. நகரங்கள் நன்ருக அமைக்கப்பட்டிருக்கின்றன. மாடியுடைய வீடுகள் கிணறுகளோடு கூடியனவாகவும், நீர் ஓடும் கால்கள் உடையனவாகவும் வீதிகளின் இரு மருங்குகளிலும் கட்டப்பட்டிருந்தன. மக்கள் பயிர்ச்செய்கை வியாபாரம் என்பவைகளால் பொருளீட்டினர். வியாபாரம் மெசபெதேமியா வரையில் நடைபெற்றது. யானை ஒட்டகம் நாய் ஆடு மாடு முதலிய மிருகங்கள் வளர்க்கப்பட்டன. வில்லு அம்புகள் செம்பினுலும் வெண்கலத்தினுலும் செய்த கோடரிகள், ஈட்டிகள், மழிக்குங்கத்திகள், கத்திகள் முதலியன பயன்படுத்தப்பட்டன. பொன் வெள்ளி செம்பு வெண்கலம் யானைத்தந்தம் கண்ணுடி ஓடுகள் முதலியவைகளால் ஆபரணங்கள் செய்யப்பட்டன. பஞ்சினுல் ஆடை நெய்யப்பட்டது. மட்பாண்டங்கள் அழகாகவும் நிறங்கொடுத்தும் வனையப்பட்டன. சித்திர எழுத்துப் போன்ற ஒருவகை எழுத்து முத்திரைகளிற் காணப்படுகின்றது. தாய்க்கடவுள், சூரியன், பசுபதி, இடபம், மரம் முதலியன வணங்கப்பட்டன.

## ஆரியர் வருகை

தெற்கு இந்தியாவிலேமேற்கில் தான்யூப் நதிக்கும் கிழக்கில் காஸ்பியன் கடலுக்கு மிடையே வாழ்ந்த வெண்ணிற மக்கள் ஆரியர் எனப்படுவர். இவர்கள் மந்தை மேய்க்கும் வாழ்க்கைப்படியை அடைந்திருந்தனர். இவர்கள் தமது

மந்தைகளுடனும் பெண்டு பிள்ளைகளுடனும் கூடாரங் களைப் பெயர்த்துக் கொண்டு இடமிடமாகத் திரிவர். இவ்வாறு திரியும் மார்க்கத்தில் இவர்களின் ஒரு பிரி வினர் கைபர் கணவாய் வழியாக இந்தியாவை அடைந் தனர். இது கி. மு. 2000 வரையில் என்று சொல் லப்படுகின்றது. இவர்கள் இந்தியாவின் வடமேற்கு மூலை களில் தங்கிச் சிறிது சிறிதாக ஏழு நதிகள் பாய்கின்ற பஞ்சாப் தேசம் முழுவதையும் கைப்பற்றினர். ஆரியர் வருங் கால் அங்கு உன்னத நாகரிகத்தினராய் வாழ்ந்துகொண் டிருந்த தமிழ் மக்களைப்பற்றி ஆரியமக்கள் தங் கடவுளரை வழுத்திப் பாடிய பாடல்களில் காணப்படுகின்றது. முற் காலங்களில் சீர்திருத்தமுள்ள சாதியினரை முரட்டுச் சாதி யினர் படையெடுத்து வென்றார்கள். இது கிரேக்கரை உரோ மர் வென்றதும், கன்ஸ் (Huns) என்னும் முரட்டுச் சாதி யினர் ஆசியா ஐரோப்பா முதலிய நாடுகளைக் கலங்கச் செய் ததும் போன்ற நிகழ்ச்சிகளினால் நன்கு அறியலாகும்.

ஆரிய மக்கள் தம்மை எதிர்த்த தமிழரை அசுரர் தைத்தியர், தாசர், நாகர் என வழங்கினர். வேத பாடல் களால் தாசுக்களைப் பற்றி அறியக்கிடப்பன வருமாறு.

தாசுக்கள் நகரங்களில் வாழ்ந்தனர். அந்நகரங்களில் அரசர் வாழ்ந்தனர். அவர்களிடத்தில் திரண்டசெல்வம் இருந் தது. அச்செல்வம் பசு தேர் குதிரை முதலியன. இவை நூறு கதவுகளுள்ள கோட்டைகளுள் வைத்துக் காக்கப்பட்டன. தாசுக்கள் மைதானங்களிலும் மலைகளிலும் சொத்துக்களை வைத்திருந்தசெல்வப்பெருமக்கள். அவர்கள்பொன்னாபரணங் களை அணிந்தார்கள். தாசுக்கள் பொன் வெள்ளி இரும்புக் கோட்டைகளில் வாழ்ந்தனர். இந்திரன் தன்னை வணங்கும் தேவோ தாசர்களின் பொருட்டு நூறு கற்கோட்டைகளி

யிருந்த தாசர்களை வெற்றிகொண்டான். தாசுக்கள் ஆரியரின் கடவுளர்களை ஏற்றுக்கொள்ளவில்லை. அவர்கள் மிகச் சீர்திருத்தம் பெற்று விளங்கினர்கள். கிருட்டிணன் என்னும் தாசன் தன் பதினயிரம் வீரர்களுடன் இந்திரனை எதிர்த்தான். தாசுக்களில் பாணியர் என்னும் ஒரு பிரிவினர் இருந்தனர். அவர்கள் கடல்வழியாகவும் தரைவழியாகவும் வியாபாரஞ் செய்த தமிழ்நாட்டு வணிகர்.

கி. மு. 2000க்கும் கி. மு. 1400க்கு மிடையில் ஆரிய மக்கள் பஞ்சாப் முழுமையும் கைப்பற்றினர். இந்தியாவை அடைந்த ஆரிய மக்களைவிட அங்கு வாழ்ந்த திராவிட மக்கள் கூடிய தொகையினரா யிருந்தனர். ஆரியமக்களுக்கும் தமிழ் மக்களுக்கு மிடையில் விவாகக் கலப்புகள் நேர்ந்தன. வேதபாடல்களைச் செய்த முனிவர்கள் பலர்—வசிட்டர், அகத்தியர், விசுவாமித்திரர் முதலியோர்—தமிழ் மரபினர் என அவர்கள் நிறம்பற்றித் தெரியவருகின்றது. வருணன் என்னும் கடவுளே அசுரன் எனப்படுகின்றார். 1

பி. தி. சினிவாச ஐயங்கார் 'மந்திர காலத்தில் இந்திய மக்களின் வாழ்க்கை' என்னும் நூலில் கூறியிருப்பது வருமாறு:

---

1. God varuna was himself an Asura. Mr. Benerji believes that the Asuras were different from Dasus but identical with Dravidians. The Dasus he points out were black, while the Asuras were brown or Rather golden. This Synthesis he points out in the adoption of the cult of Siva which was the Asura Cult; as a part of Vedic system of worship Varuna and other Asura gods were incorporated into the Vedic Pantheon. The gods of the Asuras and the gods of the Irtsus become one. A social amulgamation came into existence with fruitful results. The Asuras and the Devas were made sons of the same father god. Many Vedic Kings and Rishis came to have Asura Blood in them as is indicated by the colour. Sages like Vasishta, Agastya and Visvamitra were given the same father Mitra—Varuna. Asura in Aryan means supreme god.- Pre-musalman India...P P 172, 174, 177...V. Rangacharya M.A.

படை எடுத்து வந்த ஒரு சிறு கூட்டத்தினரால் பெரிய சாதிமாற்றம் ஏற்பட்டிருக்க இடமில்லை. திராவிட மொழியைப் பேசிய மக்கள் வேண்டியவளவு சீர்திருத்தமுள்ளவர்களாகவும் புதியவர்களை விழுங்கிவிடக்கூடிய தொகையினராகவும் இருந்தனர். இவர்கள் தமது தொழில் வளர்ச்சிகளுக்கேற்பச் செழிப்படைந்து கிடந்த தம் சொற்களை அவர்களுக்கு உதவினார்கள்.[1]

சிலாற்றர் என்னும் ஆசிரியர், மொழியளவில் தமிழர்கள் எவ்வளவுக்கு ஆரியர்களானார்களோ அவ்வளவுக்கு ஆரியர் கொள்கையில் தமிழர்களானார்கள், எனக் கூறியுள்ளார். இந்திய மக்களின் அரசியல் வாழ்க்கை வரலாறுகள் ஒரே வகையாகக் காணப்படுகின்றன.

## வேள்விகள்

பழைய உலகமக்கள் எல்லோரும் உயிர்ப்பலியிட்டுக் கடவுளரை வழிபட்டனர்.[2] ஆரியமக்கள் அலைந்துதிரியும் வாழ்க்கைப்படியில் இருந்தமையின் அவர்கள் தங் கடவுளருக்கு நிலையான கோயில்கள் அமைத்துப் பலியிட்டு வழிபடவில்லை. சென்ற சென்ற இடங்களில் கடவுளைக் குறித்துப் பலியிட்டனர். இதுவே மற்றைய மக்களின் வேள்விகளுக்கும் ஆரியமக்களின் வேள்விகளுக்கும் வேற்றுமை. பிற்

1. Life in ancient India P 16. P. T. S. Iyengar.

2. உயிர்ப்பலி யிடும் வழக்கம் பிற்காலத்தில் காய் கனிகளையும் பிற உணவுகளையும் படைக்கும் வழக்கமாக மாறிற்று. உயிர்ப்பலிக்குப் பதில் இன்றும் பூசணிக்காய்களை வெட்டிக் குங்குமம் நடுவே பூசப்படுகின்றது. பலியிட்ட மிருகங்களைத் தீயில் இட்டுப் பொரித்து உண்பதற்குப் பதில், பிற்காலத்தில் உணவு ஓமத்தில் இடப்படுகின்றது. ஓமத்தீயில் உணவை இடுவதற்குப் பதிலாக மேற்கு ஆசிய நாடுகளில் தூபம் காட்டப்பட்டதென வரலாற்று நூலார் கூறுகின்றனர்.

கால மக்கள், வேள்விகள் அல்லது யாகங்கள் எனப்படுவன ஆரிய மக்களுக்கு மாத்திரம் உரியனவென்று தடுமாறுவா ராயினர். ஆரியர் பெரிய இராச்சியங்களைக் கோலிய பின் இவ் வேள்விகள் மிகவும் ஆடம்பரமாக நடத்தப்பட்டன. அக்காலங்களில் வேள்விகள் புரியும் கிரியை முறைகள் (பிரா மணங்கள்) வரையப்பட்டன. இக் கிரியை முறைகளைப் பயின்று அவற்றில் வல்லுநரானோர் பிராமணர் எனப்பட்ட னர். பிற்காலங்களில் இப் பெயர், கோயிற் குருக்கள் புரோகி தரையும் குறிக்க வழங்குவதாயிற்று. இதனால் பிராமணர் என்போர் ஆரியமக்கள் என்னும் எண்ணம் பலர் கருத்தில் பதிந்துள்ளது. இன்று தென்னாட்டிற் காணும் கோயிற் குருக்களும் புரோகிதரும் முற்காலத்தில் எகிப்திய பாபிலோ னிய நாடுகளிற் காணப்பட்ட குருமார் போன்றவர்களே.

## பிராமண காலம்

கி. மு. 1400-க்குப்பின் ஆரியர் (கலப்பு ஆரியர்) கிழக்கு நோக்கிச் சென்று அங்குள்ள தமிழர் இராச்சியங் களை வெற்றி கொண்டனர். அக்காலங்களில் அவர்கள் யாகங்களை ஆடம்பரமாகச் செய்ய ஆரம்பித்தனர். அதன் பொருட்டு யாகக்கிரியை முறைகள் எழுதப்பட்டன.[1]

---

1. சற்லி ஆற்றைக் கடக்க முன் உள்ள சமயக்கொள்கைகளில் இந்திய பூர்வ மக்களுக்கு ஆரியர் கடமைப்படவில்லை என்பது உண் மையே. சற்லி ஆற்றைக் கடந்தபின் எழுதப்பட்ட சம்கிதைகளையும் பிராமணங்களையும் பற்றி அவ்வாறு கூறுதல் இயலாது.—சி. ஆர். ஹன்ரர்—New Review—1936.

சனகன் யாக்ஞவல்கியரையும் அவருடன் நின்ற பிராமணரையும் நோக்கி 'நீங்கள் அக்கினிகோத்திரம் எப்படிச் செய்கிறீர்கள்' என்று கேட்டபோது அவர்கள் தகுந்த பதில்அளிக்கவில்லை. ஆகவே தீயில் பலியிடுதல் (ஓமம்) முதலியன தமிழரின் கிரியை முறையேயென்று

கங்கை ஆற்று வெளிகளிலுள்ள மக்களும் ஆரிய மக்களும் விவாகக் கலப்பால் ஒற்றுமையடைந்து வலுவடைந்தனர். பிராமணங்களுக்குப்பின் ஆரணியகங்கள் எழுதப்பட்டன. ஆரணியகங்கள் என்பன காட்டில் வாசஞ் செய்யும்போது படித்தற்குரிய பாடல்கள். வேதபாடல்கள் செய்யப்படுகின்ற காலத்தில் காட்டிற்போய்த் தவஞ்செய்யும் வழக்குக் கூறப் படவில்லை என்றும், இவ்வழக்குப் பூர்வகுடிகளின் முறை யைப் பின்பற்றி ஆரிய மக்களாற் கைக்கொள்ளப்பட்டன வென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்.*

## பாரதம்

ஆரியர் கங்கைச் சமவெளிகளில் இராச்சியங்களைத் தாபித்த காலத்திலேயே பாரதப்போர் நிகழ்ந்தது. இது கி.மு. 1300 வரையில் நிகழ்ந்ததெனப் பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. பாரதப் போரில் கலந்துகொண்ட வர்கள் தமிழர்களே. புறநானூற்றில் தருமனைப் புகழ்ந்து பாடிய பாடல் ஒன்று காணப்படுகின்றது. வியாசர், அருச் சுனன், துரௌபதி, கிருட்டிணன் முதலானோர் கரிய நிற முடையவர்களாகக் கூறப்படுகின்றனர். சில பெண்கள்

---

கருத இடமுண்டு. இன்று ஆலயங்களில் நடக்கும் கிரியைகளை ஒத்த பழைய தமிழர்களின் கிரியைமுறைகளைப் பின்பற்றியே பிராமணங்கள் செய்யப்பட்டிருத்தலும் கூடும். பிராமணங்கள் கி. மு. 800-க்குச் சிறிது முன் செய்யப்பட்டன வென்றும் ஆகவே மிகப் பழைய வேத பாடங்கள் கி. மு. 1200க்கு முன் தோன்றியிருக்க முடியாதென்றும் பனேஜி என்பார் கூறுவர்.—வரலாற்றுக்கு முற்பட்ட பழைய இந்து இந்தியா. பக்கம். 44.

* யாகங்களில் பாடல்கள் பாடுவதும் இவ்வகையினதே.

பொன்னிற முடையவர்களாகச் சொல்லப்படுகின்றனர். [1] வெண்ணிறமுடையவராக யாரும் கூறப்படவில்லை. [2]

பாரதம் காலத்துக்குக்காலம் எழுதிச் சேர்க்கப்பட்ட பல பாடல்களுடையது. இது யவனர் பல்லவர்களைப்பற்றியும் கூறுகின்றது. அலக்சாந்தரின் படையெடுப்புக்குப் பின்னரே இந்தியர் யவனரைப்பற்றி அறிந்தார்கள். இதில் கி. பி. 4-ம் நூற்றாண்டு வரையில் சேர்க்கப்பட்ட பாடல்கள் உண்டு என்பது வரலாற்று ஆசிரியர்களது கூற்று.

## இராமாயணம்

ஆரியர் கங்கைச் சமவெளிகளை அடைந்தபின்பு நிகழ்ந்ததாகக் கூறப்படும் வரலாறே இராமாயணம். [3] இது

---

1. Krishna represented in the Maha-Bharata as black and so is Arjuna - so also is Vyasa who has related the story. And so is Draupathi the wife of the Pandavas. 'Here is then Draupathi approaching......with eyes like a lotus petal and with a lusterous da k complexion resembling the colour of a black lotus. By her side is Subathirai who is fair as gold. Here is another wife of Arjuna being the daughter of Naga king fair as pure as gold. Here is also Chitrangada daughter of the Pandya king whose complexion is like the colour of a madhuka flower. Here is the chief wife of Bhima.........with complexion as dark as a garland of blue lotus. By her side is the wife of Nagula dark as a blue lotus' (Asramavasi Parva)—Epic India - C. V. Vaidya, M.A., LL.B.

2. பலதேவன் ஓர் புறனடை.

மகா பத்மநந்தனுக்கு 1050 ஆண்டுகளின் முன் குரு வமிசத்தினுள்ள பரிச்சித்து பிறந்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. சந்திரகுப்தன் ஆளுகை தொடங்குவதற்கு நாற்பது ஆண்டுகளின் முன் மகா பத்மநந்தனின் ஆட்சி ஆரம்பித்ததென வாயுபுராணங் கூறுகின்றது. சந்திரகுப்தன் கி. மு. 322-ல் ஆட்சி ஆரம்பித்தானெனக் கொண்டால் பரிச்சித்து கி.மு. 1412-ல் இருந்தவனாவன்—வரலாற்றுக்கு முற்பட்ட பழைய இந்து இந்தியா—ஆர். தி. பனேஜி.

3. இராசாவலி என்னும் இலங்கைப் புத்த நூல் புத்தர் காலத்துக்கு 1844 ஆண்டுகளின் முன் (கி. மு. 2370) இராமாயண நிகழ்ச்சி நடைபெற்றதெனக் கூறும்.

கி. மு. ஆரும் நூற்ருண்டு வரையில் விளங்கிய வான்மீகராற் செய்யப்பட்டதெனக் கருதப்படுகின்றது. இராமாயணக் கதை[1] சாதகக் கதைகளில் வேறு வகையாகக் கூறப்பட்டுள்ளது. வான்மீகி இராமாயணத்தில் இராமர் இராமேசுவரத்தில் இலிங்கம் வைத்துப் பூசித்த வரலாறு காணப்படவில்லை. இராமர் கரிய நிறத்தினராகக் கூறப்படுகின்ருர். தென்ஞட்டு வரலாருென்றினை எடுத்துச் சோடித்து வான்மீகர் இராமாயணமாக எழுதினரோ என்று சிலர் கருதுகின்றனர். சீதையின் பிதாவாகக் கூறப்படும் சனகன் கி. மு. 1000 வரையில் விளங்கினன். இச் சனகனே யாக்ஞவல்கியருக்கு உண்மை ஞானத்தை உபதேசித்தவன். இவன் அக்காலத்தில் கல்வியிற் சிறந்து விளங்கினன். இந்நூலில் பல காலங்களிற் பாடிய பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. வான்மீகி இராமாயணத்தில் இராமர் விஷ்ணுவின் அவதாரமாகக் கொள்ளப்பட்டிலர்.

## உபநிடத காலம்

ஆரிய மக்களின் வழிபாடு கடவுளுக்கு ஒன்றைக் கொடுத்துத் தமக்கு வேண்டிய ஒன்றைப் பெறும் கொள்கை

---

1 சாதகக் கதைகளில் இராவணன் சீதையைக் கவர்ந்ததும் இராம ராவண யுத்தம் நிகழ்ந்ததுமாகிய வரலாறுகள் காணப்படாமையின் இராமரைப்பற்றியும் இராவணனைப்பற்றியும் அந்நாட்களில் தனித்தனி வழங்கிய கதைகளை வான்மீகர் இணைத்து இராமாயணமென்னும் ஒரு புதிய கதையைச் செய்தார் என்று சிலர் கருதுவர். பாணினியும் பதஞ்சலியும் வாசுதேவன் அருச்சுனன் உதிட்டிரன் முதலியோர் பெயர்களைத் தம் நூல்களில் எடுத்தாண்டிருப்பதுபோல இராமருடைய பெயரை எடுத்தாளவில்லை. பிற்காலத்து எழுதப்பட்ட அமரசிம்ஹத்திலும் விஷ்ணுவின் பெயர்களுள் இராமரின் பெயர் கூறப்படவில்லை."—Early History of the Dekkan R. G. Bhandakar. P. 17.

யளவில் இருந்தது. அவர்கள் உலகம் உயிர் கடவுள் என்னும் முப்பொருள் உண்மைகளைப்பற்றிஅறியாதிருந்தனர். 1 மறு பிறப்பைப் பற்றி அவர்கள் வேதங்களிற் கூறப்படவில்லை. இறந்தபின் உயிர்கள் நேரே கூற்றுவனுலகுக்குச் சென்று அங்கு நெடுக வாழ்ந்திருக்கும் என அவர்கள் நம்பினர் கள்.1 ஆரியர் இந்திய நாட்டை அடைவதன் முன்னரே தமிழ் மக்கள் முப்பொருள் உண்மைகளை நன்கு ஆராய்ந்து அறிந்திருந்தார்கள். அவ்வுண்மை ஞானங்களின் வெளி யீடாகிய உபநிடதங்களே தமிழர்களது ஞானமாகும். இதனை ஆராய்ச்சியாளர் எல்லோரும் எற்றுக்கொள்ளு கின்றனர்.

"உபநிடதங்களில் சிறப்பித்துச் சொல்லப்படும் யாக்ஞ வல்கியர் இந்தியாவின் கிழக்குப் பாகங்களில் வாழ்ந்தவராக லாம். இவர் எழுதியுள்ள நூல்கள் குரு பாஞ்சாலம் கோசலம் விதேகம் என்னும் இடங்களைப்பற்றிக் கூறுகின் றன. யாக்ஞவல்கியர் வாழ்ந்த இடம் அக்காலத்தில் கல்வித் துறையில் உயர்ந்து விளங்கிற்று. அறிவுப் பொருளைத் தேடி அங்குப் பலர் வந்தார்கள். யாக்ஞவல்கியர் கல்வி கற்ற பின் உண்மை ஞானத்தைத் தேடி இடங்கள்தோறும் அலைந்து திரிந்தார். இவர்களுடன்கூடத் திரிந்தவர்கள்

---

1. Pratically no traces of it (Rebirth) are to be found in the Vedas or in the poems of Homer. The Vedic hero like the Homeric hero goes to dwell in the Elysium of Yama, the proto-man, and returns no more to earth. - India and western world - H. G. RAWLINSON.

The doctrine of Transmigration is entirely absent from the Vedas and early Brahmanas. It seems probable that the Indian Aryas borrowed the idea from the aboriginies. - Cambridge History of India Vol. I. P. 108 - P. of-Macdonald. No trace of the doctrine of Transmigration is found in the Rig Veda and yet no other doctrine is so peculiarly Indian. It may have had its origin in non-aryan animism quite early - Origin and development of Bengali Vol. I P. 42 S. K. Chatterge.

சுவேதகேது அருணேயன் சோமசுஸ்ம சத்தியஞானி என்போர். இவர்கள் கல்வியிற் சிறந்த சனகன் என்னும் விதேக நாட்டு அரசனைக் கண்டார்கள். அவன் வினவிய கேள்விகளுக்கு யாக்ஞவல்கியர் ஏற்ற விடை அளித்தார். சனகன் அவருக்கு நூறு பசுக்களைத் தானம் வழங்கினன். சனகன், தேரில் ஏறிச் செல்வதன்முன் தனக்கும் அவர்களுக்கும் உண்மைஞான அறிவில் எவ்வளவு வேறுபாடு இருக்கிறதென்பதை விளக்கினன். இது பிராமணர்களாகிய அவர்களுக்கு அவமானமாக விருந்தது. யாக்ஞவல்கியர் சனகனுடன் சென்று அவனிடம் அரிய ஞானங்களைப் பயின்றார். அவர் காலத்தில் அவரே பெரிய ஞானியாக விளங்கினர். யாக்ஞவல்கி செய்த [1] உபநிடதமே ஞானநூல்களுட் சிறந்தது. யாக்ஞவல்கியர் காலத்தில் பிராமணர் சத்திரியரிடத்தில் மாணக்கராக அமர்ந்து ஞானம் கற்றனர். சனகனைப்

1. உபநிடதம் என்பதற்குக் கிட்ட இருப்பது என்பது பொருள். இஞ் ஞானங்கள் குரு சீட பரம்பரை முறையில் எழுதாக் கிளவியாக வந்தன. இவைகளே தமிழர்களது மறை. அவை நூல்களல்ல. இறைவன் கல்லாலின்கீழ் தக்கணமூர்த்தியாக விருந்து வேதப்பொருளை சனகாதி நால்வருக்கு உபதேசித்தார் எனவரும் ஐதீகமும் இவ்வகையினதே. இவை மறைத்துக் கூறப்படுதலின் மறை, வேதம் என்னும் பெயர்கள் பெற்றன. வேதம் என்பது மூடு என்னும் பொருள் தரும் வே என்னும் அடியாகப்பிறந்தது. ஆரிய வேதங்கள் இவ்வாறு மறைத்துக் கூறப்படுவனவல்ல. தமிழர்களின் மறை (இரகசியம்) க்கு வழங்கிய பெயர்களைப் பிற்கால ஆரியர் தமது பாடல்களுக்கு இட்டு வழங்குவாராயினர். எழுதாக் கிளவி, வேதம், மறை முதலிய சொல்லொற்றுமை பற்றிப் பிற்காலத்துப் பெரும் மயக்கம் நேர்ந்தது.

The upanishads are philosophical doctrines which were to be kept very secret and to be imparted to students in secrecy - Pre-Historic ancient India P-42. - R. D. Banerji.

போலவே காசி அரசனான அசந்தகேது, வைவாலி அரசன் பிரவாகனன் முதலியோர் விளங்கினர்கள்.[1] யாக்ஞ வல்கி யர் காலம் கி. மு. 1000 வரையில் எனப்படுகின்றது. கி. மு. 1000 வரையில் விந்தமலைக்கு வடக்கே தமிழ்மொழி வேறு மொழிகளாகத் திரிந்து வழங்கிற்று.[2] ஆகவே அக்காலம் தமிழ் உலகத்தின் வடக்கெல்லை விந்திய மலையாயிருந்தது. விந்திய மலைக்கு வடக்கு ஆரியவர்த்த மெனப்பட்டது.

## பேச்சு வேறுபடுவதன் காரணம்

வீட்டிற் பேசுவதுபோல நாம் சபைகளிற் பேசுவ தில்லை. இவ்வகையான பேச்சுகளும் ஒரு கூட்டத்தினரின் பேச்சை உண்டாக்கும் (மாக்ஸ்மூலர்). வேற்றுமொழிச் சொற் கள் வந்து ஒரு மொழியுடன் கலப்பதாலும் இரு வேறு மொழிக் குரியவர்களுக்கிடையில் விவாகக்கலப்பு உண்டாகிச் சந்ததி பெருகுவதாலும் மொழிகள் மாறுபடும்.

மொழிகளை இலக்கண அமைப்புக்கொண்டு அறிய லாம். மொழிகள் மாறிவிடினும் இலக்கணம் இலகுவில் மாறுபடாது. இலக்கணம் ஆற்றின் இருமருங்குமுள்ள அணையும், சொற்கள் அவைகளினிடையே ஓடும் நீரும்

1. Man and thought in ancient India Raddakumud-Mookerji pp. 6, 7, 24.

2. And this will confirm the conclusion that the Dravidian tongue prevailed in North India before the Aryans came and occupied it. The same conclusion is forced upon us by an examination of the vernaculars of North India......that even the vernacular, Bangalee which bristles with sanskrit and derivative words, is indebted to Dravidian languages for pretty large portion of the vocoblory and structural peculiarities. What is strange in even in Hindi speech Dravidian words can be traced. No reasonable doubt can therefore be entertained as to the Dravidian speech once being spoken in north India. - Lecture on the Ancient History of India. - D. R. Bandarkar.

போன்றன. தமிழின் வழிமொழிகள் தமிழைச் சேர்ந்தன என்று காட்டுவதற்கு அம்மொழிகளில் வழங்கும் சொற்களை விட இலக்கணம் உதவி புரிகின்றது. ஒரு மொழியைத் தாங்கி நிற்பது இலக்கணம்.

இப்பொழுது வழங்கும் வட இந்திய மொழிகள் அமைப்பில் தமிழை ஒத்துள்ளன என்று மொழியாராய்ச்சி யாளர் நுவல்கின்றனர். ஆகவே அக்காலத்தில், வட மொழி இக்காலம் எவ்வாறு வழக்கிலிருக்கின்றதோ அவ் வாறு இலக்கிய மொழியாக வழக்கிலிருந் திருத்தல் வேண் டும்; பேச்சுமொழி வேறாக இருந்திருக்க வேண்டுமென யூகிக்க வேண்டியிருக்கின்றது.

## பிராகிருதம் தமிழ் மயமாக்கப்பட்டது

ஆரியர் இந்தியாவை அடைந்த காலத்தில் அவர்கள் வழங்கிய மொழி பிராகிருதம் எனப்படும். பிராகிருதத்துக்கு இலக்கண வரம்பு இல்லை. இம் மொழியிலேயே வேதபாடல் கள் செய்யப்பட்டிருக்கின்றன.

"வேதபாடல் செய்யப்படுகின்ற காலத்தில் அங்கு எல் லோராலும் வழங்கப்பட்ட ஒரு வீறுடைய மொழி இருந்திருத் தல் வேண்டும். அம் மொழி பிராகிருதத்தினின்றும் உச் சரிப்பு முறையில் வேறுபட்டது. வேதபாடல்களில் பிரா கிருத உச்சரிப்பினின்றும் வேறுபட்ட பல சொற்கள் ஆளப் பட்டிருக்கின்றன. இச்சொற்கள் மற்ற மொழியினின்றும் கடன் வாங்கப்பட்டன என்பதைவிட வேறு வகையாகக் கூற முடியாது". 1

---

1. A short history of sanskrit literature, P-24 - A, Macdonell,

"மந்திர காலத்தில் மூன்று இனமொழிகள் இந்தியாவில் வழங்கின. இவற்றுள் வேதமொழியாகிய இந்து செர்மனிய மொழி ஒன்று. இரண்டாவது, வேதமொழியோடு அமைப்பில் மாறுபட்ட திராவிட மொழி. இது, முன்னதின் அமைப்பு, சொற்கள் என்பவற்றைப் பெரிதும் வேறுபடுத்திற்று. ஆரியமொழி, இந்தியாவில் வளர்ச்சியடைந்தபோது திராவிட மொழியின் வலிமையால் பல மாறுதல்களடைந்து திராவிட முறைகளைத் தழுவிற்று.

"திராவிட மக்கள் பொருள்களுக்கும் கலைகளுக்கும் இட்டு வழங்கிய பெயர்கள் எல்லாம் தமிழ். அவை பிறமொழிச் சொற்களல்ல. இக்கருத்து இன்னும் நன்கு ஆராயப்படவில்லை. ஆராய்ச்சியில் சமக்கிருத மொழியிற் காணப்படும் கலைச்சொற்கள் தமிழினின்றும் இரவல் வாங்கப்பட்டன என்று புலப்படுதல் கூடும். இந்து செர்மனிய மொழியாகிய பிராகிருதம் இந்தியாவில் வழங்க ஆரம்பித்தபோது அதன் அ. எ. ஒ. என்னும் எழுத்துகள் எல்லாம் அ போலாயின; அதன் இலக்கணங்களும் சிறிது சிறிதாகத் தனிவுபட்டன".1

---

1. The Dravidian dialects affected profoundly by sounds the structure, the idiom and the vocoblory of the former in the course of its growth in India on account of the constant influence of the Dravidian tongue. This language lost the subjunctive mood, many infinitive forms and several noun declentions, forgot its richly varied system of real verb tenses and adopted terms of expressions peculiar to the Dravidian idiom......The Dravidian names of things and operations connected with these arts of peace are native and not foreign (i.e. borrowed from Sanskrit.) The question has not yet been investigated but on enquiry it will most probably turn out that many sanskrit words connected with these are were borrowed from the Dravidian. - The age of the mantras - P. T. S. Ayengar,

## மந்திரகாலத்தில் ஆரியர் விந்தியத்துக்குத் தெற்கே குடியேறவில்லை

மந்திரகால நூல்கள் அக்காலத்தில் விளங்கிய நாற்பது கூட்டத்தினரைப்பற்றி மாத்திரம் கூறுகின்றன. அவை விந்தியமலைக்குத் தெற்கே உள்ளவர்களைப்பற்றிக் கூறவில்லை. அக்காலத்தில் தென்னிந்தியாவுக்கும் வட இந்தியாவுக்கும் போக்குவரத் திருந்தமை மந்திரங்களில் முத்தைப்பற்றிக் கூறப்படுதலால் அறியலாம். [1]

## புத்தர் காலம்
## (கி. மு. 557—477)

உபநிடத ஞானம் வளர்ச்சியுற்ற காலத்தில் புத்தர் தோன்றினர். இவர் திராவிட மரபினர். [2] இவரது ஞானமும் உபநிடத ஞானங்களை அடிப்படையாகக் கொண்டது. இவர் வேதமதத்துக்கு மாறான புரட்சியைக் கொண்டுவந்தார். இவர் தம் உபதேசங்களை மகதமொழியிற் (பாளி) செய்தார். ஆகவே புத்தர் காலத்தில் பாளிமொழி மக்களின் பேச்சுமொழியாக இருந்திருத்தல் வேண்டும். பாளி புத்தர்

---

1—மந்திர காலம். பி. தி. சீ. ஐயங்கார்.

2. புத்தர் கபிலர் வழியிற்றோன்றிய நாககுலத்தவரென்று ஓல்ட்காம் என்னும் ஆசிரியர் ஆராய்ந்து கூறியுள்ளார்.—சூரியனும் சர்ப்பமும்—பக். 66.

பாளி மொழியில் ஆரியத்துக்கில்லாத எகர ஒகரம் (குறில்கள்) இருப்பதாலும், மொழி தொடர்பான பிற எதுக்களாலும் மகத நாட்டில் தமிழ்மொழி வழங்கியதென்றும் புத்தர் திராவிட வகுப்பைச் சேர்ந்தவரென்றும் பந்தாக்கர் கூறியுள்ளர்—Willsons Philological lectures—Dr. R. G. Bandarkar. Collected works Vol. IV P. 295.

காலத்துக்கு இரண்டு மூன்று நூற்றாண்டுகளின் முன் தோன்றியிருத்தல் கூடும். புத்தமதம் கலிங்க நாட்டில் மிகவும் வேகமாகப் பரவிற்று. ஆகவே அங்குப் பாளி மொழி அதிகம் பயிலப்பட்டது. அதனால் அங்கு வழங்கிய தமிழ் சிதைந்து வடுகு அல்லது தெலுங்கு ஆயிற்று. இலங்கைப் புத்தமக்கள் கலிங்கதேசக் கலைகளைப் பின்பற்றினர். அங்கு வழங்கிய தமிழும் பாளி மொழிக் கலப்பினால் சிங்களமாக மாறிற்று.[1] மக்கள் எம் மொழியைச் சமய மொழியாகக் கொள்ளுகிறார்களோ அம் மொழிச் சொற்கள் அவர்களின் மொழியிற் கலந்து மொழியை வேறுபடுத்தி விடுகின்றது. பெருந்தேவனார் பாரதத்திற் காணப்படும் மணிப்பிரவாள நடையும் இதற்கு உதாரணமாகும். தமிழ் மக்கள் தமிழ் உணர்ச்சியினால் ஆரியத்தை எதிர்த்துப் போராடிவந்தமையின், தமிழ் வேறுமொழியாகச் சிதைந்துவிடாமல் பிழைத்தது. ஆயினும் அதன் ஓரங்கள் கன்னடம் தெலுங்கு துளு மலையாளம் என மாறுபட்டன. இன்றைய தமிழ் மொழியில் வடமொழிக் கறை அதிகம் ஏறியிருத்தலை நாம் அறியலாம். புத்தர் காலத்துக்குப் பின் கலிங்கநாடு வடுகு நாடாக மாறியிருத்தல் வேண்டும். இது கி. மு. நாலாம் நூற்றாண்டு வரையில் என உத்தேசமாகக்கூறலாம். தொல்காப்பியம் செய்யப்படுகின்ற காலத்தில் தமிழ்நாட்டின் வடக்கெல்லை வடவேங்கடம் எனப்படுகின்றது. இது, "செந்தமிழ்சேர்ந்த பன்னிரு

1. Singhalese is essentially a Dravidian language. Its evolution too seems to have been on a Tamil basis and so we seem safe in saying that, while in regard to its word development, Singhalese is the child of Pali and Sanskrit; it is with regard to its physical features and structure essentially the Daughter of Tamil......with regard to the laws governing the relation of words in sentances Viz: the laws of syntax, including idioms we find great many laws which cannot be explained except in the principle of Tamil Grammar - Mudaliar W. E. Gundavardhana.

நிலத்தும்'' எனப்படுகின்றமையானும் அப் பன்னிரு நாடுகளும் சேர சோழ பாண்டிய நாடுகளுக்குட்பட விருந்தமையானும் அறியப்படும். ஆகவே தொல்காப்பியம் கி. மு. நாலாம் நூற்றாண்டுக்குச் சிறிது முன்பின் செய்யப்பட்டிருத்தல் கூடும். "மலை தேய்ந்து மண்ணாங்கட்டியானது" என்பது நாட்டுப் பழமொழி. அதை ஒப்ப குமரி முதல் இமயம் வரையில் பரந்து கிடந்த தமிழ்நாட்டைப் பிறமொழிகள் கவர்ந்து கொள்ள இன்று தமிழ் இந்தியக் குடாநாட்டின் சிறியவெல்லையுள் மாத்திரம் வழங்குகின்றது. அதன் ஓரங்களையும் அதன் வழிமொழிகளாகிய தெலுங்கு கன்னடம் ஹிந்தி முதலிய மொழிகள் சிறிது சிறிதாகக் கவர்ந்து வருகின்றன. இன்று திராவிட மொழிகளை வழங்கும் மக்களின் எண் 63,000,000 எனக் கணக்கிடப்பட்டுள்ளது. தமிழ் வழங்குவோரின் எண் 19,000,000.

## இயல் - உ

## ஆரியருக்கு முற்பட்ட தமிழர் நாகரிகம்

இன்று இந்திய மக்களிடையே காணப்படும் பழக்க வழக்கங்களும் பிறவும் பழைய தமிழர் நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டனவென்று கருதப்படுகின்றன. சங்க காலத் தமிழர் நாகரிகம் கலப்பில்லாத பழந்தமிழ் நாகரிகமேயாகும். ஒரு மொழியிலுள்ள பழைய சொற்கள் அம் மொழிக்குரிய மக்களின் பழைய நாகரிகத்தை நன்கு விளக்குவன. அரப்பா மகஞ்சொதரோ என்னுமிடங்களிற் காணப்பட்ட பழம்பொருள்களைக் கொண்டு அங்கு வாழ்ந்த மக்களின் வரலாற்றைப் பழம்பொருள் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஒருமொழியிலுள்ள ஒவ்வொரு பழைய சொல்லும் ஒவ்வொரு பழம்பொருளுக்கு நேர். பாரை என்னும் சொல்

கல்லால் செய்யப்பட்ட கிண்டும் கருவியைக் குறித்தது. அப் பெயரே இன்று இரும்பு முதலிய உலோகங்களாற் செய்யப் பட்ட அவ்வகைக் கருவியைக் குறிக்க வழங்குகின்றது. உலோகத்தைப்பற்றி அறிய முன் மக்கள் கல்லாற் செய்த பாரையைப் பயன்படுத்தினர்கள் எனப் பாரை என்னும் சொல் அறிவிக்கின்றது. இவ்வாறு பண்டையோர் தாமறிந்த பொருள்களுக்கும், செயல்களுக்கும் இட்டு வழங்கிய சொற் கள் அவர்களது வரலாற்றினைக் கூறுவனவாகின்றன. ஆரி யர் வருகைக்குமுன் தமிழர் நாகரிகம் எவ்வாறிருந்ததென் பது இம்முறையில் அறிந்து கூறுதல் இயன்றது.

## நிலப்பிரிவும் மக்கட் பிரிவும்

இவ்வுலகம் மலையும் காடும் வயலும் கடற்கரையும் பாலை நிலமுமெனப் பலவகை இயற்கைப் பிரிவுகளுடையது. இவ் வகைப்பிரிவுகள் தமிழர் வாழ்ந்த [1]இந்தியநாட்டிலும் உண்டு. ஒவ்வொரு நிலத்தில் வாழ்ந்த மக்களும் வெவ்வேறு வகை வாழ்க்கை நடத்தினர். மலை காடு வயல் கடல் என்பனவும் அவை சார்ந்த நிலங்களும் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்னும் பெயர்கள் பெற்றன. மணல்வெளி பாலை எனப் பட்டது.

அந்நிலங்களில் வாழ்ந்தோர் முறையே குறவர் இடையர் உழ வர் பரதவர் மறவர் எனப் பெயர்பெற்றனர். நிலம் பற்றிய இப் பிரிவையன்றி அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் அடி யோர் எனத் தொழிற் பாகுபாடு பற்றிய பிரிவினரும் வாழ்ந்

1. இந்தியாவென்பது அலக்சாந்தரின் படையெடுப்புக்குப்பின் மேற்கு நாட்டவர்கள் நாவலந்தீவு என வழங்கிய நமது நாட்டுக்குக் கொடுத்த பெயர். இந்தியாவென்பது சிந்து என்பதன் திரிபு. சிந்து என்பதைக் கிரேக்கர் ஹிந்து என வழங்கினர்.

தார்கள். வினைவலர் பல தொழில் புரிவோராயும், அடியோர் கால்வழியாகத் தொண்டு புரிவோராயு மிருந்தனர். அடிமைகளை விற்று வாங்கும் வழக்குப் பண்டை நாட்களில் எல்லா நாடுகளிலும் காணப்பட்டது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறும் அரிச்சந்திரன் கதையும் இதற்குச் சான்றுகளாகும். வினைவலர் அடியோர் என்னும் இரு பிரிவினரும் கீழோரெனவும் ஏனையோர் மேலோரெனவும் அறியப் பட்டனர்.

## மறவர்

இவர்கள் எயினர் வேடர் புளினர் எனவும் கூறப்படுவர். இவர்கள் அலைந்து திரியும் திருந்தாத வாழ்க்கையர்; மணல் வெளிகளின் இடையிடையே கிடக்கும் பற்றைகளில் தங்கி வேட்டையாடியும், வழிச்செல்வோரை வழிபறித்தும், முல்லை நிலத்தே சென்று பசுக்களைக் கொள்ளை யடித்தும் வாழுநர். தமிழ் இலக்கியங்களில் இப் பாலை நில மக்களின் கொடிய செயல்கள் பலவாறு வருணிக்கப்பட்டுள்ளன. அவைகளிற் கூறப்பட்டவைகளின் சுருக்கம் வருமாறு. மறவர் செம்மறிக்கிடாயின் கொம்பு போன்று முறுக்கிய மீசையும் புலியின் மீசை போன்ற தாடியுமுடையர்; நெருப்பில் நீர் விட்டாற் போன்ற நிறத்தினர்; செருப்புத் தொட்ட காலினர். இப்பியும் சோகியும் கலந்து கோத்து அணிந்த கழுத்தினர்; முறுகிய சடையினர்; வில்லும் அம்பும் கொண்ட கையினர்; வழிப்போக்கரை எதிர்பார்த்திருக்கும் இயல்பினர்; தறுகண்மையே உருக்கொண்டா லன்ன கொடுமையர்; இவர்கள் வழிச்செல்லும் வணிகர் கூட்டத்தவரின் தலைகளைக் கொய்து அவர்களின் விலையுயர்ந்த பண்டங்களைக் கொள்ளையிடுவர்; அப் பண்டங்களைச் சிறுவிலைக்கு விற்பர்;

வழிப்போக்கரின் கட்டுச்சோற்றைப் பறித்துச் சில உறியிற் பத்திரப்படுத்துவர்; வணிகரிடம் கொள்ளைகொண்ட பெண்க ளணியும் மேகலாபரணங்களையும் அசோகந் தழையையும் உடுப்பர். கையிற்பட்ட வழிப்போக்கரை ஆடென நினைந்து காளிக்கு வெட்டிப் பலியிடுவர்.

அரம்போன்ற கற்களுடைய பாலை நிலத்தே இறந்தவர் களை இட்டு மூடிய கற்கும்பங்கள் பல கிடக்கும். தட்பக் காலத்தும் வெம்மை தோன்றும் அவ்விடத்து வறந்த சுனை களும் ஆறுகளும் கூவல்களும் காணப்படும். [1]

மறவரின் குடில் வீடுகள் எலியும் அணிலும் நுழையாத படி ஈந்தின் ஓலைகளால் வேயப்பட்டிருக்கும். மறப்பெண்கள் பாரையைக் கொண்டு எறும்புப்புற்றுகளைக் கிண்டிப் பெற்ற புல்லரிசியை முற்றத்தே கிடக்கும் நில உரலிற் றீட்டி, கிணற்று நீரை மொண்டு பானையில் உலைவார்த்து ஆக்கிய சோற்றை உப்புக்கண்டத்தோடு தேக்கிலையில் உண்பர்.

மறவர் கூட்டமாக வாழும் இடங்கள் பறந்தலை எனப் படும். இக் குடியிருப்பு ஊகம்புல்லால் வேய்ந்த மதிலாற் சூழப்பட்டிருக்கும். தலைவாயிலில் அம்புக்கட்டும் பறையும் தூங்கும்; வாயிலிடத்தே சங்கிலியிற் கட்டிய நாய் நிற்கும். இந் நிலத்துக்குத் தெய்வம் காளி. கொற்றவை, விந்தை, காடுகிழாள் என்பவையும் காளியின் மறுபெயர்கள். காளி என்பது கறுப்பி என்னும் பொருள் தரும் பெயர். காளிக்கு நரபலியும் பிற உயிர்ப் பலியு மிடப்படும். [2]

---

1. பெருங்கதை.
2. பெரும்பாண்.



# குறவர்

மலையில் வாழும் குறவர் அலைவதும் அலையாதிருப்பது மாகிய வாழ்க்கையினர். அவர்கள் வில்லும் அம்புங் கொண்டு வேட்டையாடினர்; வேட்டையாடிக் கொன்ற விலங்குகளின் தோலை உடுத்தினர். அவர் மகளிர் மரவுரி தழை உடைகளை அணிந்தனர். ஆகவே மன்றற் காலங்களில் மணமகன் மண மகளுக்குத் தழைகளாலும் பூக்களாலும் கட்டிய உடைகளைக் கொடுக்கும் வழக்கு உண்டாயிற்று. இது மலையாளத்தில் முண்டு கொடுக்கும் வழக்கமாக இன்றும் நிலவுகின்றது; மற்றைய நாடுகளில் கூறை கொடுக்கும் வழக்கமாக நிலைபெறு கின்றது. மகளிர் மூங்கிலை வார்ந்து கூடை முடைந்தனர். இத்தொழில் அவர்களிடையே இன்றும் காணப்படுகின்றது. அவர்களின் குலதெய்வம் முருகன். முருகக்கடவுள் ஆதி காலம் முதல் மலைஉச்சிகளில் வைத்து வணங்கப்பட்டார். முருக வழிபாட்டிற்குரிய ஆடல் வேலன் ஆடல் அல்லது வெறியாட்டு எனப்படும். முருக வழிபாட்டிற்குரிய இவ்வா டல் முருகபூசை செய்வோனால் ஆடப்பட்டது. முருகக் கட வுளைப் போல வேலைக் கையில் வைத்திருத்தலால் அவனும் வேலன் எனப்பட்டான். திருமுருகாற்றுப்படை என்னும் சங்க நூலில் குறமாது முருக வழிபாடு செய்யும் முறை நன்கு கூறப்பட்டுள்ளது. அது வருமாறு:—

மலையிடத்துள்ள அகன்ற நகரிடத்தே குறமாது கோழிக் கொடியை நட்டு அதற்கு நெய்யும் வெண்சிறுகடுகும் அப்புவாள்; வழிபாட்டிற்குரிய மந்திரங்களை உச்சரித்து அழகிய மலர்களைத் தூவுவாள்; மாறுபட்ட இரண்டு நிற முடைய பட்டாடைகளை உள்ளொன்றும் புறம்பொன்றுமாக உடுப்பாள்; சிவந்த நூலைக் காப்பாகக் கையிற் கட்டுவாள்;

வெண்பொரிகளைத் தூவுவாள்; இரத்தத்தோடு கலந்த வெள்ளரிசியைப் பலியாக இடுவாள்; செவ்வலரி மாலைகளையும் பிற மாலைகளையும் ஒரே அளவாக நறுக்கி அசையும்படி தூக்குவாள்; மலைப்பக்கத்தே உள்ள ஊர்களைப் பசியும் பிணியும் பகையும் வருத்தா தொழிக என வாழ்த்தி நறிய தூபங் காட்டுவாள்; மலையிடத்து வீழ்கின்ற அருவியோடு வாத்தியங்கள் சேர்ந்து ஒலிக்கச் சிவந்த மலர்மாலைகளைத் தூவி உதிர மளைந்த தினையைப் பரப்பி முருகக்கடவுள் மகிழும்படி வழிபாடு செய்வாள்.

முருகனுற் குறைநேர்ந்த பெண்களுக்கு முருகபூசை செய்யும் வேலன் வெறியாடி ஆட்டுக்குட்டியைப் பலியிட்டு அவ்விரத்தத்தைத் தொட்டு அவள் நெற்றியிற் றடவுவதும் வழக்கு.

குறிஞ்சி நிலத்தைப்பற்றியும் அந் நிலமக்களைப் பற்றியும் சங்க நூல்களிற் காணப்படுவன சில வருமாறு:-

1 மலையிடத்தே பலாவும் வாழையும் செழித்துவளரும். குறவரின் வீடுகள் புல்லால் வேய்ந்த சிறு குடிசைகள். வீட்டின் முற்றத்தே வேங்கைமரமும் பலாவும் நிற்கும். குறவர் அம்மரங்களின்கீழ்இருந்து தேட்கடுப்புப்போன்ற நாட்பட்ட கள்ளைக் குடித்து, சந்தனக்கட்டை விறகாற் சுட்ட இறைச்சியை யுண்டு மகளிரோடு குரவையாடுவர். மலைமுகடுகளிலே தேன்கூடுகள் தொங்கும். குறவர் உயர்ந்த மூங்கில் ஏணிகளைச் சார்த்தி ஏறி அத் தேன்கூடுகளை அழித்துத் தேன் கொள்வர். இராக்காலத்தே வேட்டையாடச் சென்ற குறவன் பகற்காலத்திற் புலித்தோல்மீது படுத்து உறங்குவான். கள்ளை உண்ட குறவன் இராக்காலத்தே பாண்மீ

1. அகம்.

திருந்து தினைப்புனத்தைக் காவல் காக்கக், குறத்தி சந்தனம் பூசிய தனது கூந்தலைத் துளர்ந்து ஆற்றிக் குறிஞ்சிப் பண் பாடுவாள். தினைப்புனத்தை மேயவந்த யானை அவ்வோசையைக் கேட்டு மெய்மறந்து தூங்கும். தினைப்புனத்தை மேய வரும் பன்றி, குறவன் பரண்மீது மாட்டிய கொள்ளியைக் கண்டுநிற்கும். குறச் சிறுமியர் கையிற் 1 சங்குவளை யணிந்து முதுகிற் றூங்கும்படி கூந்தலைப் பின்னி விடுவர்; தினைமீது விழும் கிளிகளைத் தட்டை குளிரி முதலிய கருவிகளைத் தட்டியும், அசோகந் தளிரை ஒச்சியும், ஆயோ எனச் சத்தமிட்டும் ஓட்டுவர்; அசோகிலும் தாழையிலும் கட்டிய ஊசல்களில் ஏறியாடுவர்; வேங்கைப் பூவைக் கொய்து புலிபுலி யெனச் சத்தமிடுவர். சிறுமிக்குத் தெய்வத்தால் நேர்ந்த குறையைப் போக்க அன்னை பூக்களைப் பலியாகத் தூவி வீட்டைக் காவல் செய்து வெறியாடும்பொருட்டு முருக பூசை செய்வோனை வீட்டுக்கு அழைப்பாள். பலாப்பழத்தாற் சமைத்த கள்ளைக் குறத்தியர் வார்க்க வார்க்கக் குறவர் வாங்கி உண்டு மகிழ்வர். யானைகளின் கொம்பைப் பெறுதற்குக் குறவர் யானைகளை வேட்டையாடுவர். மின்மினி மொய்த்

---

1. வளை என்னும் சொல் சங்கை உணர்த்தும். சங்கை அறுத்துச் செய்யப்பட்ட வளையமும் வளை எனப்பட்டது. இதனை ஆதிகால மக்கள் கையில் அணிந்தனர். இவ்வளை பேய் பிசாசுகளினின்றும் மக்களைக் காக்கின்றது என்னும் நம்பிக்கை முற்காலத்தில் உண்டாயிற்று. ஆகவே வளைக்குக் காப்பு என்னும் இன்னொரு பெயர் உண்டாயிற்று. இன்றும் நாட்டுப்புறங்களில் குழந்தைகளின் கைகளில் காப்பாகச் சங்கு வளைகள் இடப்படுகின்றன; இன்றேல் சங்கு மோதிரங்கள் கட்டப்படுகின்றன. பொன்னாலும் உலோகங்களாலும் செய்த வளைகள் பிற்காலத்திற் பயன்படுத்தப்பட்டன. அவையும் வளை காப்பு என்னும் பெயரால் வழங்கும். தோடு, காதோலை, சாடு போன்ற அணி வகைகள் ஒவ்வொன்றும் ஆதிகால மக்களின் வரலாற்றை உணர்த்துவன.

திருக்கும் புற்றைக் கரடி இராக்காலத்தே இருந்து தோண்டும்; அக்காட்சி கொல்லன் இரும்பில் வேலை செய்வதுபோன்றது. யானையை வேட்டையாடப் புலி பதுங்கியிருக்கும். பிறைபோன்ற கொம்புடைய பன்றி பறைக்கண் போன்று நிறைந்த சுனையிடத்தே நீரைப் பருகிச் சேம்பின் கிழங்கை உண்ணும். சிவந்த ஆரமுடைய கிளி, பறித்துத் தூக்கமாட்டாது போகட்டுச் சென்ற சாமைக் கதிரைக் கோழிகள் நின்று உண்ணும். முற்றி விளையும்படி கள் மூங்கிற் குழாய்களில் வைக்கப்பட்டிருக்கும். குறவர் கடப்பமரத்திற் கொடிகட்டி மாலை தூக்கிப் பலவகை வாத்தியங்களை ஒலித்துக் கூத்தாடி முருகனை வழிபடுவர்.

## வேளாளர்

ஆற்றோரங்களில் வாழ்ந்து தானியங்களை விளைவித்தோர் வேளாளர் எனப்பட்டனர். அவர்கள் ஆற்று நீரைப் பயன்படுத்தி வேளாண்மை செய்தனர். ஆற்றுக்குச் சேய்மையில் வாழ்ந்தோர் மழை நீரை எரிகளிலும் குளங்களிலும் தேக்கிவைத்து எற்றம் கபிலை பிழா இடா முதலியவைகளா லிறைத்துச் சாமை அவரை துவரை முதலிய தானியவகைகளையும் விளைவித்தனர். அதற்கு அப்பால் பருத்தி விளைந்தது. கற்காலத்திலேயே இந்திய மக்கள் பருத்தி ஆடை உடுத்தார்கள். அக்காலத்தில் மற்றைய நாடுகளில் மக்கள் தோல் கம்பளி சணல் ஆடைகளை உடுத்தினர்; அல்லது ஆடையின்றி யிருந்தனர். ஆற்றுச் சமவெளிகளில் ஆடை நெய்தற்கு வேண்டிய கற்காலப்பொருள்கள் கண்டு எடுக்கப்பட்டன. இதனல் அக்கால மக்கள் ஆடை நெய்வதில் தேர்ச்சிபெற்றிருந்தார்கள் என்று விளங்குகின்றது. அவர்கள் மரத்தினல் வீடுகட்டி வாழ்ந்தார்கள்; நெற்களஞ்சியங்

கள் மரத்தினுற் செய்யப்பட்டன. வண்டியும் மரத்தினுற் செய்யப்பட்டது. வண்டி உரல் உலக்கை தொட்டில் முதலியன இக்காலத்திற் போலவே இருந்தன. இக்காலத் தச்சர் பயன்படுத்தும் ஆயுதங்கள் போன்று கல்லாற் செய்யப்பட்டவை புதிய கற்காலக் குடியிருப்புகளிற் கண்டெடுக்கப் பட்டன. இந்நிலத்துக்குரிய குலதெய்வம் வேந்தன். அக்கால மக்கள் நல்ல அரசனின் ஆளுகையில் எல்லா நன்மைகளும் உண்டாகின்றன என்று நம்பினுர்கள். ஆகவே அவர்கள் எல்லா நற்குணங்களும் அமைந்த அரசனைத் தெய்வமாக வணங்கினுர்கள்.[1] பிற்காலத்தில் வேந்தன் இந்திரன் எனப்பட்டான். இது தமிழர் ஆரியர் கலப்பு நேர்ந்த பிற்கால வழக்கு. ஆரியர், இந்திரன் தேவர்களுக்கு அரசன் எனக் கருதினர். வேளாண் மக்கள் இந்திரனுக்கு விழாக்கள் சிறப்பாக எடுத்தனர். இவ்வகை விழாக்களைப்பற்றிச் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய நூல்கள் அழகுறக் கூறுகின்றன. வேளாண் மக்கள் உழுதுண்போர் உழுவித்துண்போர் என இருவகையினர். இவருள் உழுவித்துண்போர் வேள் எனப் பட்டுக் குறுநில மன்னராகவும் ஆட்சி புரிந்தனர். இவ்வகுப்பினர் அரசனுல் கணிக்கப்பட்ட பெருமக்களாவர்.

---

1. உலகின் எல்லாப்பக்கங்களிலும் பழங்காலத்தே அரசர் கடவுளராக வழிபடப்பட்டனர். மேற்கு ஆசிய எகிப்திய வரலாறுகளில் இதனை நன்கு காணலாம். இலங்கையிலே குளங்களை வெட்டிப் பயிர்த்தொழிலை வளம்படுத்திய அரசர் தெய்வமாக வழிபடப்பட்டனர். இது மின்னேரி என்னும் குளத்தை வெட்டியவன் மின்னேரிக் கடவுள் என வழிபடப்பட்டமையால் அறியலாகும். இன்று ஆலயங்களில் நடக்கும் விழாக்கள் பூசைகள் என்பன அக்கால அரசன் ஒருவன் தனது கோயிலில் (அரண்மனையில்) இருக்கும்போதும், வீதி வலம் வரும்போதும் செய்யப்பட்ட மரியாதைகளே.

மாடு ஒரு காலத்திற் செல்வமாக மதிக்கப்பட்டது. பின்பு தானியம்போன்ற உணவு வகைகள் செல்வமாக மதிக்கப்பட்டன. அதிக உணவுப் பொருள்களை வைத்திருப்பவனே செல்வனுக மதிக்கப்பட்டான். வேளாண் மக்கள் அதிக தானியங்களை விளைவித்துச் செல்வராய் வாழ்ந்தனர். அவர்கள் பெரிய வீடு வாயில்களையும் அமைத்தனர். அவர்களுக்கு வேண்டிய மட்பாண்டங்கள், உலோகப் பாத்திரங்கள் ஏர்த் தொழிலுக்கு வேண்டிய கலப்பை நுகம், கொழு முதலியன, அவர் மகளிர் அணியும் ஆபரணவகை, உடுக்கும் ஆடைகள் இவையும் இவை போன்றவைகளும் செய்துதவும் தொழிலாளர் மருதநிலத்தே வந்து தங்கினர். பிற நிலங்களில் வாழ்வோர் தம் நாடுகளிற் கிடைக்கும் பண்டங்களைத் தானியங்களுக்குப் பண்டமாற்றுச் செய்ய வந்தனர். இவ்வாறு மருதநிலம், மக்கள் போக்குவரத்தும் ஆரவாரமுமுடைய நகரமாக மாறிற்று. இங்குப் பொழுதுபோக்குக்குரிய ஆடல், பாடல், விழா முதலியன நிகழ்ந்தன ; இன்பக் கலைகள் வளர்ச்சியுற்றன. ஒவ்வொரு தொழிலாளரும் வாழும் வீதிகளுடைய நகரங்கள் இங்கேதான் தோன்றின. தமிழ் இலக்கியங்கள் மருதநில மக்களின் உண்டாட்டுக் களியாட்டு நீராட்டு விளையாட்டுகளையெல்லாம் அழகாகக் கூறுகின்றன.

## பரதவர்

கடற்கரை மக்கள் மீன் பிடித்தும் உப்பு விளைத்தும் வாழ்ந்தனர். அவர்கள் உப்புக் கண்டத்தையும் உப்பையும் தமக்கு வேண்டிய நெல்லுக்கும் பிறபொருள்களுக்கும் பண்டமாற்றுச் செய்தனர். அவர்கள் மரத்தைக் குடைந்து குடைவு தோணிகளையும் பெருங்கடலிற் செல்லத்தகுந்த

நாவாய்களேயுஞ் செய்தனர். முன்னர் அவர்கள் கரையை அடுத்துத் தோணிகளிற் சென்றனர்; பின்பு கருங்கடல் வழியாகத் தூரதேசங்களுக்குச் சென்று தென்னிந்திய ஆடைகளேயும் மரங்களேயும் பிறநாட்டுப் பொருள்களுக்கு மாற்றினர். 1 மகளிர் தழையுடை யுடுத்தனர். தந்தையர் கணவர் கொணர்ந்த மீன் இறுல் என்பவைகளேக் காய

1. The Baveru Jalaka which relates the adventures of Indian merchants taking to Babylon by sea the first peacock for sale indicate according to Prof: Buhler that, "the Banis of western India undertook trading voyages to the shores of persian gulf or of its rivers in the 5th perhaps in the 6th century B. C." - Studies in Indian History and culture. - P 14 - Dr. Narendranath Law.

இந்தியாவின் மேற்குக்கரை உரோமையோடு பெரிய வாணிகம் புரிகின்றது. சில இந்தியர் இந்துசீனம்வரையும் சென்று வியாபாரஞ் செய்கின்றனர். அவர்கள் பவளத்தையும் இளக்க முத்துமாலேகளேயும் கொண்டு சென்று விற்கின்றனர். இவர்கள் கணக்குகளேப் புத்தகங் களில் எழுதிவைப்பதில்லே. இவர்கள் யானேத்தந்தம் அல்லது காண் டா மிருகக்கொம்பைத் தமது பொருள்களுக்கு விலேயாகப் பெறுகின் றனர். இவர்களுள் மந்திர வித்தையிற் றேர்ந்தவர்கள் இருக்கின்றனர். ஒரு மனேவி கணவனுக்குக் காட்டக்கூடிய உயர்ந்த மரியாதை அவள் அவனுடைய பாதங்களே முத்தமிட்டு முழங்காலேத் தழுவிக்கொள்வதா கும். அவர்களின் வீடுகளில் பாடவும் ஆடவும் கூடிய இள மகளிர் இருக்கின்றனர். அரசனிடமும் மந்திரிமாரிடமும்அநேகபட்டுக்கம்பளி உடைகள் உண்டு. அரசன் தனது தலேமயிரைச் சீனப்பெண்கள்போல உச்சியில் முடிகிறுன். விவாகமானவர்களும் இப்படியே முடிகின்ற னர். விவாகமாகாதவர்களும் இவ்வாறு முடிந்து காதைத் துளேயிட்டு விலேயுயர்ந்த வளேயங்களே அணிகின்றனர். அவர்கள் பெரும்பாலும் வெண்ணிற ஆடைகளே உடுக்கின்றனர். அவர்களின் ஆயுதம் வில்லும் அம்பும். அவர்களுக்கு எழுத்தும் இலக்கியங்களும் உண்டு. வான சாத்திரத்தையும் சோதிடத்தையும் அவர்கள் நன்கு அறிவார்கள். எல் லோரும் பனே ஓலேயில் எழுதிய சமய நூல்களேப் படிக்கின்றனர். இது மாதுவான் என்னும் சீனனுல் எழுதப்பட்ட குறிப்பு.—Ma. Twan Lin (550—60 A.D.)

விட்டுப் புன்னை நிழல்களிலிருந்து புட்கள் ஓப்பிக் காவல் காத்தனர். நெய்தல் நிலமக்கள் பனைச் செறிவுகளில் சிறு குடில்களமைத்து வாழ்ந்தனர். அவை புல்லு அல்லது பனையோலையால் வேயப்பட்டன. அவர்கள் பூரணைக் காலங்களில் சுறுக்கோடு நட்டுப் பூமாலை அணிந்து கூத்தாடி வருணனை வழிபட்டனர்; தலையில் தழைகளை அணிந்தனர். வருணன் தமிழர் கடவுளென்றும் இக்கடவுள் ஆரிய மக்களால் வழிபடப் பட்டனனென்றும் முன் காட்டப் பட்டது. [3]

கடற்கரைத் துறைமுகங்களில் பெரிய பண்டசாலைகள் இருந்தன. இவைகளில் அரேபியா, யவன தேசம் முதலியவைகளிலிருந்து வந்த பண்டங்கள் சுங்கங்கொள்ளும் பொருட்டு அடுக்கிக் கிடந்தன. பிற நாடுகளுக்கு அனுப்பும் பொருட்டு வண்டிகளிலும் கழுதைகளிலும் பொதி மாடுகளிலும் கொண்டுவரப்பட்ட மூடைகள் அரச முத்திரை குத்தப் பட்டுப் பண்டசாலையின் இன்னோரிடத்து அடுக்கப்பட்டுக் கிடந்தன. பண்டசாலையில் அரச ஊழியம் புரியும் கணக்கரும் சேவகரும் பலர் கடமை புரிந்தனர். கடற்கரைத் துறைமுகங்களில் வாணிகம் வளர்ச்சியடைந்தது. அங்கு வணிகர் கூடினார்கள். பெரிய மாளிகைகள் எழுந்தன. வண்டிகள் செல்வதற்கு நல்ல வீதிகள் அமைக்கப்பட்டன. மாளிகைகள் குன்று நிமிர்ந்தது போன்ற உயரமுடையனவாகவும் பல சாளரங்களோடு கூடிய மாடிகளும் ஓடு கற்றை முதலியவற்றால் வேயப்படாது மூடு சாந்திட்டு நிலாமுற்றங்கள் விடப்பட்டனவாயு மிருந்தன. அவை 'வேயா மாடம்' எனப்பட்டன. சாளரங்கள் மானின் கண்போன்றனவாகச்

3. சின்ன ஆசியாவிலே கித்தைதி என்னும் நாட்டிலும் வருணன் என்னும் கடவுள் வழிபடப்பட்டார்.

செய்யப்பட்டிருந்தன. கடலிற் செல்லும் மரக்கலங்கள் திசையை அறியும்பொருட்டு உயர்ந்த கட்டிடங்களில் விளக்குகள் வைக்கப்பட்டிருந்தன. இவைகள் கலங்கரை விளக்கங்கள் எனப்பட்டன. இக் கலங்கரை விளக்கங்கள் அலக்சாந்திரியாவில் தாலமிசோதர் [4] அமைத்த வெளிச்சவீட்டுக்குப் பன்னெடுங்காலம் முற்பட்டது. கப்பலோட்டும் மாலுமி மீகான் எனப்பட்டான். மீகான் என்பதே மீகாமன் எனத் திரிந்து வழங்கும். சங்க நூல்களில் நெய்தல் நிலத்தைப்பற்றியும் அந் நிலமக்களைப் பற்றியும் காணப்படுவன சில வருமாறு:

குறச் சிறுமியர் புன்னை நிழலிலிருந்து கருவாட்டைக் காவல் காத்துப் புள்ளோப்புவர். உமணர் எருதுகள் பூட்டிய வண்டிகளில் உப்பையேற்றிச் சென்று விற்பர். பனைமரங்களில் இராக்காலத்தே அன்றிற் பறவைகள் தங்கும். இரவில் மீன்பிடிக்கும் பரதவரின் திமில் விளக்குப் பாசறையில் உறையும் அரசரது யானைமுகத்து நெற்றிப்பட்டம்போல்விளங்கித் தோன்றும். நாவாய்களின்மீது பெரிய கொடிகள் அசையும். கழியிடத்தே விளைந்த உப்பை உமணப் பெண்கள் எடுத்து நெல்லுக்கு உப்பு என விலை கூறி விற்பர். பரதவர் சிறுமியர் உப்புக் கும்பங்களில் ஏறி நின்று கடலில் வரும் திமில்களை எண்ணுவர். பெண்கள் மாந்தழை நெய்தல்இலை முதலியவற்றை உடுப்பர். உப்பு வாணிகரோடு அவர்கள் வளர்க்கும் மந்தியும் கூடச்செல்லும். பரத்தியர் மீன்களை விலை பகர்ந்து செல்வர். சிறுமியர் கடற்கரையில் வண்டற் பாவை செய்தும், சிற்றில்புனைந்தும் சிறுசோறட்டும் விளையாடுவர். பரதவர் முற்றத்தே சுறாக் கிழித்த வலை தூங்கும்.

---

4. Ptolemy - (B.C. 283 - died.)

## கோன்

அரசியல் தமிழரிடையே மிகப் பழமைபெற்றது. கோன், ஏந்தல், வேந்தன், மன்னன், குரிசில், இறைவன், வள்ளல், அண்ணல், குறுநில மன்னர்முதலிய பழந்தமிழ்ச் சொற்களே இதற்குச் சான்று. அரசன் குடிகளை ஆள்வது ஆட்சி எனப்பட்டது. ஆள் என்பது மக்கள் ஒருமை. ஆட்சி என்பது இடையன் மந்தைகளைக் காப்பதுபோல மக்களைப் பகைவரினின்றும் காப்பது எனப் பொருள்பட்டது. ஏந்தல் என்பது போலவே வேந்தன் என்பதும் ஏந்து என்னும் அடியாகப் பிறந்ததாகலாம். அரசனுக்குப் பழைய பெயர் கோ அல்லது கோன். இதற்குப் பசுக்களை மேய்ப்பவன் என்பது பொருள். இது, ஆட்சி முதலில் முல்லை நிலத்தில் ஆரம்பித்து வளர்ச்சி யடைந்ததென்பதை விளக்கும். இந் நிலைமையிலேயே மக்கள் மாடு பசு எனப்படும் செல்வத்தைத் தேட ஆரம்பித்தார்கள். ஆயர் தமது செல்வமாகிய மந்தைகளுடன் புற்றரைகளிற் றங்கி வாழ வேண்டியவர்களானார்கள். மற்றச் செல்வங்கள்போ லல்லாமல் ஆடுமாடுகள் கன்றுகளை ஈன்று பெருகும் இயல்பின. ஆயரின் புதல்வர் தங் குடும்பத்துக்குரிய மந்தைகளைப் பிரித்துக்கொள்ளலாம். மேய்ச்சல் நிலங்களைப் பிரித்தல் முடியாது. மேய்ச்சல் நிலங்கள் ஓரளவுக்குமேற் சிறியவை யாக்கப்பட்டால் அவை ஆடுமாடுகள் மேய்வதற்குப் பயன்படா. ஆகவே குடும்பங்கள் ஒன்று சேர்ந்து வாழும் முறை உண்டாயிற்று. குடும்பத்தின் தலைவன் அதிகாரமுடையவனானான். பின் பல குடும்பங்களுக்கு அதிகாரமுடைய ஒருவன் தலைவனானான். அவன் சிறப்பாகக் கோன் எனப்பட்டான். இவ்வாறு அரசன் உண்டாயினான்.

அரசன் வாழும் மனை கோட்டை எனப்பட்டது. அரசனது அதிகாரம் உயர உயரப் போரும் வளர்ச்சியடைந்தது. கோட்டையைச் சூழ்ந்து மதில் அரண்செய்தது. ஆகவே கோட்டை, அரண்மனை எனப்பட்டது. மதில் மண்ணோடு கேப்பைக் கழி கலந்து கட்டப்பட்டது. இது செங்கல் மதிலினும் வலிவுடையது. கோட்டையைச் சூழ்ந்து அகழ் அகப்பா, அல்லது அகழி இருந்தது. இச்சொற்கள் அகழ் என்னும் அடியாகப் பிறந்தன. உடு, ஓடை, கயம், பரிகம், பரிகை, பாம்புரி என்பனவும் அகழின் மறுபெயர்கள். பாம்பின் உரி பாம்பை நெருங்கி மூடியிருப்பதுபோல் இருத்தலின் அகழ் பாம்புரியெனப் பெயர் பெற்றிருத்தல் கூடும். கோட்டையின் வாயில் கொட்டி எனப்பட்டது. மதிலின் பின்புறத்தே நிலத்திலிருந்து மேலேயெழுந்து மேடைபோ லிருப்பது கொத்தளம் எனப்பட்டது. மதிலின்மீது வீரர் மறைந்திருந்து அம்பு எய்தற்கு அமைக்கப்பட்டுள்ள மறைவிடம் ஞாயில் ஏவறை எனப்பட்டது. அரண்மனையிற் பல அறைகள் இருந்தன. தானியக்களஞ்சியம் கொத்தறை எனவும் அரசன் வீற்றிருக்கும் மண்டபம் கொலுவிருக்கை எனவும் ஆயுதங்கள் வைக்கும்அறை ஆயுதக்கொட்டில் எனவும் கூறப்பட்டன. கொலுவிருக்கை கொடி துகில் தோகை பூ இலைகளால் அலங்கரிக்கப்பட்டது. அரசன்வட்டித்த கூர்நுதி முடியணிந்தான். அரசரும் வள்ளல்களும் முகத்தை மழித்திருந்தார்கள். அரசன் அரையில் தங்கப் பட்டிகையும், கையிற் கடகமும், கமக்கட்டுக்கும் முழங்கைக்கு மிடையில் சதங்கைகளையுடைய கழலும், கழுத்தில் பவள முத்து மாலைகளும், காலில் வீரச்செயல் பொறித்த வீரதண்டையும், காதிற் குண்டலங்களும் அணிந்திருந்தான். அவன் கொலுவிருக்கும் ஆசனம் கட்டில் எனப்பட்டது. அரசன் சாய்வதற்கு அரியணையிருந்தது.

அவனைச் சூழ்ந்து அடியார், உழையர், புகழ்கூறும் அகவர், கட்டளைகளை வெளிப்படுத்தும் வள்ளுவர், அரசனது வீரம் கொடை ஆதியவற்றைப் பாடும் புலவர், அன்னல் வள்ளல் முதலிய பெருமக்கள் இருந்தனர். அரசன் குடிமக்களின் குறைகளை நேரிற் கேட்டு முறை செய்தான். அவன் பரிசனர் புடைசூழ வீற்றிருந்தான். அரி, கவரி, குயவு, கூவிரம், திகிரி, வையம் என்பன தேரின் பெயர்கள். ஆகவே அக்காலத்துப் பலவகைத் தேர்கள் இருந்தனவென்று தெரிகிறது. தேர்கள் யானை அல்லது எருதுகளால் இழுக்கப்பட்டன. தேரின் நடுப்பாகம் தட்டு அல்லது நாப்பண் என்றும், அதன் தட்டுப் பார் என்றும், தேரைச் சுற்றியுள்ள பலகைகள் கிடுகு என்றும், சில்லு ஆர் என்றும் தேரின்மீது ஏறுதற்கு அமைக்கப்பட்ட படிகளோடு கூடிய மேடை முட்டி அல்லது பிரம்பு என்றும் வழங்கின. தேர் ஆடைகளால் அலங்கரிக்கப்பட்டது. அரச வருவாய் அரசனுக்குரிய நிலங்களால் மாத்திரமன்று, வரி சுங்கம் திறை கப்பம் முதலியவைகளாலும் வந்தன.

ஆட்சி முல்லை நிலத்திற்றோன்றி மருதநிலத்தில் வளர்ச்சியுற்றது. ஆகவே அரசனது நகர் பெரும்பாலும் மருத நிலத்திலேயே இருந்தது.

## பார்ப்பார்

எல்லாத் தேசங்களிலும் ஆலயங்களில் கடவுளுக்குப் பலி செலுத்தும் குருமார் இருந்தனர். அவ்வகையினர் தமிழ் நாட்டிலும் இருந்தார்கள். இவர்கள் பார்ப்பார் எனப்பட்டனர். கோயில் தொடர்பான கருமங்களைப் பார்த்தலின் இப்பெயர் அவர்களுக்கு இடப்பட்டிருக்கலாம். கடவுள் வழிபாட்டிலும் பிறவகையினும் இவர்கள் பொதுமக்களுக்கு

அறிவுகொளுத்திவந்தனர். இம்முறையில் இவர்கள்மக்களின் புரோகிதருமானுர்கள். புரோகிதம் என்பது புர என்னும் அடியாகப் பிறந்ததாகலாம். புரோகிதனுகிய பார்ப்பானே அகப்பொருட்டுறையில் வரும் பார்ப்பனப் பாங்கனுவன். புரோகிதன் அரசனது உறுதிச் சுற்றங்களுள் ஒருவனுகவும் இருந்தான்.

தொல்காப்பியத்தில் "நூலே கரகம் முக்கோல் மணையே ஆயுங்காலை அந்தணர்க்குரிய" எனக் கூறப்படும் அந்தணர், துறவிகளாய் இடம் விட்டு இடம் செல்லும் துறவோராவர். இங்கு நூலெனக் கூறப்பட்டது பொத்தகக் கட்டை. இது:

" 1 பூதியு மண்ணும் பொத்தகக் கட்டும்
மானுரி மடியு மந்திரக் கலப்பையும்
கானெடு மணையுங் கட்டுறுத் தியாத்த
கூறை வெள்ளுறிக் குண்டிகைக் காவினர்"1 (உதயணன் கதை)

என்பதால் நனி விளங்கும்.

## காதல்

– முற்காலப் புலவோர் காதல் போர் என்னும் இருதுறைகளிலும் பாடல்கள் புனைந்தனர். இப் பாடல்களிற் காணப் படும் ஒழுக்கங்கள் வரலாற்றுக் காலத்துக்கு முன் தொட்டு வருவன. மகளிரும் மைந்தரும் ஒருவரை ஒருவர் விரும்பிக்

1. கிழிந்த சிதாஅருடுத்து மிழிந்தார்போல்
எற்றிரங் துண்டும் பெருக்கத்து நூற்றிதழ்த்
தாமரை யன்ன சிறப்பினர் தாமுண்ணின்
தீயூட்டி யுண்ணும் படிவத்தர் தீயவை
ஆற்றுழி யாற்றிக் கழுவுபு தோற்றம்
அவிர்முருக்கந் தோலுரித்த கோலர் துவர்மன்னும்
ஆடையர் பாடினரு மறையர் நீடின்
உருவந் தமக்குத் தாமாய
இருபிறப் பாளர்க் கொரூஉ மாதிதே. (தகடூர்யா.)

காதலித்துக் கிழவன் கிழத்தியராதலே பண்டைநாள் மன்றல். பிறரறியாவகை சிலநாட் கரந்தொழுகும் காதலொழுக்கம் களவெனவும், பலரறிய மணந்து கிழவன் கிழத்தியராய் இல்லிருந்து நல்லறம் நடத்தும் ஒழுக்கம் கற்பெனவும் படும். கூடிய காதலர் பிரிந்தவிடத்து இரங்கல், பிரிந்தவர் வருவாரென்று அவரை எதிர்நோக்கி ஆற்றியிருத்தல், ஒருவரோடு ஒருவர் பிணங்கி ஊடுதல் என்பன போன்ற பொருள்களைப் பலவாறு கற்பித்துப் பண்டைப்புலவோர் பாடல்புனைந்தனர். மலைநாட்டு மகளிரும் மைந்தரும் ஆதிகாலத்திற் களவிற் கூடிப் பின் மணந்துகொண்டனராதலின் புணர்தலும் அதுகாரணமாயுள்ள பொருள்களும் குறிஞ்சிக்கு உரித்தாக்கப்பட்டன. முல்லை நிலத்தில் மணங்கள் முதியவர்களால் ஒழுங்கு செய்யப்பட்டன. முல்லைநில மகளிர் காலையில் மந்தைகளுடன் சென்ற காதலர் மாலையில் மீளும் வரையும் அவரை எதிர்பார்த்திருத்தலின் முல்லைக்கு இருத்தல் உரித்தாக்கப்பட்டது. கடற்கரை மகளிர் மரக்கலங்களிற் றொலைவிடஞ் சென்ற கணவரை நினைந்து இரங்கியிருத்தலின் இரங்கல் நெய்தற்கு உரித்தாக்கப்பட்டது. பொருள் தேடுதல் அரசர் ஏவலை நிறைவேற்றுதல் முதலிய ஏதுக்களை முன்னிட்டுக் காதலர் பாலை நில வழியே செல்லுதலின் பாலை பிரிதலுக்கு உரித்தாக்கப்பட்டது. இவ்வொழுக்கங்கள் எல்லாம் எல்லா நிலங்களிலும் நிகழத்தக்கன.

## மன்றல்

அக்கால மன்றல் புரோகிதர் இன்றி நடந்தன. கணி எனப்பட்ட சோதிடர் கலியாணத்துக்கேற்ற நல்ல நாளை ஆராய்ந்து கூறினர். சங்க நூல்களிற் காணப்படும் மன்றல் முறை வருமாறு:

உரோகிணி சந்திரனோடு கூடும் பூரணை நாளில் கலியாண முகூர்த்தம் வைக்கப்பட்டது. வீட்டின் முற்றத்தே கால்கள் நட்டு அழகிய பந்தல் இடப்பட்டது; தரையில் ஆற்றின் வெண்மணல் பரப்பப்பட்டது. அழகிய பூமாலைகளையும் இலைகளையும் தூக்கிப் பந்தல் அலங்கரிக்கப்பட்டது. பருப்பு இட்டு ஆக்கிய சோற்றுக்குவியல் பலர் கூடியிருந்து உண்ட பின்னும் மிகுந்து கிடந்தது. பெரிய மேளங்களும் மண வாத்தியங்களும் ஒலித்தன. அறுகங் கிழங்கை நூலாற் சுற்றிச் செய்த தெய்வ உருவம் வாழையிலையின்மீது வைத்துப் பூவால் அலங்கரிக்கப்பட்டது. விளக்குகள் கொளுத்தப்பட்டன. கலியாணத்தைப் பார்ப்பதற்குப் பூப்போன்ற அழகிய கண்களுடைய பெண்கள் வந்து கூடினார்கள். புதிய நீர்க்குடங்களைத் தலையிலும், கையில் புதிய வாயகன்ற பாலிகைச் சட்டிகளையுமுடைய பெண்கள் வந்தார்கள். அப்பொழுது பெண்கள் ஆரவாரஞ் செய்தனர். அவர்கள் அப்பாத்திரங்களை ஒருவர் கையிலிருந்து மற்றவர் கைக்கு மாற்றினர். புதல்வரைப் பெற்றோரும் தாலி தரித்தோருமாகிய அழகிய நான்கு முதுபெண்கள் அந்நீர்க் குடங்களை வாங்கி மணமகளை முழுக்காட்டினர். மணமகளின் கரிய கூந்தல் நீருடன் வந்த நெல்லாலும் மலராலும் மறைந்தது. அம்முது பெண்டிர் "நீ கொண்டானுக்கினியளாய் அவனைப்பேணி இனிது வாழுதி" என வாழ்த்தினர். மணமகளுக்கு ஆபரணங்கள் நிறையப் பூட்டப்பட்டன. அவ்வாபரணப் பொறையைப் பொறுக்கமாட்டாமையால் அவளுக்கு வியர்வை தோன்றிற்று. அழகிய பெண்கள் விசிறி கொண்டு வீசினர். குற்றமில்லாத முகூர்த்தம் வந்தது. தமர் விரைவில் வந்து கிழத்தியைக் கிழவனுக்கு அளித்தார்கள்.

மருதநிலத்தே ஆடல் பாடல்களிற் றேர்ந்த கூத்தியர்

விறலியர் முதலியோர் வாழ்ந்தனர். இவர்கள் பரத்தைமை யினர். இவர்கள் நிமித்தம் மருதநிலத் தலைவன் தலைவியர் களுக்கிடையில் ஊடல் புலவி முதலிய பிணக்கங்கள் நேர்வ துண்டு. கைக்கிளை பெருந்திணை என்னும் இருவகைக் காதல்களும் சங்கநூல்களிற் காணப்படுகின்றன. கைக்கிளை என்பது தம்மாற் காதலிக்கப்பட்ட மகளிர் தம்மைக் காதலி யாதவிடத்து மைந்தர் தம் காதலை வெளிப்படுத்திப் பல கூறுதல். பெருந்திணையாவது ஆடவன் காதலியாதவிடத்து அவனைக் காதலிக்கும் ஒருத்தி காதல் மிகுதியால் பல மொழிந்து கரைதல். தாம் காதலித்த மகளிர் தம்மைக் காத லித்து மணக்க உடன்படாதவிடத்து மைந்தர், பனங்கருக் கினாற் செய்து மணிகட்டிய குதிரைமீது ஏறி ஆவிரம்பூ எருக்கம்பூ என்பு மாலைகளைச்சூடிப் பெண்ணின்வடிவை ஓலை யில் எழுதிக் கையிற் பிடித்து (சிறுவர் இழுக்க) வீதியில் ஊர்தலும் பெருந்திணை எனப்படும். இது நல்லது இனியது எனப் புலவர் நாட்டிய புலனெறி வழக்கென்ப.

## போர்

தமிழ்நாட்டு மன்னர் பிற அரசரைக் கீழ்ப்படுத்தித் தம் மாணையை மேம்படுத்தற்பொருட்டுச் செருக்கள் பல மலைந் தனர். ஒவ்வோர் அரசனுக்கும் வெவ்வேறு கொடியும் மாலையும் இருந்தன. போருக்குச் செல்லும்போது வீரர் தத்தம் வேந்தர்க்குரிய மாலைகளையணிவர். மாற்றரசரின் நிரைகளைக் கவர்தலே முற்கால அரசர் போர் தொடங்கும் முறையாகும். துரியோதனன் விராடனின் நிரையைக் கவர்ந்தது பாரதத்திற் கூறப்படுகின்றது. மாற்றரசர் நிரை யினைக் கவரச் செல்லும் வீரர் தம் முடியிடத்தே வெட்சிப் பூவைச் சூடுவர். ஆகவே நிரை கவர்தல் வெட்சியெனப்

பட்டது. நிரை கவர்தலன்றிப் பகையரசனின் நிலத்தைக் கவர்தற்பொருட்டுப் படையெடுத்துச் செல்லுதல் வஞ்சி யென்றும், கோட்டையை முற்றுகையிடுதல் உழிஞை என் றும், எதிர்ந்துப் பொருதல் தும்பை என்றும், வெற்றிபெறு தல் வாகை என்றுங் கூறப்பட்டன. அவ்வப்போது வீரர் அவ் வப் பூக்களைச் சூடிய காரணத்தால் அவ்வொழுக்கங்களுக்கு இப்பெயர்கள் இடப்பட்டன.

புலவோர் அரசனின் புகழைப் பாடுதல் பாடாண் என வும், உலக நிலையாமையை உணரும் பகுதி காஞ்சி எனவும் பட்டன. போர் செய்யும் நிலம், களரி பறந்தலை முதுநிலம் களம் எனப்பட்டது. படைகள் உண்டை ஒட்டு அணி தானை எனப் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு இருந்தன. முன்னணிப்படை அக்கம் கொடிப்படை தார் தூசி நிரை என்றும் பின்னணிப்படை கூழை என்றும் வழங்கின. பிற் காலங்களில் தேர் யானை குதிரை காலாளெனப் படைகள் நான்காகப் பிரிக்கப்பட்டன.[1] குதிரைப்படை ஆரியர் வருகைக்குப்பின் தோன்றியிருத்தல் கூடும். மகஞ்சோதரோ மக்கள் குதிரையை அறியார் எனப்படுகின்றது.

---

1. "ஆயிரக்கணக்கான போர் வீரர்கள் எப்பொழுதும் ஆயத்த மாக அரசனது கட்டளைகளை எதிர்பார்த்து நாட்டைக் காத்துவந்த னர். சிற்றரசர்கள் எல்லோரும் கப்பங்கட்டி வந்ததோடு வேண்டிய பொழுது துணைப்படையு முதவக் கடமைப்பட்டிருந்தனர். தேர், யானை, குதிரை, காலாள் எனப் படை நால்வகைப்பட் டிருந்தது. யானைகள் முன்வரிசையிலும், குதிரைகள் இருபுறங்களிலும், காலாள் பின்வரிசையிலுமாகச் சண்டையில் அணிவகுக்கப்பட்டு நின்றன. அவை பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதியும் ஒரு மகா சாமந்தன் அதிகாரத்தின்கீழ் இருந்தன. அம் மகா சாமந்தரும் ஒரு மகா சாமந்தாதிபதியின் கட்டளைக் குட்பட்டிருந்தனர். சகல போர் விஷயங்களையும் கவனிப்பதற்குச் சந்திவிக்கிரகி என்னும் மேலான அதிகாரி ஒருவன் இருந்தான். சண்டையில் ஈட்டி, கத்தி, வேல்,

யானை வீரன் அம்பு துளைக்கமுடியாத புலித்தோற் கவசம் பூண்டு யானைமீது வீற்றிருந்தான். யானை கருங்கடலிற் செல்லும் நாவாய் போலவும் உடுக்கூட்டத்தின் நடுவே செல்லும் திங்களைப்போலவும் சென்றது. அதனைச் சூழ்ந்து போர் மறவர் சுறுக்கூட்டங்கள் போன்று சென்றனர். யானைகள் நன்றாகப் பழக்கப்பட்டுக் கந்துகளிலும் தறிகளிலும் ஆலையிடத்தே கட்டப்பட்டன. அவைகளுக்கு வெல்லத்தோடு கலந்த அரிசி ஊட்டப்பட்டது. யானைகளும் குதிரைகளும் பழக்கப்படுமிடம் செண்டுவெளி எனப்பட்டது. குளங்களிற் குளிப்பாட்டியபின் அவைகளின் முகம் நிறப் பொடிகளால் அலங்கரிக்கப்பட்டு, நெற்றி, ஓடை என்னும் நெற்றிப் பட்டத்தால் அலங்கரிக்கப்பட்டது. தேரில் இரண்டு அல்லது நான்கு குதிரைகள் பூட்டப்பட்டன. தேரோட்டுவோன் வலவன் அல்லது பாகன் எனப்பட்டான். தேரில் பலவகை உருவங்கள் வெட்டப்பட்டிருந்தன. அது பலவகை நிறம் பூசிய தடிகளாலும் சீலைகளாலும் அலங்கரிக்கப்பட்டது. அதன்மீது துகிற் கொடிகள் அசைந்தன.

வீரர் பலவகை ஆயுதங்களைப் பயன்படுத்தினர். அவற்றுட் பல கற்காலந் தொட்டு மாறுபடாமல் வந்தன. அவை எறுழ், தண்டு, வில், கொக்கரை, சிலை, தடி, தவர், குணில்

---

வில், அம்பு முதலிய பல ஆயுதங்கள் உபயோகிக்கப்பட்டன. போர் தொடங்குமுன் வீரர் வீரபானஞ் செய்வது வழக்கம். அதனால் வீரனொருவனே ஆயிரம் பகைவரை எதிர்க்க வல்லவனாவான். யானைகளுக்கும் மதவுண்பித்தலுண்டு. அவையும் வெறிகொண்டு மிதித்தும் தவைத்தும் எதிரிகளைச் சின்னபின்னஞ் செய்யும். போர் வீரர் மனைவியர் கணவரோடு போர்க்களத்துக்குச் செல்வது வழக்கம். சேனாபதி ஒருவன் சண்டையில் முதுகிட்டுப்போனால் அதற்குத் தண்டனையாகப் பெண்வேடந் தரிப்பித்து அவனை அவமானப்படுத்துவர்—(சளுக்கிய) விக்கிரமாதித்தன்—பக். 50—அ. வா. வெங்கட்டராம ஐயர், M.A., L.T.



1



2

1, 2. தென்னிந்திய கடவுளர்கையில் இருக்கும் வீணை



3

3. உருத்திரவீணை



சாஞ்சி, அமராவதிச் சிற்பங்களில் காணப்படும் வீணை.

—பக்கம் 61

இப் படங்கள் வீணை எவ்வாறு வளர்ச்சி யடைந்துள்ளதென்பதைக் காட்டுவன. 'வயலின்' (Violin) என்னும் வீணை எவ்வாறு வளர்ச்சியடைந் துள்ளதென்பதை அமராவதிச் சிற்பத்திலுள்ள வீணையின் வடிவைக்கொண்டு நன்கு உய்த்தறிய லாகும். பழந்தமிழரின் குடியேற்ற நாடாகிய கிரேத் தாவில் (Crete) 'வயலினை'ப் போன்று வில்லின் உதவியால் ஒலிக்கப்படும் வீணைகள் இருந்தன. அவ் வீணைகளின் வடிவும் இன்றைய 'வயலினின்' வடிவுபோன்றதே. 'Palace of Minos' என்னும் நூலில் பழைய கிரேத்தா மக்களுடைய வீணையின் படம் காணப்படுகின்றது. "விண்" என ஒலிக்கும் நரம்பின் ஓசை பற்றி வீணை என்னும் பெயர் உண் டாயிருக்கலாம்.



புத்தர் காலத்துக்கு முற்பட்ட யாழ்
(வட இந்தியாவில் வழங்கியது; சாதகக் கதைகளில் கூறப்படுவது இவ்வகை யாழே)



எகிப்தில் வழங்கிய யாழ்
(என்சைகிளோபீடியா பிரித்தானிக்காவிற் கண்டது)

நரம்பை வில் நாண் போன்று வளைந்த தடியில் பூட்டி ஒலிக்கும் முறையிலிருந்து யாழ் உண்டாயிற்று. பழைய சுமேரியா, அயர்லாந்து, கிரீஸ், உரோம், எகிப்து, தமிழகம் முதலிய நாடுகளில் வழங்கிய யாழ்களை ஒப்பிட்டு நோக்குமிடத்து ஒரே அடிப்படைக் கருத்தினின்றே யாழ் செய்யும்முறை எழுந்ததென்று நன்கு விளங்கும். இசை நூல் வல்ல எம். ஆபிரகாம் பண்டிதரவர்கள் இசையும் இசைக் கருவிகளும் தமிழகத்தினின்றே மேற்குத் தேசங்களுக்குச் சென்றனவென்று ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

—பக்கம் 61

முனி முதலியன. நூற்றுக்கணக்கான ஆயுதங்களைக் குறிக்கும் தமிழ்ப்பெயர்கள் காணப்படுகின்றன.[1] அவை கைவிடும் படை கைவிடாப்படை என இருவகையின. வில் நாணியில் அம்பு வைத்தெய்யுமிடம் உடுவெனப்பட்டது. தற்காப்புக்குரிய ஆயுதம் கேடகம்; அது கிடுகு கடகம் தட்டு பரிசை பலகை பறை வட்டணை பட்டம் தோல் தோற்பாரம் எனப் பலவகையினது. மெய் காக்கும் சட்டை மேலகம் அரணி ஆசு எனவும், கைக்கவசம் கைப்புடை எனவும் கூறப்பட்டன.

## இசைக் கருவிகள்

போரிலே யானை குதிரை காலாள் முதலிய படைகளை ஊக்கமூட்டும் பொருட்டுப் பலவகை வாத்தியங்கள் ஒலிக்கப்பட்டன. இயம் வாத்தியம் வாச்சியம் என்பன இசைக்கருவிகளைக் குறிக்க வழங்கும் பொதுப்பெயர்கள். அவை தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி மிடற்றுக்கருவி என நால்வகைப்படும். குரல், துத்தம், கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன பாடுமிடத்துப் பிறப்பிக்கப்படும் ஏழு தமிழ் இசைகளாகும். ஊதப்படுவனவற்றுள் குழல் முதன்மையுடையது. பனை ஆம்பல் கொன்றை முல்லை முதலிய பலவகைக் குழல்களும் இயங்களும் வழங்கின. ஊதப்படும் பெரிய

---

1. **வாள் :** உவணி, எதி, கடுத்தலை, துவட்டி, நவிர், நாட்டம், வஞ்சம், வாள்; **குறுவாள் :** குறும்பிடி. சுரிகை, கத்தி; **வளைந்த வாள் :** கோணம், ஈட்டி, இட்டி, கழுக்கடை; **வேல்வகை :** எயில், அரணம், எஃகம், எஃகு, குந்தம்; ஞாங்கர், உடம்பிடி, விட்டேறு; **சூலப்படை:** கழு, காழ்; **கண்டகோடரிவகை:** மழு, கணிச்சி, குந்தாலி, குளிர், தண்ணம்; **அம்பு வகை :** அம்பு, கணை, கதிரம், கதிர், கோ, கோல், தொடை, தோணி, பகழி, பள்ளம், புடை, வண்டு, வாளி; **நாண்வகை :** நாணி, பூரம், ஆவம், கொடை, நாரி, நரம்பு, பூட்டு.

வாத்தியங்கள் காகளம், அம்மியம், சின்னம், கொம்பு, கோடு இரலை வயிர் என்பன.

நரம்புக் கருவிகளில் முதன்மையுடையது யாழ். ஒவ்வொரு நிலத்தும் ஒவ்வொரு வகை யாழ் வழங்கிற்று. நாலு முதல் பதினன்கு பதினேழு இருபத்தொரு நரம்புகளை யுடைய யாழ்கள் வழக்கில் இருந்தன. இவை கை விரல் களினல் தடவியும் தெறித்தும் வாசிக்கப்பட்டன. பழைய யாழ்கள் உருத்திர வீணை போன்ற வடிவினவாய் மேல் நாடு களில் வழங்கிய 'காப்' (Harp) என்னும் யாழ் போன்று நரம்பு கட்டப்பட்டன என்று கருதலாம். இவ்வகை யாழ் கள் பழைய எகிப்தில் வழக்கிலிருந்தன. 'காப்' போன்ற யாழ்கள் பழைய சுமேரியராலும் பயன்படுத்தப்பட்டன.

பறைகள் பலவகையின.[1] தடாரி உடுக்கை முதலியன பாணர் கையில் இருந்தன. தட்டை கரடிகை என்னும் பறை கள் கரடி கத்தும் ஓசையைப் பிறப்பித்தன. பாலை குறிஞ்சி மருதம் செவ்வழி என்பன அக்காலத்து வழங்கிய பண்கள். இசைநுணுக்கம் பேரிசை சிற்றிசை முதலிய நூல்கள் தமி ழிசை யிலக்கணங் கூற எழுந்தன என்று பழைய உரைகள் கூறுகின்றன. அந்நூல்கள் இஞ்ஞான்று இறந்துபட்டன. அரசரும் பெருமக்களும் வேட்டையாடுமிடத்து மேற்கூறிய பறைகளைப் பயன்படுத்தினர்.

## நாடு நகரங்களும் மக்கள் குடியிருப்புகளும்

அரசன் வாழும் கோட்டையைச் சுற்றிப் பேட்டைகள் இருந்தன. ஒவ்வொரு பேட்டையிலும் ஒவ்வொரு தொழில் புரிவோர் வாழ்ந்தனர். இவ்வாறு பல குடியிருப்புகள்

1. முரசு, பேரிகை, ஆகுளி, சல்லரி, சல்லிகை, கிணை.

நகரைச் சூழ்ந்திருந்தன. பேட்டைகளைச் சுற்றி நெல்வயல்கள் இருந்தன. செல்வப் பெருமக்கள் வீடுகள் மாடங்கள் அல்லது மாளிகைகள் எனப்பட்டன. இவை மாடிகளுடையனவாய்ச் செங்கல்லினாலும் மரத்தினாலும் கட்டப்பட்டன. இறப்பு, இறை, தாழ்வாரம், முன்றில், முற்றம், நிலாமுற்றம், உத்திரம், தூலம், சுற்றுவாரி, தாழ், துடை, முகடு, விடங்கம், திண்ணை, குறடு, ஒட்டுத்திண்ணை முதலியன வீட்டின் உறுப்புக்களிற் சில. வீட்டின் முன்னே திண்ணையிருந்தது. திண்ணைக்கு முன்னாற் குறடிருந்தது. திண்ணைகள் மண் கரி சாணி என்பவைகள் கலந்து மெழுகி அழுத்தஞ் செய்யும் கருவியால் மினுக்கப்பட்டன. வீடுகளுக்குக் கதவுகளும் நிலைகளும் சாளரங்களும் இருந்தன. வீடுகளின் கழிவுநீர் வெளியே செல்லச் சாக்கடை அல்லது சாலகங்களிருந்தன. வீட்டுச் சுவர்களில் முக்கோண வடிவான மாடாக்கள் இருந்தன. இவைகளில் மண்ணினால் அல்லது உலோகத்தினாற் செய்த கைவிளக்குகள் ஏற்றி வைக்கப்பட்டன. வீட்டிற்குப் பின்னால் கிணறு இருந்தது. கிணற்றுக்கு அப்பால் கொல்லையும், கொல்லையில் ஆடுமாடு நிற்கும் கொட்டிலும், அப்பால் வயலுமிருந்தன.

உரல், உலக்கை, அம்மி, திருவை, குழவி, ஆட்டுக்கல், முறம், சல்லடை, சட்டி, பானை, அகப்பை, மணை, கட்டுப்பெட்டி, கட்டில், தொட்டில், ஊஞ்சல் (வீசுபலகை) உறி, (சுமைதூக்கும்) காவடி, சும்மாடு, கணப்பு (தீச்சட்டி),பரண், ஞெலிகோல் (நெருப்புண்டாக்குந் தடி), நிறைகோல், கவண் பாய் முதலியன வீட்டுப் பொருள்களிற் சில.

வறியோர் குடிசைகளிலும் குடில்களிலும் வாழ்ந்தனர்,

சுவர்கள் தடிகளை நட்டு மண்ணை எறிந்து எடுக்கப்பட்டன. அவை பெரும்பாலும் வட்டமானவை. கூரையின் முகட்டில் கலசம் வைக்கப்பட்டது. இம்முறையைப் பின்பற்றியே ஆலயங்களும் கட்டப்பட்டன. மன்றம் என்னும் பெருந்தெருக்களும் கோணம் என்னும் குறுந்தெருக்களும் இருந்தன. குறிஞ்சிநிலக் கிராமம் சிறுகுடி என்றும், முல்லை நிலக் கிராமம் பாடி சேரி என்றும், மருதநிலக் கிராமம் ஊர் என்றும், நெய்தல்நிலக் கிராமம் பாக்கம் என்றும், பாலைநிலக் கிராமம் பறந்தலை என்றும் வழங்கப்பட்டன. அவைகளில் கீழோரும் மேலோரும் வாழ்ந்தனர்.

## உடை

பருத்தி இந்தியாவில் விளைவது. பஞ்சிலிருந்து நூலும் நூலிலிருந்து ஆடையும் நெய்யப்பட்டன. நீளமாக நெய்யப்பட்ட ஆடைகள் துண்டுகளாகக் கிழிக்கப்பட்டன. ஆகவே அறுவை, துண்டு, துணி என்பன ஆடையின் பெயர்களாக வழங்கின. பட்டு, மயிர் என்பவைகளாலும் ஆடை நெய்யப்பட்டது. நூலிழைகள் சென்ற இடமே தெரியாத மெல்லிய ஆடைகள் அக்கால மக்களால் அணியப்பட்டன. பலவகை ஆடைகளும் உடைகளும் அக்காலத்து வழங்கின என்பதற்கு அவைகளைக் குறிக்க வழங்கிய பெயர்களே போதிய சான்று[1] புடைவைகளுக்குப் பலவகைச் சாயங்கள் தோய்க்கப்பட்டன.

1. நூல், இழை, சாடு, தொடர், நுவணம், பனுவல், பிசின், பன்னாடை, நெய்யரி, மரவுரி, ஆசினி, இலக்கம், சீரம், சீரை, துகில், அறுவை, துணி, துண்டு, ஆசாரம், ஆசிடை, ஆடை, இடைதல், கலிங்கம், உடுக்கை, உடை, ஏடகம், ஒலியல், கந்தை, கத்தியம், கப்படம், கலை, கடாசம், காழகம் கூறை, கோடி, சம்பளம், சாடி, சிற்றில், சீரை, சூடி, சேலை, தானை, தூசு, தூட்டி, தூரியம், கோடிகம், மீடியல், புடைவை, படாம், பட்டம்.

கரம்பு, பணி, பரணம், பாளிதம் என்பன பட்டாடைகள் சில வற்றின் பெயர்கள். கம்பளியினுற் செய்யப்பட்ட ஆடைகள் மயிரகம், உயிரகம் எனப்பட்டன. ஆடைகள் அழகிய கரை களும், பூவேலைப்பாடுகளும், கண்கவர் வனப்பும் உடையன வாயிருந்தன. ஆடவரும் மகளிரும் கிழித்துத் தைக்கப் படாத உடைகளையே பயன்படுத்தினர். ஊசி, இழை, வங்கி, சன்னல், தையல் முதலிய சொற்களால் அக்காலத்தவர் தையற்றெழிலை அறியார் என்று கூறமுடியாது. இறவுக்கை என்பது இரண்டாயிரம் ஆண்டுகளின்முன் தமிழ் அரச ருக்கு மெய்காப்பாளராக அமர்ந்திருந்த கிரேக்க உரோமன் அணங்குகளால் தமிழ்நாட்டிற் புகுத்தப்பட்டது. ஏவலாட் களும் வீரரும் சட்டை இட்டனர். குப்பாயம் தைப்பை மெய்ப்பை என்பன சட்டையின் பெயர்கள். மக்கள் (தலைப்) பாகை குடை செருப்பு மிதியடி முதலியவைகளைப் பயன் படுத்தினர்.

## ஆடை ஆபரண அலங்காரம்

தமிழ் மக்கள் உடைகளாலும் ஆபரணங்களாலும் தம்மை நன்கு அலங்கரித்தனர். வீட்டுச் சுவர்களில் அழகிய சித்திரங்கள் வரையப்பட்டன. வீட்டு வாயில்களில் இன் றும் பெண்கள் கோலமிடுவது முற்கால வழக்குப் பற்றியது. செல்வப் பெருமக்கள் இல்லங்களில் வண்ண மகளிர் என வீட்டையும் பெண்களையும் அலங்கரிக்கும் பெண்கள் இருந் தார்கள். வீட்டிற் பயன்படுத்தும் ஒவ்வொரு பொருளும் வேலைப்பாடுடையதாகச் செய்யப்பட்டது. வீட்டுக் கதவு நிலை கைமரங்களின் அந்தலை தூண் என்பனவெல்லாம் அழகிய வேலைப்பாடுகளால் அழகு செய்யப்பட்டன. சுருங் கக் கூறுமிடத்து மக்கள் பயன்படுத்திய எந்தப் பொருளும்

அழகிய வேலைப்பாடின்றிச் செய்யப்படவில்லை. தமிழ்நாட்டுச் சிற்பிகள் அழகிய சிற்பங்கள் அமைக்குந் திறமைகளையெல்லாம் கோவில்களிற் காட்டியுள்ளார்கள்.

மகளிர் கூந்தலைப் பலவாறு கோதியும் பின்னியும் முடிந்து பலவகைத் தலை அணிகளை அணிந்து பூக்களால் வேய்ந்தனர். மேனியைச் சந்தனக்குழம்பு குங்குமம் முதலியவைகளால் அலங்கரித்தனர்;[1] மான்மதம் முதலிய வாசனைப் பொருள்களைப் பூசினர்; காதிற் றுளையிட்டுப் பொன்னோலையணிந்தனர். மணம் முடித்த பெண்கள் தாலி அணிந்தனர். முத்துமாலை, பவளமாலை, பொற்சங்கிலி, பாதசரம், சரப்பளி, நெற்றிச்சுட்டி, சங்குவளை, பொன்வளை, மோதிரம் முதலிய பல அணிகலன்கள் அணிந்துகொள்ளப்பட்டன. யானை குதிரை எருது முதலியவற்றிற்கும் அணிகள் அணியப்பட்டன.

## பொழுதுபோக்கு

விழாக்காலங்களில் ஆடல்பாடல் உண்டாட்டுக் களியாட்டு முதலிய கொண்டாட்டங்கள் நடந்தன. வேட்டையாட்டம், மற்போர், வாட்போர், சிலம்பம், தேர் யானை மாட்டுப் பந்தயங்கள், அம்மானை பந்து [2]ஊஞ்சல் விளையாட்டுகள், காடைப்போர், கௌதாரிப்போர், ஆட்டுப்போர் முதலியன அக்கால மக்கள் பொழுதுபோக்குகள். இசைபாடுதலும் பொழுதுபோக்குகளில் ஒன்று. பழைய குறிஞ்சிப்பண் இன்று குறிஞ்சி இராகமாகவும், மருதம் கேதார இராகமாக

---

1. கொடி பல வெழுதிய கோலத் தோளினர்—பெருங்கதை.

2. பிண்டிக்—கட்புடைக் கவிசினை நற்புடை நான்ற—தாழைக் கயிற்றூசல் விருப்புற் றாக்கியும்—ஷை

வும், நெய்தல் புன்னுகவராளியாகவும் வழங்குகின்றன. ஒவ்வொரு கருமங்களுக்கும் ஏற்ற வெவ்வேறு பறைகள் முழக்கப்பட்டன. மாடு கவரச் செல்வோர் ஏறுகோட் பறையும், வெறியாடுவோர் முருகியமும், திருமணம் கொண்டாடுவோர் மணமுரசும், வேளாண்மையறப்போர் நெல்லரிகிணையும், தேரிழுப்போர் தேரோட்டுப் பறையும், அரசனது அல்லது தெய்வத்தின் ஊர்வலத்தை அறிவிப்போர் புறப்பாட்டுப் பறையும், மீன் பிடிக்கச் செல்வோர் மீன்கோட் பறையும், சூறை அடிப்போர், சூறைகோட் பறையும் கொட்டினர். ஒவ்வொரு வாத்தியமும் வெவ்வேறு ஓசையை எழுப்பின.

கூத்துகள் பல வகையின. களிகுனிப்பு எனப்பட்ட கூத்து, ஒரு பாட்டிலுள்ள பொருளை ஆட்டத்தாலும் சைகைகளாலும் காட்டுதல். இவ் வழக்குப்பற்றிய கோவிற் கிரியைகள் இன்றும் நடைபெறுகின்றன. பரதநாட்டியம் என வழங்குவதும் இதுவே. கூத்த மகளிர், கூத்தியர் எனப் பட்டனர். இப் பெயர் பரத்தையரைக் குறிப்பதாயிருக்கின்றது. சிறுமியர், கும்மி, தெள்ளேணம், சாழல், ஊரை முதலிய ஆடல்கள் புரிந்து களித்தனர். சிறுவர் கிட்டிப் புள் விளையாடினர். இது மேல் நாட்டவரின் சாட்டைப் பந்தடி (Cricket) விளையாட்டுப் போன்றது.

பாணர் யாழ் மத்தளம் முதலியவைகளுடன் அலைந்து திரிந்து அரசர், பெருமக்கள் வாயில்களில் பாடினர். வேடர் வலையேற்றி மான் பன்றி முதலிய விலங்குகளைப் பிடித்துப் பொழுதுபோக்கினர். மற்போர் பொதுவான பொழுது போக்குகளில் ஒன்று.

## போக்குவரவு

அக்கால மக்கள் பலவகை வண்டிகளைப் பயன்படுத்தினர். வண்டி, ஊர்தி, ஒழுகை, சகடு, சாகாடு, வையம் முதலிய பெயர்களால் இது அறியப்படும். வளையம், வட்டில், வட்டம், வட்டணை, வட்டு, வணங்கு, வணர், வளி, வள்ளம், வள்ளி, அச்சு, ஆணி முதலிய வண்டியின் உறுப்புகளை உணர்த்தும் பெயர்களால் அவர்கள் வண்டியின் பயனை நன்கு அறிந்திருந்தார்களென விளங்குகின்றது. வண்டி பெரும்பாலும் வாணிகத்தின் பொருட்டே பயன்படுத்தப் பட்டது. அரசரும் பெருமக்களும் தேர்களிலும் பல்லக்கு களிலும் சென்றனர்; நீரிலாயின் ஓடங்களிற் சென்றனர். தோணிகளின் முகப்பு யானை குதிரை சிங்கம் முதலியவை களின் தலைகள்போலச் செதுக்கப்பட்டிருந்தது. அக்காலம் பலவகைத் தோணிகள் வழங்கினவென்பதற்குக் கப்பல், ஓடம், அம்பி, தோணி, தெப்பம், பரிசில், படகு, கலம்,பஃறி, சதா, போதம், தொள்ளம், பகடு, பட்டிகை, பட்டி, படுவை, புணை, மிதவை, வள்ளம், திமில் முதலிய பெயர்களே சான்று.

## உணவு

தமிழ்மக்கள் ஊனைக் கறியாகவும் தாவர வகைகளையும் தானியங்களையும் முக்கிய உணவாகவுங்கொண்டனர். அவர்கள் இறைச்சியை மிளகுதூள் இட்டு ஆக்கிக் கறியாகப் பயன்படுத்தினர். மிளகாய் பிற்காலத்தில் இந்தியாவோடு வாணிகம் செய்த ஐரோப்பிய மக்களாற் கொண்டுவரப் பட்டது. இது தென்னமெரிக்கப் பயிர். ஆகவே அதற்கு இடுகுறிப் பெயர் இல்லை. மிரியல், கறி, கலினை, காயம், திரங்கம் முதலிய பெயர்கள் மிளகைக் குறிக்கும். கிரேக்கரும்

உரோமரும் இந்தியாவினின்றும் அதிக மிளகைக் கொண்டு சென்றனர். அவர்கள் மிளகைப் பிப்பிலி என வழங்கினர்.

தமிழ்மக்கள், தாளிதக் கறி (குய்), பொரிக்கறி, வறை, துவட்டல், துவை, புளிங்கறி, காடி, ஊறுகாய் முதலிய பல வகைக் கறிகளை உண்டனர். தமிழ்மக்களின் முக்கிய உணவு நெல். நெல் புழுக்கி உலர்த்திக் குத்தி அரிசியாக்கப்பட்டது. அவ்வாறு குத்தப்பட்ட அரிசி புழுங்கலரிசி எனப்பட்டது. அரிசி சோருக அட்டு உண்ணப்பட்டது. அடிசில், அமலை, அமுது, அயினி, அவி, அவிழ், அழுப்பு, உணா, ஊண், உண்கூழ், சதி, சாதம், சொன்றி, சோறு, துப்பு, தோரி, பருக்கை, பாத்து, பிசி, புகர், புழுக்கு, புற்கை, பொம்மல், பொருகு, மடை, மிசை, மிதவை, மூரல், வல்சி என்பன சோற்றின் பெயர்கள். ஒவ்வொரு பெயரும் வெவ்வேறு வகையாகச் சமைக்கப்பட்ட சோற்றை உணர்த்தலாம். பருப்போடு சேர்த்துப் பொங்கப்பட்ட சோறு பொங்கல் எனப்பட்டது. களி, கூழ், துழவை, கஞ்சி, நீராரம், தோசை, அடை முதலியன வெவ்வேறு வகையாகச் சமைக்கப்பட்ட உணவுகளாகும். அப்பம், பிட்டு, அஃகுல்லி, இலையடை, நொலை, மெல்வடை, பொல்லல், இடி, சஃகுல்லி, நுவணை, ஒச்சை, துவை, சிடை, வடை முதலியன பணியார வகையுட் சில. மக்கள் வாழும் இடங்களுக்கு இடம், உண்ணப்படும் தானியங்கள் வேறுபட்டன. முல்லை நிலமக்கள் வரகு, சாமை, முதிரை முதலிய தானியங்களையும், குறிஞ்சி நிலமக்கள் ஐவனம் தினை மூங்கிலரிசி முதலியவைகளையும், மருதநில மக்கள் செந்நெல், வெண்ணெல் முதலியவைகளையும், நெய்தல் நிலமக்கள் மீனுக்கும் கருவாட்டுக்கும் மாற்றிய தானியங்களையும் உணவாகக் கொண்டனர். தேனுந் தினைமாவும் சுவையுள்ள உணவாகும். மருத நிலமக்கள் தேனுக்குப்

பதில் வெல்லத்தைப் பயன்படுத்தினர். அவர்கள் கருப்பஞ் சாற்றைக் காய்ச்சிச் சர்க்கரை கற்கண்டு முதலியவைகளைச் செய்தனர். பால் தயிர் மோர் வெண்ணெய் நெல் என்பன மக்களால் விரும்பி உண்ணப்பட்டன. பலவகைப் பழங்கள் புசிக்கப்பட்டன. பழந் தமிழர் பலவகை மதுவை அருந்தினர். உப்பு அதிகம் விளைவிக்கப்பட்டது. உப்பு விளையும் வயல்கள் உப்பளம், அளக்கர், உவர்க்களம், கழி எனப்பட்டன. நிலங்கள் நன்செய் புன்செய் எனப் பிரிக்கப்பட்டிருந்தன. திருத்தி விளைவிக்கப்படாத நிலம் தரிசு எனப்பட்டது. நன்செய் புன்செய் நிலங்கள் செய் எனப்பட்டன. வயல், அகணி, கம்பலை, கழனி, கைதை, கோட்டம், செறு, தடி, பணை, பண்ணை, பழனம், பானல், புலம் முதலியன வயலின் பெயர்கள். பயிர்ச் செய்கை வேள்ஆண்மை எனப்பட்டது[1]. வேள் - நிலம்; ஆண்மை - அரசு அல்லது ஆளுந்தன்மை. வேளாண்மை எல்லாத் தொழில்களிலும் உயர்ந்ததாகக் கருதப்பட்டது. பெரிய நிலத்தை உடையோர் வேள் அல்லது வேளிர் எனப்பட்டனர். இவர்கள் குறுநில மன்னர்களாகவும் இருந்தனர். வேளாண்மை என்பது தமிழில் கொடை, ஈகை என்பவைகளைக் குறிக்கவும் வழங்கும். வேளாண் மாந்தர் இயல்புகள் பத்து. அவை, ஆணைவழி நிற்றல் (சத்தியம் கடைப்பிடித்தல்), அழிந்தோரை நிறுத்தல், கைக்கடனாற்றல் (மற்றவர்களைக் கடமைப்படுத்தல்), கசிவு அகத்துண்மை, ஒக்கல் போற்றல், ஓவா முயற்சி, மன்னிறை கருதல் (அரசனுக்குச் செல்லவேண்டிய கடமையைச் செலுத்தல்), ஒற்றுமை கோடல், விருந்து புறந்தருதல், திருந்திய வொழுக்கம் என்பன. வயல் வேலைக்குரிய ஒவ்வொரு தொழி

1. வெள்ளத்தை ஆள்பவர் என்னும் பொருளில் வரும் வெள்ளாளரில் வெள் வெள்ளத்தைக் குறிக்கும்.

லுக்கும் தமிழ்ப்பெயர்கள் காணப்படுகின்றன. கொத்தல், உழக்கல், மிதித்தல், உழுதல் முதலியன நிலத்தைப் பண்படுத்தும் வினைகளின் பெயர்கள். வேளாளனது முக்கிய தொழிற்கருவி கலப்பை. இதை, உழுபடை, கலனை, நாஞ்சில், தொடுப்பு, படை, படைவாள் என்பன கலப்பையின் பெயர்கள்.

வயல்களுக்கு நீர் ஆற்றிலிருந்து பாய்ச்சப்பட்டது. ஆறுகளுக்கு அணைக்கட்டுகள் இருந்தன. ஆற்றுநீர் கால்வாய் அல்லது கால்வழியே சென்றது. கிணறு குளங்களிலிருந்து நீர் ஏத்தம், கபிலை அல்லது இறை கூடையினால் இறைக்கப்பட்டது.

## கைத்தொழில்

உலோகங்களில் வேலை செய்வோர், கம்மாளர், அக்கசாலையர், அறிவர், ஓவர், கண்ணுளர், கண் வினைஞர், கம்மியர், கொல்லர், கருமார், தட்டார், துவட்டர், புலவர், புனையர், வித்தகர், வித்தியர் எனப்பட்டனர். இவர்கள் இரும்பு உருக்கு, செம்பு, வெண்கலம், வெள்ளி, பொன் முதலியவற்றில் வேலை செய்தனர். பழைய சமாதிக் குழிகளில் காணப்பட்ட நகைகள் ஏனங்கள் முதலியன அக்காலத்தில் உலோகங்களில் வேலை செய்வோரின் திறமையைக் காட்டுகின்றன. பெரிய உலோகத் துண்டுகளை அடித்துத் தகடாக்கிப் பெரிய ஏனங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. உலோகத் தகடுகள் அடர் எனப்பட்டன. தையலர், அணிகலன்களை மிக விரும்பினர். ஆகவே அணிதல் அழகு செய்தலை உணர்த்த ஆர், சூடு, புனை, பூண், மலை, மிலை, மிளை, வேய், எய், வெய் எனப் பல சொற்கள் காணப்படுகின்றன. கூடைநர் என்போர்

சங்கை அறுத்து அழகிய வளைகளைச் செய்தனர். குயினர் இரத்தினக் கற்களிற் றுளையிட்டனர்.

ஆடை நெய்வோர் கம்மியர் சேணியர் காருகர் எனப் பட்டனர். நெசவு தொழில் மிக வளர்ச்சியுற்றிருந்தது.

## வாணிகம்

தமிழிலே வாணிகம் தொடர்பான சொற்கள் பல உண்டு. நிறைகோல், ஞெமன்கோல், தராசு, வட்டி, முதல், வாசி, கடை, அங்காடி, சந்தை என்பன அவற்றுட் சில; நெய்தல் மருத நிலங்களில் வாணிகம் தொடங்கியிருக்கலாம். உமணர் வயல்களில் பாத்தி கட்டி விளைவித்த உப்பைப் பொதிமாடு களிலும் கழுதைகளிலும் கொண்டுசென்று இடங்கள்தோறும் விற்றனர். வாணிகம் வளர்ச்சியடைந்தபோது வண்டிகள் பயன்படுத்தப்பட்டன. உருளை, குட்டு, ஆர், குறடு முதலி யன வண்டியின் உறுப்புகளை உணர்த்தும் சில பெயர்கள். வாணிகம் செய்யும் செட்டிகள் பலர் இருந்தனர். வணிக ருக்குச் சாத்தர் என்பதும் சங்க காலத்து வழங்கிய இன் னொரு பெயர். செட்டி என்னும் சொல் வடமொழியில் சிறெஸ்தி சிறஸ்தா எனத் திரிந்து வழங்கிற்று. வேதகாலத் தில், முத்து, பவளம், சந்தனக்கட்டை, மிளகு முதலியவை களை வடநாட்டுக்குக் கொண்டு சென்று வியாபாரஞ் செய் தோர் பாணியர் எனப்பட்டனர். பாணியர் என்பது வணி கர் என்பதன் திரிபு என ஆராய்ச்சியாளர் ஆராய்ந்து கூறி யிருக்கின்றனர். சமக்கிருத பண்டிதர்கள் சமக்கிருதம் கடவுள் மொழியாயிருத்தலின் அது மனித மொழிகளினின் றும் சொற்களை இரவல் பெற்றிருக்கமாட்டாது என்னும் குருட்டு நம்பிக்கையால் பிற மொழிகளினின்று சமக்கிருதத்

துக்குச் சென்றுள்ள சொற்களுக்கு ஒவ்வாத சமக்கிருத உற்பத்தியைக் கற்பித்துக் கூறுவர்.[1]

## இயல் ரு

## புத்தருக்கு முற்பட்ட இந்தியா

மெகிதா[2] என்பவர் சாதகக் கதைகளில் காணப்படுகின்றபடி அக்கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் பழக்க வழக்கங்களையும் நிரைப்படுத்தி எழுதியுள்ளார். அவை பெரும்பாலும் பழைய தமிழ் இலங்கை மக்களிடையே காணப்பட்டனபோலவே உள்ளன. பண்டைத் தமிழ் இலக்கியங்களால் அறியக்கூடாத பல செய்திகள் அதனகத்தே காணப்படுதலின், அதன் சில பகுதிகளைச் சுருக்கி ஈண்டுத் தமிழிற் றருகின்றேம்.

### அரசன்

அரசன் எல்லா அதிகாரமும் உடையவனுயிருந்தான். அவனைக் கட்டுப்படுத்தும் பிரமாணங்கள் எதுவும் இருக்கவில்லை. அரசரின் குழந்தைகளைக் கைத் தாயர் பாலூட்டி வளர்த்தனர்; வளர்ந்தபின் அவர்கள் தனி ஆசிரியர்களிடம் கல்விகற்க விடப்பட்டனர். (பாண்டவர் துரியோதனுதியோர் துரோணரிடம் கல்வி பயின்றமை மாபாரதத்திற் கூறப்படுகின்றது.) கல்வி பயின்றபின் அவர்கள் நாட்டின்

---

1. Sanskrit scholars suffer from a form of superiority complex and believe that sanskrit, the language of the gods being a perfect Language, conld not stoop so low as to borrow words from the languages of men. Hence they are fond of inventing derivations, ingenious and plansible but absurd from a historical point of view. - Pre-aryan Tamil Culture.

2. Pre-Buddhist India - Ratilal - N. Mehita, M.A.

ஒவ்வொரு பகுதிக்கு உவ அரசர்களானுர்கள். அரசனுக்குப் பல தேவியர் இருந்தனர். அவருள் பட்டத்தரசியின் மூத்த புதல்வனே பட்டமெய்தினன். அரசாட்சி, தந்தையிலிருந்து மகனுக்கு வழிவழியே சென்றது. அரசனுக்குப் பிள்ளைகள் இல்லாதவிடத்து அவன் உடன்பிறந்தோனும், உடன்பிறந் தான் இல்லாதவிடத்து மருமகனும் ஆட்சி ஏற்றனர். இள வரசுப் பட்டம் கட்டும்போது புரோகிதர் வலம்புரிச் சங்கி லும் பொற்குடத்திலுமிருந்து இளவரசன்மீது நீர் தெளித் தனர். அக்காலத்தில் அவன் மனைவியும் உடனிருத்திப் பட்டத்துத் தேவியாக்கப்பட்டாள். பின்பு வெண்கொற்றக் குடை விரிக்கும் கிரியை நடத்தப்பட்டது. நகர மாந்தர் நகரை அணிசெய்தார்கள். இளவரசன் பட்டத்து யானை மீது நகர்வலம் வந்தான்.

அரசனது மனை நகரின் நடுவிலிருந்தது. அது ஏழு மாடிகள் அல்லது பல மாடிகளுடையது. தானியக் களஞ் சியமும் நிதியும் அரண்மனையிலிருந்தன. அரண்மனையின் பொது மண்டபம் மிகவும் விசாலமானது. வழக்குகளின் தீர்ப்பைப் பெறுவதற்கு அல்லது அங்கு நடக்கும் கொண் டாட்டங்களைப் பார்ப்பதற்கு மக்கள் கூட்டமாகச் சென் ருர்கள். நகரத்தில் நடக்கும் எல்லாவகைக் களியாட்டங் களையும் அரசன் பார்வையிட்டான். அரசன் தனது சுற்றத்தாரோடு மகிழ்ந்திருக்கும் மண்டபம் சந்தனம் பன் னீர் முதலியன தெளிக்கப்பெற்று நறுமணங் கமழ்ந்தது. அது பலவாறு அழகு செய்யப்பட்டிருந்தது. அர சிருக்கை மண்டபத்தில் அரசன் அமைச்சர்களாலும் நடன மாதராலும் சூழப்பட்டிருந்தான். அரசனது பள்ளியறை மாடிமீது இருந்தது. அதனிடத்தே அழகிய கட்டிலும் அதன்மீது அணைகளும் இடப்பட்டிருந்தன. அதன் அயலே

சூதாடும் மண்டபம். அங்கு வெள்ளி நாற்காலிகளும் பொன் சூதாடு காய்களுமிருந்தன. அரசன் பொது மண்டபத்தே இருந்து மக்களின் வழக்குகளை உசாவித் தீர்ப்பு அளித்தான். அரண்மனையைப் பெரிய மதில் சூழ்ந்திருந்தது. அங்கு 16,000 நடனமாதர் இருந்தனர். இளவரசரும் இளவரசியரும் உறைவதற்கு வெவ்வேறு மாளிகைகளிருந்தன. அட்டிற்சாலையில் மீன் இறைச்சி, சோறு, கஞ்சி முதலியன ஆக்கப்பட்டன. அரசனுண்பதற்குச் செய்யப்படும் சமையல் நூறு வகையினது.

அரசனது நாவிதன் பொன் கத்தியினால் அரசனின் மயிரைக் களைந்து, அவனை முழுக்காட்டி நறுமணம் பூசினான். நாவிதன், அரண்மனையில் கவனத்துக்குரியவனாகவிருந்தான். அரசன், அணி செய்யப்பட்ட தலைப்பாகை அணிந்து பட்டாடை உடுத்துப் பொன் செருப்புத் தரித்தான்.

அவன் செல்லும் தேரில் வெள்ளைக்குதிரைகள் பூட்டப்பட்டன.[1] விழாக் காலங்களில் அவன் யானைமீது சென்

---

1. அரசன் அரையில் வெள்ளையாடை யுடுத்துத் தலையில் தலைப்பாகை வைத்திருக்கின்றான். இவன் யானையிற் செல்லும்போது முத்தும் இரத்தினமும் பதித்த பொன் தொப்பியைத் தரிக்கின்றான்; கையில் பொன் நாடாக் கட்டுகிறான்; காலிற் பொற்சங்கிலி அணிகிறான். சிவந்த கம்பில் மயிலிறகு கட்டிய ஆலவட்டங்களைப் பலர் கொண்டு செல்கின்றனர். தெரிந்தெடுக்கப்பட்ட 500 பிறநாட்டுப் பெண்கள் அரசனைச் சுற்றி நின்று காவல் காக்கின்றனர். இவர்கள் நடனமாடிக்கொண்டு முன்னே செல்கின்றனர். இவர்கள் காலில் செருப்புத் தரித்திருக்கவில்லை. அரையில் ஆடை உடுத்திருக்கின்றனர்; முத்துமாலை பொன் வளைகளை அணிந்திருக்கின்றனர். அவர்களின் உடம்பு கற்பூரம் கஸ்தூரி முதலியவைகள் பூசி நறுமணமூட்டப்பட்டிருக்கிறது. அவர்கள் வெயில் படாதபடி மயிலிறகுக் குடை

ருன். யானை பொன்னுலும் ஆடையாலும் அணி செய்யப் பட்டது.

அரசனுக்குப் பெரிய மாளிகைகள், பல மனைவியர், விலை உயர்ந்த உடைகள், மணப் பண்டங்கள், பொன், வெள்ளி முத்து இரத்தினம் செம்பு இரும்பு தந்தம் சந்தனமரம் மான்தோல் முதலிய பல செல்வங்கள் உண்டு. அவன் வேட்டை நாய்களோடு வேட்டையாடச் சென்ருன்; மது வருந்தினன்; பெண்களும் (பெரும்பாலும் நடனமாதர்) மதுவருந்தினர். அரசனது பூங்காவனம் பதினெட்டு முழம் உயர்ந்த மதிலாற் சூழப்பட்டது. அதன் ஒரு பக்கத்தே பெரிய கதவுகள் இருந்தன. அங்கு அரசனும் தேவியரும் நீராடிக் களிக்கும் கேணியிருந்தது. அங்கு அவனுக்கென அமைக்கப்பட்ட இருக்கையில் அரசன் இருந்தான். அப்பொழுது அவனெதிரே நடனமாதர் நாட்டியம் ஆடினர். சிலர் இனிய வாத்தியங்களை ஒலித்தனர். வாத்தியங்களை இயக்கிப் பாடுதல் சிறந்த பொழுதுபோக்காகக் கருதப் பட்டது.

## நால்வகைப் படைகள்

அரசனிடத்தில் தேர் யானை குதிரை காலாள் என்னும் நால்வகைப் படைகள் இருந்தன. தேர்களிற் பெரும்பாலும் இரண்டு குதிரைகள் பூட்டப்பட்டன. அவைமீது வெள்ளைக்

---

பிடிக்கின்றனர். நாட்டியமாதருக்கு முன்னுல் அரசனது கருமகாரர் பல்லக்குகளிற் செல்கின்றனர். பல்லக்குக் கொம்பு பொன்னுலும் வெள்ளியாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது. வீதிகள் புழுதியாயிருப்பதால் அரசன் 100 போர் வீரர்களை ஏவி வீதிகளுக்குத் தண்ணீர் தெளிக்கச் செய்கின்ருன். Ad Chau Jukua (1225 A-D)—A chinese traveller.

குடைகளும் பலநிறக் கொடிகளும் நாட்டப்பட்டிருந்தன. கைதேர்ந்த பாகன் தேரையோட்டினன். அவன் கவச மணிந்து கையில் வில்லைப் பிடித்திருந்தான்.

சில நேரங்களில் அரசனே படையை நடத்திச் சென் றான். அக்காலங்களில் அவன் யானைமீதிருந்து பகைவரைத் தாக்கினன். யானைகள் பெரும்பாலும் மதிற் கதவுகளைத் திறப்பதற்குப் பயன்படுத்தப்பட்டன. அறுபது வயது வந்ததும் உறுதியான கொம்புடையதுமாகிய யானை போருக் குச் சிறந்ததெனக் கருதப்பட்டது. பாகர் குத்துக்கோலும் தோட்டியும் வைத்திருந்தார்கள். விளங்குகின்ற அணிகலன்க ளணிந்து வாளைக் கையிற் பிடித்த அரசர் யானைமீதிருந்தார் கள். வலிய மறவர் கொடிகளை வீசிக்கொண்டு பக்கத்தே இருந்தனர். யானைகளைப் பழக்குவதற்கெனத் தனி ஆட் கள் அரசனிடமிருந்தார்கள்.

குதிரைகளுக்கு இரும்புக் கவசங்கள் இடப்பட்டன. குதிரை வீரர் வில்லும் வாளும் வைத்திருந்தார்கள். [1] காலாட் கள் வில், வாள், வேல், கேடகம் முதலியன கொண்டு சென் றனர் ; அவர்கள் கவசம் அணிந்திருந்தனர்.

---

1. In their left hand they carry bucklers made of undressed oxhide, which are not so broad as those who carry them, but are about as long. Some are equipped in the javelins instead of bows, but all wear a sword, which is broad in the blade, but is not larger than three cubits; and this when they engage in close fight (which they do with reluctance) they weild with both hands to fetch down a lustier blow. The horsemen are equipped with two lances like the lances called Saunia and with a shorter buckler than that carried by foot soldiers - Arrian.

படையின் பின்னே தச்சர் ஆயுதங்களுடன் சென்றார்கள்.[1] சங்கு மேளம் முதலியவைகளை ஒலிக்கும் வாத்தியக்காரரும் சென்றனர்.

படை பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. எல்லாப் படைக்குந் தலைவனாக ஒரு சேனாபதியிருந்தான். அவன் பெரும்பாலும் அரச குடும்பத்திலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டான். அமைதியான காலங்களில் அவன் நீதிபதியாகக் கடமை பார்த்தான்.

பெரும்பாலும், போர், தலைநகரைச் சுற்றி நடந்தது. படைகள் கூடாரங்களிற் றங்கின. அவை நிரைநிரையாகவும் ஒழுங்காகவும் சென்றன. போர் தொடங்குவதன்முன் அரசன் அல்லது அரசனோடு சென்ற புலவன் படைக்கு ஊக்கம் எழக்கூடிய சொற்பொழிவு செய்தான். சென்ற படை, நகரை முற்றுகையிட்டு மாற்றரசனைப் பணியும்படி அல்லது போர் தொடுக்கும்படி தூண்டும். பணிதற்கு ஒருப்படாத மாற்றரசன் போர்தொடுப்பான். இக்காரணம்பற்றிக் கோட்டை மிகவும் வலுப்படுத்தப்பட்டிருந்தது. கோட்டையின் இடையிடையே கோபுரங்களும் கதவுகளும் இருந்தன. மதிலைச் சுற்றி அகழ் இருந்தது. அது பகைவரை அணுகாதபடி தடுத்தது. மதில்மீது பகைவர் காணாது நின்று பார்க்கக்கூடிய கோபுரங்களிருந்தன. முற்றுகையிடுவோர் அகழியைத் தூர்த்து அல்லது அதனை நீந்திக் கடக்க முயன்றனர். அகழி ஆழமுடையதாயும் பாம்பு முதலைகள் உறை

---

1. Physicians with surgical Instruments, Medicines remedical oils and cloth in their hands; and women with prepared food and beverage should stand behind uttering encouraging words to fighting men says Kaudalia - International law and customs in ancient India - Paramathanath Bandyopathyyaya - M.A., B.L.

வதாயும் இருந்தது. அதனைக் கடப்பது எளிதன்று. கோட்டை மதில்மீது நிற்பவர்கள் உருக்கிய உலோகங்களையும், கொதிக்கும் எண்ணெயையும், சூடான கல்லுச் சேறு என்பவைகளையும் பகைவர்மீது வீசி எறிந்தார்கள். அகழை நீந்திக்கடக்கமுயன்றபோது மதிலின்மீதுள்ளோர் அம்பு ஈட்டி வேல் முதலியவைகளைப் பகைவர்மீது சொரிந்தனர். கோட்டையுள் இருப்போர், தம் முயற்சி பயனளியாவிடில் பணிந்தார்கள். முற்றுகைக் காலங்களில் உணவுக் குறைவு நேராதபடி வேண்டிய உணவு வகைகள் உள்ளே சேமித்துவைக்கப்பட்டன. இருகட்சி [1] ஒற்றர்களும் எதிரியின் மறைவுகளை அறிய முயன்றார்கள். செய்திகள் ஓலை நறுக்குகளில் எழுதி அம்பிற் கட்டி எய்து அறிவிக்கப்பட்டன. செய்தி கொண்டு வருபவனை அல்லது தூதனைக் கொல்லுதல் கூடாதென்பது நீண்டநாள் வழக்கு. போரிற் காயப்பட்டவர்கள் பலகைகள் மீது வைத்து எடுத்துச் செல்லப்பட்டுச் சிகிச்சை செய்யப்பட்டனர். வெற்றிபெற்ற அரசன் தனது நகரத்துக்கு ஆடம்பரத்தோடு சென்றான். வீரர் விருந்து கொண்டாடினர். இராக்காலங்களில் நகர்க் கதவுகள் அடைக்கப்பட்டன. நகர் காவலர் நகரைப் பறைகொட்டிக் காவல் செய்தனர். அவர்கள் சிவந்த பூமாலைகளை அணிந்திருந்தனர்.

---

1. துறவியர், வணிகர், ஊமர், செவிடர், குருடர், இடங்கள் தோறும் திரிந்து கல்வி பயிலும் மாணக்கர் முதலிய பல வேடம்பூண்டு சென்று பகைவரின் மறைவுகளை அறியும் ஒற்றர் பலர். பெண் ஒற்றர்கள் பரத்தையராகச் சென்று பகைவர் நாட்டிற் றங்கி அரசகுமாரரையும் பிற பெருமக்களையும் வசப்படுத்தி அவர்களை இறுதியிற் கொல்வர்; வணிகராகச் சென்றோர் பகைவரின் படைவீரருக்கு நஞ்சு கலந்த மதுவகைகளை விற்பர்; வேலையாட்களாகச் சென்றோர் பகைவரின் ஆடுமாடுகளுக்கு நஞ்சு கலந்த தண்ணீரும் புல்லும் கொடுப்பர். இவ்வாறு ஒற்றரும் முறைகளைக் கௌடலியர் குறிப்பிட்டுள்ளார்.-ஷை

## பலவகைத் தொழில் புரிவோர்

மக்கள் பெரும்பாலும் வேட்டையாடினர்கள். ஊன் பெரிதும் விரும்பப்பட்டது. சுவையுள்ள இறைச்சியைப் பெறும்பொருட்டும் அரசன் வேட்டையாடச் சென்றான். வேட்டையாடுவதையே வாழ்க்கையாகக் கொண்ட கூட்டத்தினரும் பலர் இருந்தனர். அவர்கள் வில், அம்பு, வலைகளுடன் விலங்குகளைத் தேடி மலைகளில் அலைந்தார்கள்; தோலாற் பின்னிய வலைகளை ஏற்றி மான்களைப் பிடித்தார்கள். தோலுக்காகப் புலியும், தந்தத்துக்காக யானையும் வேட்டையாடப்பட்டன.

வளர்ப்பதற்காகவும், இறைச்சிக்காகவும் குருவிகள் பிடித்து விற்கப்பட்டன. சில கிராமங்களில் எல்லோரும் குருவிகள் பிடிப்போராகவே யிருந்தார்கள். அவை வலையேற்றியும் பொறிவைத்தும் பிடிக்கப்பட்டன. வலை குதிரை வால் மயிராற் பின்னித் தடியிற் கட்டி நிலத்தில் வைக்கப்பட்டது. சிலர் பழக்கப்பட்ட பட்சிகளின் உதவியால் அவைகளைப் பிடித்தார்கள். பழக்கப்பட்ட குருவிகளின் குரலைக் கேட்டு அவ்வினப்பட்சிகள் வந்து கூடின. அப்பொழுது அவைகள் வலையில் அகப்படுத்தப்பட்டன.

ஆற்றோரங்களிலும் கடலோரங்களிலும் வாழ்ந்தோர் மீன்களை மிகுதியும் உண்டார்கள். மீன்களைப் பிடிப்பதற்கு வலை, தூண்டில், கூடு என்பன பயன்படுத்தப்பட்டன.

அழகிய பட்டாடைகள் நெய்யப்பட்டன. அரசன் சரிகைத்தலைப்பாகை தரித்தான். பட்டத்து யானை சரிகைத் துணிகளால் அலங்கரிக்கப்பட்டது. மக்கள் பெரும்பாலும் பஞ்சு ஆடை உடுத்தார்கள். பெண்கள் பஞ்சு ஆட்டி நூல்

றூற்றனர். சிலை செய்வோரும் சிலைகளுக்குச் சாயந் தோய்ப்போரும் இருந்தனர்.

பொன் வெள்ளி இரத்தினக்கல்லு முத்து முதலியவை களால் அழகிய நகைகள் செய்யப்பட்டன. பொன் நகை களுக்கு இரத்தினக்கல் பதிக்கப்பட்டது. வளையல், மோதிரம், மாலை, குண்டலம், மேகலை, தண்டை, கொண்டையூசி முத லிய பலவகை அணிகள் வழக்கிலிருந்தன. அரசன் அரண் மனையில் வெள்ளி தங்கக் கலன்களைப் பயன்படுத்தினான். நாற்காலிகள், படுக்கைகள், சிங்காதனங்கள் பொன்னழுத்தி நன்குஅழகுசெய்யப்பட்டன.அழுத்தஞ்செய்யப்பட்டஉலோ கத் தகடுகள் முகம் பார்க்கும் கண்ணாடிகளாகப் பயன்படுத் தப்பட்டன. உணவருந்தும் கலன்கள் வெள்ளியாற் செய்யப் பட்டன. பானை, தட்டு, சட்டி முதலியன செம்பு பித்தளை வெண்கலம் என்பவைகளாலானவை. இரும்பு உருக்குஆக்கப் பட்டு, அதனால் அரிவாள், உளி, நாவிதன்கத்தி, சுத்தியல், போர்க்கருவிகள், கவசம், ஊசி, இசைக்கருவிகளின் நரம்பு கள் என்பன செய்யப்பட்டன. தந்தத்திலும் அரிய வேலை கள் செய்யப்பட்டன.

குயவர் நகருக்கு வெளியே வாழ்ந்தார்கள். இவர்கள் அழகிய சட்டி பானை சாடி முதலியன செய்தனர். கொத்தர் செங்கல்லினால் அழகிய வீடுகளைக் கட்டினார்கள். வீடுகளுக் குக் கைமரங்கள் தூண்கள் கதவுகள் சாளரங்கள் முதலி யவைகளை மரத்தினாற் செய்துதவும் தச்சர்களிருந்தார்கள். இவர்களால் அழகிய நாற்காலி, முக்காலி, கட்டில், ஏணி, பேழை முதலிய வீட்டுப் பொருள்கள் செய்யப்பட்டன. கயிறு, செருப்பு, பை, கேடகம் முதலியவற்றைத் தோலினாற் செய்யும் தொழிலாளர் பலர் இருந்தனர்.

6

மூலிகைகளைப் பையிலிட்டுக்கொண்டு திரியும் மருத்துவர், மூக்கில்லாதோர்க்குப் பொய் மூக்கு வைப்போர், மனைக்கு இடங்குறிப்போர், உறுப்புகளை நோக்கி மக்களின் நன்மை தீமைகளைக் கூறுவோர், வாய்ப்புக் கூறுவோர், கோள் நிலையறிந்து பயன்கூறுவோர், பேயோட்டுவோர், காணாது ஓடியவர்களின் அடியைத் தொடர்ந்து அவர்களைக் கண்டு பிடிப்போர், பாட்டுக்கள் பாடி மிகுந்த பொருளீட்டும் புலவர், குரங்கைப் பழக்கி அதனுதவியால் பாம்பைப் பிடிப்போர், கீரியைப் பழக்குவோர், வாத்தியகாரர், முரசறைவோர், கூத்தர், நடிகர், மாயவித்தை காட்டுவோர், கம்பங்கூத்தர், பாவையாட்டுவோர் முதலிய பல தொழிலாளரும் வாழ்ந்தனர்.

தகப்பன் செய்த தொழிலையே மகனும் செய்தான். இதனால் ஒவ்வொரு கூட்டத்தினரும் அவரவர் செய்யும் தொழிலால் அறியப்பட்டனர். வேடர், மீன் பிடிப்போர், தச்சர், குயவர், நாவிதர், தெருக்கூட்டுவோர் கீழ்மக்கள் எனப்பட்டனர். கூலி வேலை செய்வோரும் அடிமைகளும் இருந்தனர். வறியவர்களின் வீடுகள் நகர்ப்புறத்தே இருந்தன. அடிமைகள் வீட்டிலேயே இருந்து வீட்டு வேலைகளைச் செய்தனர். உணவு சமைத்தல், தண்ணீரெடுத்தல், மாவரைத்தல், வயலைக் காவல்காத்தல், வயலுக்கு உணவு எடுத்துப்போதல், பிச்சை கொடுத்தல், வீட்டுத் தலைவனுக்குப் புத்திகூறுதல், உண்ணும் தட்டுகளைக் கழுவுதல், வீட்டிலுள்ளோர் உணவருந்தும்போது விசிறியால் விசிறுதல் போன்றன அவர்கள் புரியும் வேலைகளாகும்.

## சேமிப்பு

மாசா என்னும் பொன் நாணயங்களும் செம்பு நாணயங்களும் வழங்கின. செல்வர் தமது பணத்தைப் பொன்

ளுக மாற்றி உறுதியான பெட்டிகளிலும் பாதுகாப்பான அறைகளிலும் பூட்டிவைத்தனர். அணிகளும் பணமும் பெரும்பாலும் தலையணைகளுக்குள் வைத்துக் காக்கப் பட்டன.

## உணவு

பொதுமக்கள் உயர்ந்த உணவைக் கொள்ளவில்லை. கஞ்சி, பணியாரம், கீரைவகை, காய்கறிகள், பால் முதலியன பொதுமக்களின் உணவுகள். செல்வர் வெல்லம், தேன், நெய், பால் முதலியன பெய்து சமைத்த கஞ்சியை உண்டனர். காலையில் ஒன்றும் மாலையில் ஒன்றுமாக இரு உணவுகள் கொள்ளப்பட்டன.

## உடை

பஞ்சு ஆடைகள் பெரும்பாலும் உடுக்கப்பட்டன. ஆடவர் அரையில் ஒன்றும் தோளில் ஒன்றும் தலையிலொன்றுமாக மூன்று துணிகளைப் பயன்படுத்தினர். அவர்கள் அரையில் பைகளைக்கட்டி அவைகளில் விலையுயர்ந்த பொருள்களை வைத்திருந்தனர்.

## வீடுகள்

பொதுமக்கள், வீடுகளைச் செங்கல்லாற் கட்டினார்கள். வீட்டின் முன்னும் பின்னும் கதவுகள் இருந்தன. சாளரங்கள் வீதியை நோக்கியிருந்தன. கதவுகள் தாழிடப்பட்டன. பெரிய வீடுகள் சாந்துபூசி வெள்ளையடிக்கப்பட்டன.

## உல்லாச வாழ்க்கை

மக்கள் உல்லாச வாழ்க்கையை விரும்பினர். ஆடவர் மயிரையும் தாடியையும் கத்தரித்து மட்டஞ்செய்தார்கள்.

பெண்கள் அழகிய நகைகளை அணிந்தனர்; மணப்பொருள்களையும் பூக்களையும் பெரிதும் பயன்படுத்தினர்.

## பிராமணர்

ஒழுக்கமுடைய பிராமணர் பெரிதும் மதிப்புப் பெற்றனர். உணவு அருந்தும்படி அவர்கள் வீடுகளுக்கு அழைக்கப்பட்டார்கள். நீராடியபின் அவர்கள் வீட்டுக்கு வந்து வீட்டுத்தலைவன் செம்பிற்கொடுக்கும் நீரை வாங்கி முகத்தைக் கழுவியபின் இருந்து உண்டார்கள். உண்டு முடிந்ததும் வீட்டுத் தலைவன் கொடுக்கும் தக்கணையைப் பெற்று மங்கலங் கூறிச் சென்றனர்.

உலகப்பிராமணர் என இன்னொரு வகையினர் இருந்தனர். இவர்கள் தமக்கு விதிக்கப்பட்ட ஒழுக்கங்களில் நில்லாதவர்கள். இவர்களுட் சிலர், மருத்துவராகவும், தூது போவோராகவும், வேளாண்மை செய்வோராகவும், ஆடு வளர்ப்போராகவும், வாய்ப்புக் கூறுவோராகவும், வாள், கோடரி, கேடகம், கண்டகோடரிகளைத் தாங்கி வியாபாரக் கூட்டங்களுக்குமுன் செல்வோராகவும் இருந்தனர். இவர்கள் தம் மகளிரைப் பொன்னுக்கு விற்பர்; தாம் விரும்பிய எத்தொழிலையும் புரிவர்.

## சண்டாளர் முதலியோர்

கூத்தாடிகளும் வாத்தியக்காரரும் கிராமங்கள்தோறும் சென்று கம்பக்கூத்து மாயவித்தை புரிந்தும், பாவையாட்டியும் பொருள்பெற்றனர். பாம்பாட்டிகளும் இவ்வாறே ஊர் ஊராகத் திரிந்தனர். சண்டாளர் நகர்ப்புறத்தே வாழ்ந்தனர். இவர்கள் தீண்டப்படாதவராவர். இவர்கள் தமக்குள்

ஒருவகைக் குழூக்குறியைப் பேசினர். பிணஞ்சுடுதல் வீதிகளைப் பெருக்குதல் முதலிய வேலைகளை இவர்கள் புரிந்தனர்.

## மகளிர்

இசையும் நடனமும் மகளிர்க்குச் சிறந்த கல்விகளாகக் கருதப்பட்டன. சுயம்வரம், காந்தருவம், பெற்றோரால் ஒழுங்குசெய்யப்படுவது என மணம் மூவகைப்பட்டது. நல்ல முகூர்த்தவேளையில் மணமகன் பெண்வீட்டுக்கு வந்து பெண்ணை மணந்தான். அரசியர் அரசகுமாரியர் பிரபுக்களின் மகளிர் என்போர் மட்டும் மூடப்பட்ட வண்டிகளிற் சென்றார்கள். மகளிர் பட்டு, பஞ்சு, சணல்ஆடைகளை உடுத்தார்கள். மாலை, குண்டலம், காதோலை, மேகலை, கைவளை, கால்வளை, கடயம்போன்ற நகைகள் அணிந்துகொள்ளப்பட்டன. கூந்தல் பலவாறு வகிர்ந்து பின்னி முடிக்கப்பட்டது. நகங்கள் சிவப்பூட்டப்பட்டன. உயர் குடும்ப மகளிர் யானைத்தந்தக் கைப்பிடியுடைய முகம் பார்க்கும் கண்ணாடிகளையும், செருப்பையும் பயன்படுத்தினர். மேல்வகுப்புப் பெண்களைத்தவிர மற்றவர்கள் தமது வாழ்க்கையின்பொருட்டுப் பலவகை வேலைகளைச் செய்தனர். கிராமப் பெண் வயலைக் காவல்காத்தல், நெசவு தொடர்பான வேலைகள் போன்றவைகளைப் புரிந்தாள். சிலர் பூ விற்றனர். வறிய பெண்கள் வீடுகளில் வேலைக்காரியராகவும் தாதியராக்வும் அமர்ந்தனர். நடனமாதர் பரத்தையர்களாக வாழ்ந்தனர். பிச்சை எடுத்து உண்ணும் பெண் துறவிகளும் இருந்தார்கள்.

## வான ஆராய்ச்சி

வான நூல் சோதிடம் என்பன வளர்ச்சியடைந்திருந்தன. கோள்களின் செலவுகள் முன்னமே அறிந்து கூறப்.

பட்டன. திங்களில் முயல் இருப்பது திங்களை இராகு விழுங்குவது முதலிய நம்பிக்கை இருந்தது.[1]

## இசை

இசைக் கருவிகளுள் வீணை மிகவும் முக்கியமுடையது. ஆடவரும் மகளிரும் விரும்பி அதிற் பயின்றனர். அது தனியே அல்லது பாட்டுகளுடன் வாசிக்கப்பட்டது. இது கைவிரலின் நுனிகளால் நரம்புகளைத் தடவியும் தெறித்தும் மீட்டப்படும். மயிற்பெடைகளும் சேவல்களும் கைகொட்டும் தாளத்துக்கு ஆடும்படி பயிற்றப்பட்டன.

## ஓவியமும், சிற்பமும்

சுவர்களிலும் பலகைகள்மீதும் ஓவியங்கள் வரையப்பட்டன. அசந்தாக் குகை ஓவியங்களே அக்காலச் சித்திரங்களுக்கு எடுத்துக்காட்டு. சிறுவர் விளையாடும் அழகிய பாவைகளும், மற்றும் பிற விளையாட்டுப் பொருள்களும் செய்யப்பட்டன. சில அரண்மனைகள் ஒற்றைத் தூணுடையனவாகவும், சில, எட்டுச் சதுரமுடைய ஆயிரந் தூணுடையனவாகவும் கூறப்பட்டுள்ளன. பெரிய நிலவறைகள் அமைக்கப்பட்டிருந்தன. இறந்தவர்களின் உடல்களைப் புதைத்து அவைமீது கட்டிடங்கள் எழுப்பப்பட்டன. அங்குப் பூமாலைகள் தூக்கி நறும்புகை காட்டப்பட்டது.

## சில நம்பிக்கைகளும் பழக்க வழக்கங்களும்

மதியம் அமாவாசைக் காலங்களில் மக்கள் விரதமிருந்தார்கள். ஒருவன் தும்மினால் 'சாவில்லை' அல்லது 'நீடு

---

1. தூரானியர் எனப்படும் எல்லா மக்களிடையும் திங்களில் முயல் இருக்கின்றதென்னும் நம்பிக்கையிருந்ததென உலக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர்.

வாழ்க' என்று சொல்லப்பட்டது. ஒருவரை நிறைவாக ஒரு கருமத்தைச் செய்தால் அவன் முதுகிற் றட்டி அதன் மகிழ்ச்சி அறிவிக்கப்பட்டது. பெண்ணின் வலக்கண் துடிப்பது தீமை நேர்வதற்கு அறிகுறி எனக் கருதப்பட்டது. பெண்கள் தமக்குத் துன்பம் இழைத்தவர்களைத் திட்டினர்கள். குருவின் பெயரைச் சொல்வது பாவம் எனக் கருதப்பட்டது. குருவை மூன்றுமுறை வலம் வந்து விழுந்து கும்பிடுவது பொதுவழக்கு. மனிதன் நூறு அல்லது நூற்றிருபது ஆண்டு வாழ்வான் என நம்பப்பட்டது. வாயிலிற் கதவிடப்பட்ட சுடலைகள் இருந்தன. பந்து விளையாட்டுச் சிறுவரால் மிகவும் விரும்பப்பட்டது.

ஊஞ்சலில் ஆடுவதை அரசரும் விரும்பினர்கள். அரசரும் பெருமக்களும் ஆறுகளிலும் குளங்களிலும் நீந்திக் களித்தனர். விழாக்கள் பறையறைந்து மக்களுக்கு அறிவிக்கப்பட்டது. விழாக் காலங்களில் வறியவர்களும் புது ஆடையுடுத்துப் பூமாலையணிந்து நறுமணம் பூசி மனைவியருடன் மதுவருந்திக் களித்தனர். கார்த்திகைத் திங்களின் மத்தியில் வரும் விழா மிகச் சிறப்புடையது. அன்று அரசன் நகரைச் சுற்றி உலாவருவான். வழக்கமான மதுக்கடைகளைத் தவிர விழாக்காலங்களில் புதிய மதுக்கடைகள் திறக்கப்பட்டன. மகளிர் மைந்தர் சிறுவர் என்போர் திரண்டு நின்று கூத்து, வாத்தியம், பாட்டு, யானைப்போர், ஆட்டுப்போர், மற்போர் முதலியவைகளைப் பார்த்து ஆரவாரஞ் செய்தனர்.

## மரவணக்கம்

மக்கள் மரங்களைத் தெய்வமாக வணங்கவில்லை; ஆனல் மரங்களிலுறையும் தெய்வங்களை வணங்கினர்கள்.

இத்தெய்வங்களுக்குச் சிலவேளை நரபலிகள் கொடுக்கப்பட்டன. மரத்தில் மாலையும் கொம்புகளில் விளக்குகளும் தூக்கப்பட்டன. மரத்தில் அடியில் ஆடு கோழி பன்றி முதலியன பலியிடப்பட்டன. உயிர்ப் பலிகள் நிறுத்தப்பட்டபின் இரத்தத்துக்குப் பதில் மரத்தில் குங்குமம் பூசப்படுகின்றதா யிருத்தல்கூடும்.

## தண்டனை

அக்காலத் தண்டனை, தண்டம், சிறை, உறுப்புகளைக் களைதல், சிரத்தைக் கோடரியாற் பட்டடையில் வைத்துத் தறித்தல் போன்றன.

## இயல் ச.

## புத்தருக்குப் பிற்பட்ட இந்தியா

மெகஸ்தின் என்னும் கிரேக்கர் சந்திரகுத்த மயூரனின் அரண்மனையில் கி. மு. 302-முதல் சிலகாலம் தங்கியிருந்தார். இவர் இந்தியாவைப்பற்றி ஒரு நூல் எழுதியிருந்தார். அதிற் காணப்படும் சில பகுதிகள் அக்கால இந்திய மக்களின் வாழ்க்கை முறைகளை நன்கு விளக்குவன. அவர் கூறுவன :

### இந்திய மக்களின் ஏழு பிரிவுகள்

இந்தியர் ஏழு வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். தத்துவ சாத்திரத்திற்றேர்ந்த ஒரு கூட்டத்தினர் முதற்குலத்தினராகக் கொள்ளப்பட்டனர். மற்றைக் கூட்டத்தினரைவிட இவர்களின் தொகை குறைவாயிருந்தது. இவர்கள் எசமானராகவோ வேலைக்காரராகவோ இருக்கவில்லை. மறு உலகத்துக்குரிய பொருள்களை எல்லாம் இவர்கள் நன்கு அறிந்திருந்தார்கள் என மக்கள் நம்பினார்கள். ஆகவே

அவர்கள் இவர்களைப் பிணச்சடங்குகள் புரிவதற்கும் உரிய காலங்களிற் கடவுட்பலியைச் செலுத்துவதற்கும் அழைத்தார்கள். இவ்வகைக் கிரியைகள் புரிவதற்குக் கைம்மாருக இவர்கள் மிகுந்த பொருளைப் பெற்றனர். பொதுமக்கள் இவர்களால் பெரிய நன்மைகளை அடைந்தனர். ஆண்டின் ஆரம்பகாலத்தில் மக்கள் கூட்டங்கூடி இருப்பார்கள். அப்பொழுது இவர்கள் அவ்வாண்டில் நிகழவிருக்கும் பிணி, பஞ்சம்,காற்று,மழை ஆகியவற்றை அறிவிப்பார்கள். இவற்றை அறிந்துகொண்ட மக்களும் அரசனும், நிகழவிருக்கும் துன்பங்களுக்கு ஆயத்தமாகவிருந்தனர். தாம் கூறிய வருங்காலப் பலன்களிற் பொய்த்த தத்துவ சாத்திரிகள் தமது ஆயுளின் மீதிக்காலத்தை நிகழ்கால வருங்கால பலன்களைக் கூருது மௌனமாகக் கழித்தனர்.

இவர்களுக்கு அடுத்தபடியி லுள்ளோர் உழுதூண் வாழ்க்கையர். இவர்கள் மற்றவர்களிலும் கூடிய தொகையினர். இவர்கள் போர் முதலிய பொதுக்கருமங்களுக்குரிய காலத்தைத் தவிர மீதி நேரம் முழுவதையும் நிலத்தைப் பண்படுத்திப் பயிரிடுவதிற் செலவிடுகின்றனர். நாட்டின்மீது படை எடுத்து வருவோர் இவர்களைத் துன்புறுத்துவதில்லை. பொது நன்மைக்குரியோர் என்னும் எண்ணத்தினுல் இவர்கள் எல்லா ஆபத்துக்களினின்றும் காக்கப்படுகின்றனர். பகைவரால் அழிக்கப்படாதனவும், மிகுந்த விளைவைக் கொடுப்பனவுமாகிய நிலங்களின் பயன் நாட்டு மக்களின் உணவுக்குப் போதுமானதாயிருந்தது. இவர்கள் குடும்பங்களோடு நாட்டை உறைவிடமாகக் கொண்டனர். நகர வாழ்க்கையை இவர்கள் விரும்பினுர்களல்லர். இந்திய நாடு முழுமையிலுமுள்ள நாடு அரசனுக்குச் சொந்தமானது. எவரே

னும் சொந்தமான நிலம் வைத்திருக்க அனுமதிக்கப்பட வில்லை. நிலவரியைத் தவிர விளைவில் நாலில் ஒன்றும் அரச னுக்கு உரியதாயிருந்தது.

மூன்றுவது படியிலுள்ளோர் இடையர். இவர்கள் பெரும்பாலும் ஆடுமாடுகளை மேய்ப்பர். இவர்கள் நாட்டி லாவது நகரங்களிலாவது நிலையாக வாழாது கூடாரங்களின் கீழ்த் தங்கினர்; வேட்டையாடியும் பொறி வைத்தும் துட்ட விலங்குகளைப் பிடித்தனர்.

நான்காவது படியிலுள்ளோர் சிற்பிகள். இவர்களிற் சிலர் ஆயுதங்களைச் செய்தனர். சிலர் பயிரிடுவோருக்கும் பிறருக்கும் வேண்டிய கருவிகளைச் செய்துகொடுத்து அவர் களுக்குத் துணைபுரிந்தனர்.

ஐந்தாவது படியிலுள்ளோர் படையாச்சிகள். இவர்கள் போர்செய்யும் முறையிற் பயின்றிருந்தனர். தொகையள வில் இவர்கள் இரண்டாவதாக விருப்பர். போர் இல்லாத காலங்களில் இவர்கள் பொழுதுபோக்குகளிலும் சோம்புத் தனத்திலும் காலத்தைப் போக்கினர்.

ஆறுவது படியிலுள்ளோர் கண்காணிமார். நாட்டில் நடக்கும் எல்லாவற்றையும் அறிந்துசொல்வது இவர்களுக்கு வேலையாயிருந்தது; அரசன் இல்லாத விடங்களில் அவர்கள் தாம் அறிந்தவற்றை நியாயம் வழங்கும் அதிகாரிகளிடம் கூறினர்.

ஏழாவது படியிலுள்ளோர் பொதுக் கருமங்களில் ஆலோசனை கூறும் கூட்டத்தினர். மற்றவர்கள் எல்லோ ரையும்விட இவர்கள் சிறு கூட்டத்தினர். உயர்ந்த ஒழுக் கத்துக்கும் அறிவுக்குமாக இவர்கள் மதிக்கப்படுகிறுர்கள்.

அரசனது கருவூலத்துக்கும், அரசனுக்கு ஆலோசனை கூறு தற்கும் இக்கூட்டத்தினின்றுதான் சிலர் தெரிந்தெடுக்கப்படு கின்றனர். படைத்தலைவனும் தலைமை நீதிபதியும் இவ்வகுப் பைச் சேர்ந்தவர்களே.

இந்திய அரசாங்கம் இவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கின்றது. தத்தம் கூட்டத்தைக் கடந்து மணம் முடிக்க எவரும் அனு மதிக்கப்படுவதில்லை. தமது வகுப்புக்குரியதல்லாத தொழில் புரிவதற்கும் ஒருவரும் அனுமதிக்கப்படவில்லை. உதாரண மாகப் போர்வீரன் ஒருபோதும் பயிரிடுவோனாக வரமுடி யாது; சிற்பி அறிவனாய் (தத்துவசாத்திரி) வரமுடியாது.

## மக்களின் பழக்கவழக்கம்

இந்தியமக்கள் எல்லோரும் செட்டான வாழ்க்கையுடை யர். சிறப்பாக, கூடாரங்களில் தங்கும்போது இவர்கள் இவ்வாறிருக்கின்றனர். ஒழுங்கற்ற கூட்டத்தினரை அவர் கள் வெறுத்தனர். ஆகவே அவர்கள் ஒழுங்காக நடந்து கொண்டனர். களவு சிறிதாக இருந்தது. சந்திரகுத்தனின் கூடாரத்தில் 400,000 வீரர் தங்கினார்கள். எப்பொழு தாவது 200 திரமச்[1] பொன்னுக்கு அதிகமாகக் களவுநடந்த தாகக் கூறப்படவில்லை. அவர்களுக்கு எழுத்துமூலம் பிர மாணங்கள் கிடையா.

அவர்கள் எழுத்தைப்பற்றி அறியார். கொடுக்கல் வாங்கல்கள் ஞாபகத்தைப் பொறுத்திருந்தன. ஆடம்பர மல்லாத வாழ்க்கை நடத்தியபோதும் அவர்கள் மகிழ்ச்சி யுடன் இருந்தார்கள். வேள்விகளிலன்றி அவர்கள் மது அருந்தவில்லை. மது நெல்லிலிருந்து வடிக்கப்பட்டது.

1. 66.5 தானிய இடை.

அரிசியாற் சமைத்த கஞ்சி அவர்களின் பிரதான உணவு. அவர்களின் சட்டங்களைக் கவனிக்கும்போது அவர்கள், அருமையாக வழக்குக்குச் சென்றுர்கள். கொடுக்கல் வாங்கல்கள் ஒருவர் மற்றவரிடத்திற் கொண்ட நம்பிக்கையைக் கொண்டு நடைபெற்றமையால் பத்திரங்கள் எழுதப்படவில்லை. அவர்கள் வெளியே சென்றபோது வீட்டையும் வீட்டிலுள்ள பொருள்களையும் காப்பதற்கு எவரையும் நிறுத்தவில்லை. அவர்கள் எப்பொழுதும் தனிமையாகவே உணவருந்தினுர்கள். இன்ன நேரத்தில் உணவருந்தவேண்டும் என்னும் நியதி இருக்கவில்லை; பசிகொண்ட நேரங்களில் ஒவ்வொருவரும் உண்டனர்.

உடம்பை உரைஞ்சுவதையே அவர்கள் சிறந்த உடற் பயிற்சியாகக் கருதினர். அதற்காகப் பலமுறைகள் கையாளப்பட்டன. அழுத்தமான கருங்காலி உருளைகளை உடம்பில் அழுத்தி உருட்டுவதே அவற்றுட் சிறந்தது. அவர்களின் சமாதிகள் ஆடம்பரமின்றி எளிய வகையில் இருந்தன. சமாதிக்குமேல் மண்கொட்டி மேடு செய்யப்பட்டது. அவர்கள் அழகையும் அணிகலன்களையும் விரும்பினர். உடைகள் பொன்னினுல் அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஆபரணங்களில் வயிரங்களும் விலையுயர்ந்த கற்களும் அழுத்தப்பட்டிருந்தன. பூவேலை செய்த மசிலின் துணிகளை அவர்கள் உடுத்தனர். பரிவாரங்கள் அவர்களின் பின்னுற் குடைபிடித்துச் சென்றனர். உண்மையும் புகழும் போற்றப்பட்டன. அறிவுத் திறமில்லாத முதியவர்களுக்கு மதிப்புக் கொடுக்கப்படவில்லை.

அவர்கள் பல பெண்களை மணந்தனர். அவர்கள் ஒரு சோடி எருதைப் பெண்களுக்கு விலையாகக் கொடுத்து அவர்களைப் பெற்றோர்களிடமிருந்து வாங்கினர். சிலர் தமக்கு

வாழ்க்கைத்துணை வேண்டுமென்று மணஞ் செய்கின்றனர். பலர் இன்பத்திற்காகவும் வீடுகளைப் பல குழந்தைகளால் நிரப்புவதற்கும் மணஞ் செய்கின்றனர். வேள்விச் சாலைகளி லும் கடவுட் பூசைகளிலும் ஒருவரும் முடி அணியவில்லை. பலியிடும் விலங்குகள் வெட்டிக் கொல்லப்படவில்லை; மூச் சைப் பிடித்துத் திருகிக் கொல்லப்பட்டன.

பொய்ச்சாட்சி சொல்வோனுக்குக் கடுந்தண்டம் விதிக் கப்பட்டது. ஒருவனது உறுப்புக்குப் பங்கம் விளைத்தவ னது அதே உறுப்பு வெட்டப்பட்டது; கையும் வெட்டப் பட்டது. சிற்பிகளின் கண்ணுக்கு அல்லது கைக்கு ஊறு விளைத்தவன் கொலைசெய்யப்பட்டான்.

அரசனுடைய உயிர் பெண்களின் கையில் இருந்தது. அப் பெண்கள் தாய் தந்தையரிடமிருந்து விலைக்கு வாங்கப் பட்டவர்களாவர். வாயிலுக்கு வெளியே காவலாளரும் போர் வீரரும் காவல் புரிந்தனர். அரசன் மதுவுண்ட மயக் கத்திலிருக்கும்போது அவனைக் கொன்றவள் இனிவரும் அரசனுக்கு மனைவியாகின்றாள். அரசன் பகலில் துயில் கொள்ளான். தனக்கு மாறாக நடக்கக்கூடிய சதிகளுக்குப் பயந்து அவன் அடிக்கடி தனது படுக்கையை மாற்றுவதுண்டு. போர்க்காலங்களில்மட்டு மல்லாமல் வழக்குத் தீர்ப்பளித் தற்கும் அவன் வெளியே செல்கின்றான். நீதி செலுத்தும் மண்டபத்தில் அவன் முழு நேரத்தையும் செலவிடுகிறான். அந்நேரத்தில் நான்கு வேலையாட்கள் அவனது உடம்பை மர உருளைகளால் உரைஞ்சுகின்றனர். உருளைகளால் உரைஞ் சும்போதே அவன் வழக்குகளை விசாரணை செய்கின்றான். வேட்டையாடுதற்கும், வேள்விச் சாலைகளிற் பலி செலுத்து தற்கும் அவன் வெளியே செல்கின்றான். வேட்டைக்குச்

செல்லும்போது பெண்கள் பலர் அவனைச் சூழ்ந்து நிற்கின்றனர் [1]. இவர்களுக்குப் புறத்தே ஈட்டி தரித்த வீரர் சூழ்ந்து நிற்கின்றனர். வீதிகளிற் கயிறுகள் கட்டப்பட்டிருக்கின்றன. கயிற்றைக் கடந்து செல்லும் ஆண் அல்லது பெண்ணுக்கு மரண தண்டனை விதிக்கப்படுகின்றது. மேளம் சல்லரி முதலிய வாத்தியங்களோடு பரிவாரங்கள் செல்கின்றன. அரசன் வளைத்தடைக்கப்பட்ட இடத்தே உயரமான இடத்தில்

---

1. அரசன் படுக்கையினின்று எழுந்ததும் வில்லுத்தாங்கிய பெண் கூட்டத்தினர் அரசனை எதிர்கொண்டார்கள். இவர்கள் அரசனது நெருங்கிய மெய்காப்பாளராவர். பெண் அடிமைகள் அவனது உடம்பைப் பிடித்து (massaged) குளிப்பாட்டி ஆடைகளை ஒலித்து, அவனைப் பூமாலைகளால் அலங்காரஞ் செய்தார்கள். அரண்மனையில் மூன்று தரத்தினராகிய மகளிர் இருந்தனர். தாழ்ந்த படியிலுள்ள கணிகையர் அரசனுக்குக் குடைபிடிக்கவும் பொற்குடத்தை எடுத்துச் செல்லவும் பயன்படுத்தப்பட்டனர். அடுத்தபடியிலுள்ள பெண்கள் விசிறியைக் கொண்டு சென்றனர். இவர்கள் அரசனுக்குப் பக்கத்தே கொலுவிருக்கை மண்டபத்தே இருந்து சேவித்தனர். இவர்களிலும் உயர்ந்த பெண்கள் அரசன் தேரிற் செல்லும்போது அல்லது சிங்காசனத்தில் இருக்கும்போது சேவித்தனர். இவர்களில் வயது சென்றவர்கள் சமயலறையில் சேவிக்கும்படி அனுப்பப்பட்டனர். இக்கணிகைப் பெண்கள் 24,000 பணங்கள் கொடுத்து விடுதலை பெற்றுத் தாம் விரும்பியவாறு வாழ்க்கை நடத்த அனுமதிக்கப்பட்டார்கள். எட்டு வயதுக்கு மேற்பட்ட பெண்கள் அரசனின்முன் பாடவும் ஆடவும் அமர்த்தப்பட்டார்கள். இவை கௌடலியர் கூறியவற்றால் விளங்குகின்றன. கி. மு. இரண்டாம் நூற்றாண்டைய பர்குற் (Bharhut sculputre) சிற்பத்தில் முற்றாக ஆயுதந்தரித்த பெண் குதிரைமீது இருந்து கொடியைப் பிடிக்கும் உருவம் காணப்படுகின்றது.—Chandragupta Maurya and his times—Radha Kumud Mookerji—P. 97.

நின்று அம்புகளை எய்கிறான். அவனுக்குப் பக்கத்தில் இரண்டு அல்லது மூன்று ஆயுதந்தரித்த பெண்கள் நிற்கின்றனர். வெளியிடங்களில் வேட்டையாடும்போது அரசன் யானையின் அம்பாரிமீதிருந்து அம்புகளை எய்கிறான். பெண்கள் சிலர் தேர்மீதும், சிலர் யானைமீதும் செல்கின்றனர். போருக்குச் செல்வதை ஒப்ப அவர்கள் பல ஆயுதங்களைத் தாங்கிச் செல்கின்றனர்.

## அரசாங்க அமைப்பு

அரசாங்க உத்தியோகத்தரிற் சிலர் சந்தைகளையும், சிலர் இராணுவத்தையும், சிலர் நகரத்தையும் மேற்பார்க்கின்றனர். சிலர் ஆறுவழியாக நிலங்களுக்கு நீர்ப் பாய்ச்சுவதையும், சிலர் நில அளவைகளையும், சிலர் ஆற்றின் சிறிய கால்வாய்களால் நீர் செல்லும் மடைகளையும் கவனிக்கின்றனர். சிலர் விறகு வெட்டுவோர், தச்சு வேலை, கொல் வேலை, சுரங்க வேலை முதலியன புரிவோரை மேற்பார்த்து வரி அறவிடுகின்றனர். இவர்கள் வீதிகளையும் அமைக்கின்றனர். தூரத்தையும் கிளைப்பாதைகளையும் அறிவிக்கும் கற்கள் 'மைலுக்கு' ஒன்று நடப்பட்டுள்ளன.

நகர ஆட்சி ஆறு சபையினரால் நடத்தப்படுகின்றது. முதற்பிரிவினர் கைத்தொழில் தொடர்பான எல்லாவற்றையும் கவனிப்பர். இரண்டாவது பிரிவினர் பிற நாடுகளினின்றும் வருவோரைக் கவனித்து அவர்கள் தங்குவதற்கேற்ற வசதிகளைப் புரிவர். அப் புதியவர்களுக்குத் துணையாக விருப்போர் அவர்களின் போக்கைக் கவனித்து அதிகாரிகளுக்கு அறிவிக்கின்றனர். பிற நாட்டவர்கள் இறக்க நேர்ந்தால் அவர்களின் உடைகள் உறவினரிடம் சேர்ப்பிக்கப்படுகின்றன. மூன்றாவது பிரிவினர் நாட்டில் ஏற்படும் இறப்புப்

பிறப்புக்களைக் கவனிக்கின்றனர். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி எல்லோருக்கிடையிலும் நேரும் இறப்புப் பிறப்புக்கள் தவறாமல் பதிவுசெய்யப்படுகின்றன. நான்காவது பிரிவினர் சந்தைகளைக் கவனிக்கின்றனர். இவர்களே நிறைகளுக்கும் அளவுகளுக்கும் பொறுப்பாயுள்ளோர். மக்களுக்கு விளம்பரஞ் செய்தபின் காலத்திற் கிடைக்கும் விளை பொருள்கள் பகிரங்கத்தில் விற்கப்படுகின்றன. ஒன்றுக்கு அதிகமான பண்டங்களில் வாணிகம் புரிய எவரும் அனுமதிக்கப்பட்டிலர். ஐந்தாவது பிரிவினர் கைத்தொழிற் பொருள்களைக் கவனிக்கின்றனர். புதிய பொருள்களும் பழைய பொருள்களும் வெவ்வேறாக வைத்து விற்கப்படுகின்றன. புதியவற்றையும் பழையவற்றையும் கலந்து விற்போருக்குத் தண்டம் விதிக்கப்படுகின்றது. ஆறாவது பிரிவினர் வாணிபப் பொருள்களின் விலையிற் பத்திலொன்றை அறவிடுகின்றனர். இவ்வாறு ஆறு பிரிவினர்களும் கடமையாற்றுகின்றனர். இவர்கள் ஒன்றுசேர்ந்து பொதுக் கட்டிடங்களின் புழக்கம், அவற்றின் பழுதுபார்ப்பு, பண்டங்களின் விலை, சந்தை, துறைமுகம், கோயில்கள் முதலியவற்றிற்குப் பொறுப்பாயிருக்கின்றனர்.

நகரின் நியாய அதிகாரிகள் இராணுவத்தை நடத்துவிக்கின்றனர். இவர்கள் ஐந்து உறுப்பினர் அடங்கிய ஆறு சபைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். ஒன்று, கடற்படை அதிகாரியோடு ஒத்துழைக்கின்றது. இரண்டாவது போருக்குரிய இயந்திரங்களையும், போர்வீரரின் உணவையும் பிற பொருள்களையும் கொண்டு செல்லும் எருதுகளையும் வண்டிகளையும் கவனிக்கின்றது. இது, வேலையாட்களையும், பறைகொட்டுவோரையும், சல்லரி போடுவோரையும்,

குதிரைப் பாகரையும், இயந்திரம் பழுது பார்ப்போரையும் அவர்களின் உதவியாளரையும் அளிக்கின்றது. சல்லரிகளாற் செய்யப்படும் ஓசையை அறிந்து வேலையாட்கள் குதிரைகளுக்குப் புல் கொண்டு வருகின்றனர். மூன்றுவது பிரிவு காலாட் படைக்குப் பொறுப்பாயிருக்கின்றது. நாலாவது குதிரைப் படைக்கும், ஐந்தாவது தேர்களுக்கும், ஆறுவது யானைப் படைக்கும் பொறுப்பாயிருக்கின்றன. அரசனின் ஆயுதச் சாலை யுண்டு. ஒவ்வொரு போர்வீரனும் [1] ஆயுதங்களை ஆயுதச் சாலையிலும், குதிரையை அல்லது யானையைப் பந்தியிலும் விட்டுச் செல்கின்றான். அவர்கள் யானைக்குக் கடிவாளமிடுவதில்லை. தேர்களை எருதுகள் இழுத்துச் செல்கின்றன. தேரை இழுத்துக் களையாதபடி குதிரைகள் பக்கத்தே நடத்திச் செல்லப்படுகின்றன. தேர்ப்பாகனின் இரண்டு பக்கங்களிலும் ஒவ்வொரு வீரர் இருக்கின்றனர். போர்யானை நான்கு வீரரைக் கொண்டு செல்கின்றது. ஒருவன் பாகனும் மூவர் போர் செய்வோருமாவர்.

---

1. அக்கால வீரர் பயன்படுத்திய படைக்கலங்களுள் வளைதடி ஒன்று. இது அவுஸ்திரேலிய பூர்வ குடிகள் பயன்படுத்தும் பூமறுங் என்னும் தடியே என ஆராய்ச்சியால் தெரிகின்றது. அதனை ஓர் இலக்கை நோக்கி எறியின் அது இலக்கிற்பட்டு மீண்டும் திரும்பி வரும். டாக்டர் ஒப்பேட் என்பார் இதைக்குறித்து எழுதியிருப்பது பின் வருமாறு:

Dr. Oppert says, "this general belief that the bumerang is a weapon peculiar to Australians, but this is by no means the case. It is well known in many parts of India specially in its Southern peninsula. The Tamilian Maravar and Kallar employ it when hunting and throw it after deer. In the Madras Government Museum are shown three boomerangs two ivory ones which came from the armoury of the late Rajah of Tanjore, and a common one which came from Pudukota. The wood of which the bumerang is made is very dark. I possess a fair black wooden and one iron boomerang, which I received from Pudukota. In the arsenal of the Pudukota Rajah is always kept a stock of these sticks. Their name in Tamil is *Valai Tadi*, 'bent stick' as the stick is bent and

## தத்துவ சாத்திரிகள்

தத்துவ சாத்திரிகளின் ஒரு பிரிவினர் பிராச்மேன் (பிராமணர்) என்றும், மற்றப் பிரிவினர் சார்மேன்[1] எனவும் அழைக்கப்படுவர். பிராச்மேனின் கொள்கைகள் உண்மையாகவிருக்கின்றன. ஆகவே அவர்கள் மிகவும் மதிக்கப்படுகின்றனர். கருப்பத்தில் இருப்பது முதல் அவர்கள் அறிவாளிகளின் பாதுகாப்பில் இருக்கின்றனர். தாயினதும் குழந்தையினதும் நலத்துக்காகச் சில கிரியைகளைச் செய்வதாகப் பாசாங்கு செய்து அறிவாளிகள் அவளுக்குப் பல புத்திமதிகளைக் கூறுகின்றனர். அவர்களின் புத்திமதிகளை ஆவலோடு கேட்கின்றவள் மிகவும் புண்ணியசாலி என்று கருதப்படுகின்ருள். பிறந்தபின், குழந்தை, ஒருவரின் பின் ஒருவராக அறிவில் உயர்ந்த பலரின் பாதுகாப்பில் இருந்து வருகிறது.

தத்துவ சாத்திரிகள், வளைத்தடைத்த சோலைகளின் மத்தியில் வாழ்கின்றனர். அவர்களின் வாழ்க்கை எளிதானது; புல், மான்தோல் முதலியவற்றின்மீது அவர்கள் படுக்கின்றனர். அவர்கள் விலங்குகளின் இறைச்சியைப் புசிப்பதில்லை; பெண் போகத்தை அவர் வெறுப்பர். அவர்கள் பேசுவதைக் கேட்போர் மௌனமாகவும் அமைதியாகவும்

---

flat. When thrown a whirling motion is imparted to the weapon which causes it to return to the place it was thrown. The natives are well acquainted with the peculiar fact - Indo - Aryans - Vol. 2 - R. Mitra.

1. Sarmanes.

சார்மேனியர் என்போர் புத்த குருமார். இவர்கள் எல்லாக் குலங்களினின்றும் தெரிந்தெடுக்கப்படுகின்றனர். பிராமணர் ஒரே கூட்டத்தினின்றும் தலைமுறை தலைமுறையாக வருகின்றனர்.
—Hiuen Tsiang.

இருத்தல் வேண்டும். இப் பிரமாணத்தைத் தாண்டும் எவரும் இரக்கமின்றி அக்கூட்டத்தினின்றும் விலக்கப்படுகின்றனர். இவ்வாறு வாழும் ஒவ்வொருவரும் முப்பத்தேழு ஆண்டுகளின்பின் தத்தம் இல்லங்களுக்குச் செல்கின்றனர். அப்பொழுது அவர்கள் அழகிய மசிலின் ஆடைகளை உடுக்கின்றனர்; விரல்களில் ஆழிகளும் காதிற் குண்டலங்களும் அணிகின்றனர்; தொழில் செய்கின்ற விலங்குகளல்லாத பிறவற்றின் ஊனைப் புசிக்கின்றனர். காரமுள்ளதும் தாளிதஞ் செய்ததுமாகிய உணவை அவர்கள் விரும்புவதில்லை. எத்தனை மனைவியரையும் அவர்கள் மணந்துகொள்ளலாம். அடிமைகளின்மையின் கூடிய தொகை மனைவியர்களையும் பிள்ளைகளையும் உடையராயிருத்தல் தமக்கு வாழ்க்கை வசதியாகுமென அவர்கள் எண்ணுகின்றனர்.

பிராச்மேனியர் சாத்திர உண்மைகளைத் தம் மனைவியருக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை. பிறருக்கு மறைக்கப்பட்ட அவ்வுண்மைகளை வெளிப்படுத்தி அவற்றின் தூய்மையைக் கெடுத்துவிடுவார்கள், அல்லது உண்மை அறிவு மிகுந்து தம்மை விட்டுப் பிரிந்துவிடுவர் என அவர்கள் அஞ்சுகின்றனர். நல்ல மனைவியரும் கணவனும் இன்பதுன்பங்களைச் சமமாகப் பாவித்து வாழ்க்கை நடத்துகின்றனர். அவர்கள் அடிக்கடி பேசும் பொருள்களுள் மரணம் ஒன்றாகும். பிறப்பைப்போல இறப்பும் வரும் என்று அவர்கள் சாத்திரங் கூறுகின்றது. மனிதனுக்கு நேரும் இன்பதுன்பங்களெல்லாம் கனவுபோன்ற மாயை என்றும், இல்லாவிடின் ஒரு பொருள் சிலருக்குத் துன்பத்தையும் வேறு சிலருக்கு இன்பத்தையும் கொடுக்கமுடியாதென்றும், ஒரே பொருள் வெவ்வேறு காலங்களில் நேர்மாறான நுகர்வுகளைக் கொடுக்கக் காரணமென்னவென்றுங் கூறுகின்றனர்.

இயற்கை நிகழ்ச்சியைக் குறித்த அளவில் அவர்கள் குறைவான விளக்கமுடையவர்களாயிருக்கின்றனர். அவர்கள் கட்டுக்கதைகளை நம்புகின்றனர்; ஊகை ஆராய்வினும் பார்க்கச் சாதனையில் திறமையுடையவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்கள் கொள்கைகள் பலவகையில் கிரேக்கர் கொள்கைகளோடு ஒற்றுமையுடையனவாய்க் காணப்படுகின்றன. கிரேக்கரைப்போலவே அவர்களும் உலகம் ஒரு காலத்தில் உற்பத்தியானதென்றும், அது உருண்டை வடிவினதென்றும், அதனை உண்டாக்கிய கடவுள் அதன் எல்லாப் பாகங்களிலும் செறிந்திருக்கிறாரென்றும் கூறுகின்றனர். இவ்வுலகின் உற்பத்திக்கு முதற்காரணமுண்டென்றும் அது நீரினின்று உண்டாயிற்றென்றும், நிலம் தீ நீர் காற்று என்னும் நாலு பூதங்களைவிட ஐந்தாவது பூதம் ஒன்று உண்டென்றும், அதினின்றும் வானமும் நட்சத்திரங்களும் உண்டாயினவென்றும் அவர்கள் நம்புகின்றனர். பூமி உலகின் மத்தியில் இருப்பதாகக் கருதப்படுகின்றது. சிருட்டி உயிரின் இலக்கணம் இவைபோன்ற பல பொருள்கள் கிரேக்கர் கொள்கைகளோடு ஒத்திருக்கின்றன. சார்மேன்களின் 'ஹைலேபியோய்' என்னும் பிரிவினர் மிகவும் மரியாதை காட்டப்படுகின்றனர். அவர்கள் காட்டில் வசித்து அங்குக் கிடைக்கும் இலைகளையும் பழங்களையும் புசிக்கின்றனர்; மரப்பட்டையாற் றைத்த உடையையுடுக்கின்றனர். பெண்போகமும் மதுவும் ஊனும் அவர்களுக்கு விலக்கு. அரசன் தூதுவர் மூலம் இவர்களிடம் தனக்கு வேண்டிய ஆலோசனைகளைக் கேட்கிறான்; இவர்கள் மூலம் கடவுளுக்கு வழிபாடு செய்விக்கிறான்.

இவர்களுக்கு அடுத்தபடியி லுள்ளோர் மருத்துவர். இவர்கள் மனிதனின் இயற்கையைப்பற்றிய ஆராய்ச்சி செய்

கின்றனர். இவர்களின் பழக்க வழக்கங்கள் எளியவை. அவர்கள் வயல்களில் வசிப்பதில்லை. அவர்களின் உணவு அரிசியும் வாளியும். இவற்றை அவர்கள் எவரிடமேனும் கேட்டுப் பெற்றுக்கொள்ளுகின்றனர்; அல்லது விருந்தாளிகளாகத் தங்குமிடங்களிற் பெறுகின்றனர். இவர்கள் தங்கள் கலைகளின் சிறப்பினுல் மகிழ்ச்சிக்குரிய மணங்களை ஒழுங்குபடுத்துவர்; பிறக்கும் குழந்தைகள் ஆண் அல்லது பெண் என்று முன் அறிந்து கூறுவர். அவர்கள் உணவு முறைகளால் நோயை மாற்றுகின்றனர். மருந்தை அருமையாகப் பயன்படுத்துகின்றனர்; மற்றைய முறைகள் இயற்கைக்கு மாறுபட்டன என்று கூறுகின்றனர். இவர்களும் வேறு சில வகுப்பினரும் நாள்முற்றும் அசையாது ஓரிடத்தில் நிற்றல்போன்ற பழக்கங்களைச் செய்கின்றனர்.

இவர்களையன்றி மந்திர வித்தைக்காரரும் வேடம் பூண்டோரு மிருக்கின்றனர். இவர்கள் தாமும் உயர்ந்த திருத்தமுடையவர்களாகக் காணப்படுகின்றனர். மறு உலகத்தைப் பற்றிய நினைவு அன்பையும் தூய்மையையு முண்டாக்குமென்று அவர்கள் கூறுகின்றனர். இவர்கள் சிலரிடமிருந்து பெண்கள் சமய சாத்திரங் கற்கின்றனர்.

## பாடலிபுத்திரா

கங்கையாற்றின் அகலம் 100 ஸ்ரேடியா.[1] அதன் குறைந்த ஆழம் 120 அடி. கங்காநதியும் இன்னொரு ஆறும் கூடும் இடத்தில் 'பலிபோத்திரா' என்னும் ஒரு நகர் இருக்கிறது. இதன் நீளம் எண்பது ஸ்ரேடியா; அகலம் பதினைந்து ஸ்ரேடியா. அது நீண்ட சதுர வடிவமானது. அதைச் சுற்றி மரத்தினுல் இடப்பட்ட அரண் உண்டு. அம்புகள்

1. 606 அடி 9 அங்குலமுள்ள ஒரு கிரேக்க அளவை.

எய்யக்கூடியதாகச் சுவரின் இடையிடையே சந்துகள் செய்யப்பட்டுள்ளன. சுவரின் முன்னே அகழி ஒன்று இருக்கின்றது. நகரின் கழிவு நீர் இதனுள் விழுகின்றது. இங்கு வாழ்வோர் இந்தியா முழுமையிலும் வாழ்வோரினும் சிறந்தோர். அரசன் தனது குடும்பப் பெயரோடு 'பலிபோத்திரா' அல்லது 'சந்திரகோத்திரா' என்னும் பெயரைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

அகழிகள் 600 அடி அகலமும், 30 முழ ஆழமு முடையன. மதில் 570 கோபுரங்களும் அறுபத்தினன்கு வாயில்களும் உடையதாயிருந்தது.[1] இந்திய மக்கள் சுதந்திர வாழ்க்கையினர். அடிமைகள் ஒருவரும் காணப்படவில்லை.

* * *

பாண்டிய சாதியினர் பெண்களால் ஆளப்படுகின்றனர். அவர்களின் முதல்அரசி கெகுலிசின் புதல்வி எனப்படுகின்ருள். இந்நாட்டிலுள்ள நிசா (Nysa) என்னும் பட்டினமும்

---

1. பழைய பபிலோனிய நகரங்களும் இந்திய நகரங்களும் வீடு வாயில்களும் ஒரே வகையினவென்று வரலாற்று நூலார் காட்டியிருக்கின்றனர். அக்காலப் பபிலோன் பட்டினத்தைப்பற்றிக் கெரதோதசு ஆசிரியர் கூறியுள்ளார். அவர் கூறியுள்ளது பின்வருமாறு :—"பட்டினம் நாற்சதுரமுடையது. அதன் ஒவ்வொரு பக்கமும் 120 ஸ்ரீடியா நீளமுடையது. நகரைச்சுற்றி ஆழமும் நீர் நிறைவுமுள்ள ஓர் அகழி செல்கின்றது. அதனை அடுத்து ஐம்பது அரசினர் முழம் அகலமுள்ள மதில் கட்டப்பட்டிருக்கின்றது. சாதாரண முழத்திலும் அரசினர் முழம் மூன்று அங்குலம் அதிகம். அதன் உயரம் இருநூறுமுழம். அகழியிலிருந்து எடுத்த மண்ணால் கல் அரிந்து சூளைவைத்து மதிற்சுவர்கள் கட்டப்பட்டன. மதிலின் உச்சியில் ஒன்றையொன்று பார்த்து நிற்கும் ஒருமாடியுடையவீடுகள் கட்டப்பட்டுள்ளன. வீடுகளின்நடுவில் வெளியிருக்கின்றது. இவ் வெளி ஒரு தேர் திரும்பக்கூடிய அகலமுடையது. மதிலைச் சுற்றி நூறு வாயில்கள் உண்டு. ஒவ்வொரு வாயிலுக்கும் வெண்கலக் கதவிடப்பட் டிருக்கின்றது. அரண்மனை அகன்ற மதிலினுற் சூழப்பட்டிருக்கின்றது. அம் மதிலின் கதவுகளும் வெண்கலத்தாற் செய்யப்பட்டுள்ளன."

ஷிபெயருடைய மலையும் யூபிதர்கடவுளின் பரிசுத்த இடங்கள் இம்மலையிலுள்ள குகையில் பக்கஸ் கடவுள் வளர்ந்தார் என்று இந்தியர் உறுதியாகக் கூறுகின்றனர்.

* * *

கெகுலிஸ், தனது புதல்விக்குக் கொடுத்த நாட்டை 365 கிராமங்களாகப் பிரித்து ஒவ்வொரு கிராமத்தையும் முறையே வருடத்தின் 365 நாளும் திறை கொடுக்கும்படி விதித்தார். 1

* * *

பக்கஸ் (Father Bacchus) காலம் முதல் அலக்சாந்தர் காலம் வரையில் பாண்டிநாட்டை ஆண்ட அரசர் 154 பேர். இவர்களின் ஆட்சி 6431 ஆண்டு 3-திங்கள் நடைபெற்றது.

* * *

தபிரபேன் என்னுந் தீவு இந்தியாவினின்றும் ஒரு சிறிய ஆற்றினாற் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அங்கு இந்தியாவிற் கிடைப்பதிலும் அதிக பொன்னும் முத்தும் கிடைக்கின்றன. அங்குள்ள யானைகள் இந்திய யானைகளிலும் பெரியன.

---

1. அக்காலப் பபிலோனிலும் இவ்வகை ஒழுங்கே இருந்தது. இது கெரதோதசு கூறுவதால் விளங்கும். அவர் கூறியிருப்பது: அரசன் ஆளும் தேசம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. அப்பிரிவுகள் அரசனுக்கும் அவனது பட்டாளத்துக்கும் தேவையான பண்டங்களை அளித்தன. இவைகளையன்றி அவை வழக்கமான திறையையும் இறுத்துவந்தன. பபிலோன் தேசத்திலுள்ள நாடுகள் ஆண்டின் நாலு திங்கள்களுக்குப் போதுமானவற்றை உதவின. ஏனைய மாதங்களுக்கு வேண்டியவற்றை ஆசியாவிலுள்ள ஏனைய நாடுகள் அளித்தன. அரசனிடம் 8000 ஆண் குதிரைகளும் 16,000 பெண் குதிரைகளும் இதே எண்ணுள்ள நாய்களும் இருந்தன. அச்சமவெளிகளிலுள்ள நான்கு பட்டினங்கள் இவைகளுக்கு உணவளித்தன. அந்நாடுகளுக்கு மற்றைய வரிகள் நீக்கப்பட்டிருந்தன.

தபிரபேன் 7000 ஸ்ரேடியா நீளமும் 5000 ஸ்ரேடியா அகலமுமுள்ளது. அங்கு 700 கிராமங்கள் உண்டு. கடல் ஓரங்களில் ஆமைகள் அதிகம். அவைகளின் ஓடு 15 முழ நீளம். தாம்பிரபர்ணி என்னும் கடலுள் இருக்கும் இத் தீவில் தென்னைகள் நிரையாக நடப்பட்டிருக்கின்றன. இங்கு யானைகளும் அதிகம். அத்தீவின் மக்கள் அவைகளைப் பிடித்துக் கலிங்க தேசத்துக்கு அனுப்புகின்றனர். கரை ஓரங்களில் வாழும் மக்கள் மீன் பிடித்து வாழ்வர். அக்கடல்களில் சிங்கத்தலை விலங்குத் தலைகளுள்ள மீன்கள் உலாவுகின்றன. பெண்களின் தலையுடைய மீன்களும் அங்கு உண்டு; மயிருக்குப் பதில் முட்கள் காணப்படுகின்றன.

## இயல் ரு.

## தமிழ் வேந்தரும் அவர் ஆட்சியும்

பிற்காலத் தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளாலும் பட்டையங்களாலும் தமிழிலக்கியங்களிற் காண முடியாத பல அரிய செய்திகள் கிடைக்கின்றன. அரசியல் தொடர்பான தனித் தமிழ்ச் சொற்கள் காணப்படுதலின் அவ் வாட்சி முறை மிகப் பழைமை தொட்டே தமிழ் நாட்டில் நடைபெற்று வருகின்றதெனத் துணியலாம்.

தமிழ் நாட்டிலே மூவேந்தரது ஆட்சி முறையும் ஒரே வகையாக நடைபெற்றது. எல்லா அதிகாரமும் அரசனுக்கு இருந்தது. அவனுக்கு உறுதி கூறும் அமைச்சர் நகரப் பெருமக்கள் முதலிய சுற்றத்தினர் இருந்தனர். அரண்மனையில் ஏவல் புரிவோர் பல கூட்டத்தினராகப் பிரிக்கப்பட்டிருந்தனர். சமையல் அறை குளிக்கும் அறைகளிற் பெரும்பாலும் ஆடவரே வேலை புரிந்தனர். வேலையாட்கள்

வேளம் என்னும் கூட்டத்தினின்றும் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். அவர்கள், போரிற் சிறை பிடிக்கப்பட்டவர்களாவர்.

சோயுகுவா என்னும் சீனன், சோழர் ஆட்சியைப் பற்றி எழுதுமிடத்துக் குறிப்பிட்டிருப்பது வருமாறு: அரண்மனை விருந்துக் காலங்களில் அரசனும் நான்கு அமைச்சரும் சிங்காசனத்தின் அடியை வணங்குகிறார்கள்; உடனே அங்குக் குழுமி யிருப்போர் வாத்தியங்களை ஒலித்து ஆடல் பாடல்களைத் தொடங்குகின்றனர். அரசன் மது அருந்த மாட்டான்; ஊன் அருந்துவான். நாட்டு வழக்கப்படி அவன் பஞ்சு ஆடையை அணிந்துகொண்டு தானிய மாவினாற் செய்த பணியாரங்களை உண்கிறான். உணவருந்தும் அறையிற் சேவிப்பதற்கும் தன்னைச் சூழ்ந்து திரிவதற்கும் அவன் திரளான நடன மாதரை வேலைக்கு அமர்த்தி யிருக்கிறான். நாள் ஒன்றுக்கு முறை முறையாக அவனைச் சேவிக்கும் பேர் மூவாயிரம் மாதர்[1] அரசனுக்கும் தேவிக்கும் தனிச் சேவகம் புரியும் பணியாளரு மிருந்தனர்.

படையில் யானை குதிரை வீரர், காலாள், தேர் வீரர் என்போர் இருந்தனர். யானைவீரர் யானையாட்கள் குஞ்சர மள்ளர் எனவும், குதிரைவீரர் குதிரைச்சேவகர் எனவும்,

---

1. The Greek girls we know were frequently imported at Barygaza (Brooch) and a guard of Javana women is a stock feature of the Rajah's court in the Indian Dramas - The presence of Greek girls as royal attendance shows that they were commonly found in Rajah's harems - India and the western world - H. G. Rawlinson - pp 47, 170.

It is probable that when the importation of Greek women, (who were often employed in the households of Indian chiefs and nobles at a time when greek ladies married Indian princes) language ceased to exist also - The gates of India - p. 22 - Colonel - Sir Thomas Holdich.

காலாட் படையினர் கைக்கோளப் பெரும் படையினர் எனவும், வில்லாளர் வில்லிகள் எனவும், வாட் படையினர் வாட் பெற்ற கைக்கோளர் எனவும் பட்டனர். யுத்த காலத்தில் வேலைக்கு அமர்த்திக்கொள்ளப்படும் வீரர் அரசனின் வலங்கை எனப்பட்டனர். நகரங்களில் படை தங்குமிடங்கள் கடகங்கள் எனப்பட்டன. படைகளின் தலைவன் படைத் தலைவன் சேனுபதி அல்லது படை முதலி எனப்பட்டான். வரி தண்டும் கருமி (மேல் உத்தியோகத்தன்) நாடுவாகை எனப்பட்டான். வரி தண்டும் வேலையில் போர் வீரர்களும் பயன் படுத்தப்பட்டனர். கால் வழியாக வரும் படை மூலப்படை எனப்பட்டது.

ஷெ சின ஆசிரியன் 12-ம் நூற்றுண்டின் பிற்பகுதியில் எழுதியிருப்பது வருமாறு; இவ் விராச்சியத்தில் (சோழ நாட்டில்) பதினுயிரம் யானைகள் நிற்கின்றன. ஒவ்வொன்றும் ஏழு அல்லது எட்டு முழம் உயரமுடையது. போர் புரியும் போது அவை முதுகின்மீது வீடுகளைக் கொண்டு திரிகின்றன. வீடுகள் நிரம்ப வீரர்கள் இருந்து அம்புகளை எய்கின்றனர். வெற்றி யடைந்தபின் யானைகளுக்குக் கௌரவப் பட்டங்கள் வழங்கப்படுகின்றன. நாளும் அவை அரசனுக்கு முன் கொண்டுவரப்படுகின்றன.

போரில் கொள்ளை யடிக்கப்படும் பொருள் அரசனுக்குச் சொந்தமானது.

அரசனது வாய் உத்தரவு 'திருவாய்க் கேள்வி' எனப்பட்டது. அதனைக் கேட்டு எழுதும் கருமிகள் பலர் அவனுடன் இருந்தனர். எழுதுவோன் 'திட்டுக்காரன்' எனப்பட்டான். அரசன் வழக்குகளை நேரிற் கேட்டு நாட்டு வழக்கப்படி தீர்ப்பளித்தான். பெரிய கருமிகளுக்கு ஏனுதி, மாராயன் என்னும் பட்டங்கள் வழங்கப்பட்டன. மாராயன்

என்பதன் பெண்பால் மாராசி. உயர்ந்த கருமிகள் அதிகாரிகள் எனப்பட்டனர். மேல் கீழ் அதிகாரிகளைக் குறிக்கப் 'பெருந்தரம்' 'சிறுதரம்' என்னும் பெயர்கள் வழங்கின. உத்தியோகத்தர் 'கருமிகள்' எனவும் வேலையாட்கள் 'பணி மக்கள்' எனவும் கூறப்பட்டனர். நியாயாதிபதிகள் 'நியாயத்தார்' எனப்பட்டனர். ஒரு கிராமத்தின் அல்லது அதன் பகுதியின்கடமைகளைப் பார்க்கும் கருமிகள் 'உடையார்' அல்லது 'கிழார்' எனப்பட்டனர். ஒவ்வொரு கிராமமும் பெருமக்கள் கூட்டங்களால் ஆளப்பட்டது. கிராமங்கள் பல சேர்ந்தது கூற்றம், நாடு அல்லது கோட்டம் எனப்பட்டது. பல கூற்றங்கள் சேர்ந்தது ஒரு வள நாடு. வளநாட்டிலும் பெரியது மண்டலம்.

## * நாட்டு ஆட்சி

மாசனங்களும் சனங்களும் கூட்டங்களும் அரசியற் கருமங்களை நடத்தின. ஒவ்வொரு கூட்டமும் தனித்தனி ஒவ்வோர் கருமத்தைக் கவனித்தது. கிராமங்கள், சேரிகள், தெருக்கள் என்னும் வகையாகப் பிரிவுகள் செய்யப்பட்டன. ஒவ்வொரு தெருவிலுள்ளோரும் தனித்தனி கூட்டங்களாகச் சேர்ந்து ஒவ்வொரு கருமத்தைக் கவனித்தார்கள். அறச்சொத்துகளை, மேற்பார்வை செய்தோர் 'தானத்தார்' எனப்பட்டனர். திருக்கோயில்களுக்குள்ள நிலங்களுக்கு வரிகள் நீக்கப்பட்டிருந்தன. கிராமம் அல்லது பட்டினம், ஊர் எனப்

*It was apparently by way of Euphrates valley that the Indian Village Committees made their way into Europe. It was the descendants of the Latin races who founded the village committees of Italy on the pattern of those of Southern India. In passing from the Hindu to the Assyrian mythology we find another development from the original type of the Dravidian Village committee - The Ruling races of Pre-Historic Times pp - 1, 39, 90 - H, E, Hewitt.

பட்டது. ஊர், ஆளன்கணம் என்னும் கணத்தால் ஆளப்பட்டது. ஊர் ஆள்வார் என்பதும் அக்கூட்டத்தின் பெயர். இக் கூட்டத்தின்கீழ் ஊர்வாரியம் என்னும் கூட்டங்கள் இருந்தன. இச் சொல் வாரி (இனம்) என்னும் அடியாகப் பிறந்தது. தனிப்பட்ட கடமைகளைப் பார்க்க இக்கூட்டத்தாரால் அமைக்கப்பட்டோர் வாரியர் எனப்பட்டனர். கூட்டங்களின் காரியக்கூட்ட உறுப்பினர் 'வாரியப் பெருமக்கள்' எனப்பட்டனர். ஊரின் ஒவ்வொரு பிரிவும் 'குடும்பு' (Ward) எனப்பட்டது. ஒவ்வொரு குடும்பிலும் உள்ள உறுப்பினர்'குடஓலை'வாயிலாகத் தெரிந்தெடுக்கப்பட்டனர். 1 பெரிய குற்றம் 'மேற்படு குற்றம்' எனப்பட்டது. வினைக்கேடு (கெட்ட நடத்தை) உள்ளவர்களும் கைக்கூலி வாங்குவோரும் தண்டிக்கப்பட்டனர். ஊரவர்களிடம் உள்வரி (மறைவாக வாங்கும்வரி) வாங்குதல் ஊர்க்குக்கரவு(துரோகம்)

---

1. ஒவ்வொரு குடும்புத் தெரிவுக்கும் நிற்பவர்களின் பெயர்கள் ஓலை நறுக்குகளில் எழுதப்பட்டன. மரத்தடியில் அல்லது கோயில் மண்டபத்தே சபை கூடினது. அப்பொழுது கோயிற் குருமாரும் அங்கு வந்திருந்தார்கள். குருமாருள் வயதின் மூத்தவர் குடம் ஒன்றை எடுத்து அதனைக் கவிழ்த்து எல்லோருக்கும் காண்பித்தார். விவரம் அறியாத சிறுவன் ஒருவன் குடும்பினின்றும் வந்த ஓலை நறுக்குக் கட்டு ஒன்றை அவரிடம் கொடுத்தான். அவ்வோலை நறுக்குகள் குடத்திலிட்டு நன்முகக் குலுக்கப்பட்டன. பின்பு அக் நறுக்குகளில் ஒன்றை அச் சிறுவன் எடுத்து ஐயரிடம் கொடுத்தான். அவர் தம் ஐந்து விரல்களையும் நீட்டினபடி அதனைத் தமது உள்ளங்கையில் வாங்கி அதிலுள்ள பெயரை வாசித்தார். பின்பு அங்குள்ள மற்ற ஐயர்மாரும் அப்பெயரை வாசித்தனர். இவ்வாறு ஒவ்வொரு குடும்புக்குமுள்ள உறப்பினர்கள் தெரிந்தெடுக்கப்பட்டனர்.

செய்தலாகக் கருதப்பட்டது. [1]சபை மாசபை என்பன முறையே 'குறி', 'பெருங்குறி' என வழங்கின. உறுப்பினர் 'பெருமக்கள்' எனப்பட்டனர். சபைகள் பெரும்பாலும் கோயில் மண்டபங்களிற் கூடின. சபை பறைசாற்றிக் கூட்டப்பட்டது. சபை கூட்டுவது (சேமக்) கலம் அல்லது இரட்டைக் கலம் தட்டி அறிவிக்கப்பட்டது.

அரசனது வாய்க்கட்டளை (திருமுகம்) திருமந்திர ஒலை என்னும் கருமியால் எழுதப்பட்டுப் பொத்தகத்திற் புகுத்துமுன் 'திருமந்திர ஒலை நாயகம்' என்பவனால் ஒப்பு நோக்கப்பட்டது. பின்பு ஒலைநாயகம் வரியிழுத்துக்கொள்க எனக் கருமி ஒருவனுக்குக் கட்டளையிட அது பொத்தகத்திற் புகுத்தப்பட்டுத் தீட்டு(Document)ஆனது. ஏற்பாடுகள் (ஆவணங்கள்) தொடர்பாகப் புரவுவரி, வரிப் பொத்தகம், முகவெட்டி, வரிப் பொத்தகக் கணக்கு, வரியிழுத்து, கண்காணி, பட்டோலை, நடுவிருக்கை முதலிய கருமிகள் இருந்தனர்.

நாட்டிலுள்ள சபைகளுக்கு அனுப்பப்படும் செய்தி ஒலைகள் 'திருமுகம்' எனப்பட்டன. 'நடுவிருக்கை' என்பவன் மனுச் செய்பவனுக்கும் கருமிக்கும் இடையில் நின்று செய்திகளை அறிவிப்பவன். 'ஆவணத்தி' என்பவன் காரிய (Executive) உத்தியோகத்தன். வரிப் பொத்தகம் நாட்டு வரி தொடர்பான கணக்குகள் தீட்டப்படும் பொத்தகம். அதற்

---

1. சபைகளுக்கு ஊர் என்னும் பெயரும் இருந்தது. ஊர் என்பதே மிகப் பழையநாட்டு அல்லது கிராம ஆட்சி நிலையமாயிருந்தது. பிற்காலத்தில் ஊர், சபை எனப்பட்டது. The suggestion may be made that *ur* represents in every case the more premitive local organization indigenous to the Tamil country an lineal descendant of the ancient Mantram; and the Sabah was generally a later superimposition-Studies in Chola History and Administration p - 103.

குப் பொறுப்பாயுள்ள கருமியும் அப்பெயரால் அறியப்பட்டான். புரவுவரி என்பது நிலவரி. புரவுவரித் திணைக்களம் என்பது நிலவரிப்பகுதி (Land Tax Department). வழக்காளியின் வாக்கு மூலம் 'முறைப்பாடு' எனப்பட்டது. நிலம் தொடர்பான வழக்குகள் ஆட்சி ஆவணம் முதலியவைகளை நோக்கி முடிவு செய்யப்பட்டன.

## மக்கட் பிரிவு

மக்கள் தொழிற் பிரிவுகள் பற்றிக் கூட்டங் கூட்டமாகப் பிரிந்து வாழ்ந்தபோதும் பொதுக் கருமங்களில் ஒத்துழைத்தார்கள். [1] ஈழவர் அக்காலத்தில் பனை தென்னைகளில் ஏறி மது இறக்கவில்லை. வருணம் என்பது தென்னிந்திய மக்களாற் கைக்கொள்ளப்படவில்லை. சில பிரிவினர் சிற்சிலவற்றைச் செய்தல் கூடாதென்னும் வழக்கு இருந்தது. இது கம்மாளருக்குச் சோழ அரசன் எழுதி அளித்த பட்டையமொன்றால் விளங்குகிறது. வீட்டில் நடக்கும் நன்மை தீமைகளில் இரண்டு சங்கு ஒலித்தல், மேளமடித்தல், வீட்டைவிட்டு வெளியே செல்லும்போது மிதியடி தரித்தல், வீட்டுக்கு வெள்ளையடித்தல் இரண்டுமாடி வீடுகட்டுதல் வீட்டின் முன்புறத்தைத் தாமரை ஆம்பல் முதலிய பூமாலைகளால் அலங்கரித்தல் போன்ற சகாயங்கள் அப்பட்டையத்தில் வழங்கப்பட்டுள்ளன. தொழிலாளர்களிடையே 'வலங்கை' 'இடங்கை' என்னும் கட்சிகள் இருந்தன. இடங்கையினர் பிராமணர்களின் மிதியடிகளையும் குடைகளையும் தூக்கிச் சென்றனர்.

---

1. இவர்கள் இலங்கையினின்றும் வந்து இந்தியாவிற் குடியேறினோர்; மலையாளத்திற் பெரிதும் காணப்படுவர்,

அரசரும் பெருமக்களும் பல மனைவியருடையராயிருந் தனர். மனைவியர் [1] உடன்கட்டை ஏறும் வழக்கும் இருந் தது. வரலாற்றுக் காலத்துக்குமுன்தொட்டு ஆடல்பாடல் மாதர் மிகவும் கவர்ச்சிக்குரியவர்களா யிருந்தார்கள். விழாக் காலங்களில் அவர்கள் வரவு மிகவும் வரவேற்புக்குரியதா யிருந்தது. அவர்கள் ஆடவர்களுடன் தாராளமாகப் பழகி ஞர்கள்.

அம்பலங்களில் (Rest Houses) தண்ணீர் வைக்கப்பட் டிருந்தது.

## வரியும் வருவாயும்

அரசனது நிதிநிலையம் தலம் எனப்பட்டது. நிதியிற் பெரும்பாலன, நகைகளாகவும் விலையுயர்ந்த மணிகளாகவும் இருந்தன. அபுசா செட் (Apuza Zed) என்பவன் பத் தாம் நூற்றாண்டில் எழுதியிருப்பது .வருமாறு: தங்கத்தில் இரத்தினக் கற்கள் பதித்த குழைகளை இந்திய அரசர் அணி கிறார்கள். அவர்கள் கழுத்தில் இரத்தினம் வைடூரியம் முதலியவைகளாற் செய்த மாலைகள் இலங்குகின்றன. ஆனால் முத்துக்கள் மிகவும் விலையேறப்பெற்றவை. அரசரின் நிதிச் சேமிப்புப் பெரும்பாலும் முத்துக்களாயிருக்கின்றது. அதி காரிகளும் உயர்ந்த கருமிகளும் அரசன் அணிவது போன்ற விலையுயர்ந்த முத்து மாலைகளை அணிகிறார்கள்.

வரி பெரும்பாலும் 'இறை' எனப்பட்டது. பணம் இறுக்கும்படி விதிக்கப்படும் தண்டனை 'தண்டம்' எனப்பட் டது. 'ஆயம்' என்னும் சொல்லும் இறை என்னும் பொரு

---

1. We know that among many early tribes the wives, slaves horses etc. of chiefs were slain at the tomb that their ghosts might accompany the spirit of the master and this is the true origin of Satte - Syrian stone lore.

ளில் வழங்கிற்று. அரசனது வாயில் 'திருக்கொற்றவாயில்' எனப்பட்டது.

மத்திய அரசைச் சேரவேண்டிய நிலவரிக்குக் கிராம சபைகள் பொறுப்பாயிருந்தன. வரிகள் நில விளைவுகளிலிருந்தும் பிற வகைகளிலிருந்தும் வாங்கப்பட்டன. *வெட்டி என்பது கூலி இல்லாத கட்டாய வேலை. நகரவரி (வரிடுவரி,)எரிவரி, வேதனைவரி(அணைகட்டும்கட்டாயவேலை), சிலவரி, மகன்மைவரி, பேர்வரி(Poll Tax), கார்த்திகை யரிசி, கார்த்திகைப் பச்சை (காசு ஆயம்), கடை இறை, படிகாவல், நகர் காவல் எனப் பல வரிகள் இருந்தன.

வரி கொடாதாரைத் தண்ணீரிலிட்டும் வெயிலில்நிறுத்தியும் வேதனைகொடுத்தும் சில நேரங்களில் வரி வாங்கப்பட்டது.

## வாணிகம்

வியாபாரத்தின் பொருட்டு மக்கள் இடங்கள் தோறும் சென்றார்கள். பெரிய தெருக்கள் 'பெருவழி' எனப்பட்டன. பண்டங்கள் கழுதை, பொதிமாடு, எருமைகளில் கொண்டு போகப்பட்டன. பணம் கடன்கொடுத்தவர், வாங்கியவரிடத்திற் பெறும் சீட்டு (Pronote) 'கையெழுத்தோலை' எனப்பட்டது. தமிழ் வியாபாரிகள் மலாயத் தீபகற்பம். இந்துசீனம், சீன முதலிய நாடுகளுக்குச் சென்றனர். மாவலிபுரம், காவிரிப்பூம்பட்டினம், சாலியூர், கொற்கை முதலியன கிழக்கிலும், கொல்லம் மேற்கிலும் பெரிய வியாபாரப் பதிகளா யிருந்தன. இலங்கை நக்கவாரம் (Nicobars)

---

* இலங்கையில் கூலியின்றி அரசினர்பொருட்டுச் செய்யப்பட்ட கட்டாயவேலை இராச காரியம் என்று வழங்கிற்று.

இலக்க தீவு, மாலே தீவுகள் மேற்கிலும், கப்பல்கள் தங்குதற்கு ஏற்ற இடங்களா யிருந்தன. சீன நாவாய்கள் மலேயாளக் கரையிலுள்ள கொல்லம் வரையிற் சென்றன. அராபியாவி லிருந்து குதிரை வியாபாரிகள் குதிரைகளேக் கொண்டு வந்தனர்.

## அடிமைகள்

அக்காலத்தில் பணத்துக்கு விற்று வாங்கப்படும் அடிமைகள் இருந்தார்கள். உயர் குலத்தவர்களும் சில சமயங்களில் அடிமைகளாக வந்தார்கள். இவர்கள் பெரும்பாலும் தம்மைக் கோயில்களுக்கு விற்ருர்கள். அடிமைகளே விற்று வாங்குவதற்கு அரசியல் ஆவணங்கள் எழுதப்பட்டன. கோயில்களுக்கு விற்கப்படும் பெண்கள் 'தேவராட்டியர்' எனப்பட்டனர். வேலே யாட்களுக்குக் கூலி தானியங்களாகவே கொடுக்கப்பட்டது.

## கிராமம்

கிராமங்களில் மக்கள் எளிய வாழ்க்கை நடத்தினர். பண்ணேக்காரன் அல்லது நிலம் வைத்திருப்போன் மேலான நிலேமையில் இருந்தான். கிராம சபைகள் பெரும்பாலும் நிலம் வைத்திருக்கும் பெருமக்களின் கூட்டமாயிருந்தது. கிராமங்களேச் சுற்றிச் சில பகுதிகள் ஊர்ப் பொதுவாக விருந்தன, வரி யிறுக்கும் மக்கள் கிராம ஆட்சியில் பெரும் பங்கு பற்றினர். ஒவ்வொரு கிராமத்திலும் கால் வழியாக வரும் வேலேயாட்கள் இருந்தனர். சேக்கிழார், பெரிய புராணத்தில் நந்தனுரைப் பற்றிக் கூறும் பகுதி, அக்காலக் கிராம வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாகும். தானியம் சேர்த்து வைக்கப்படும் இடம் 'கொட்டகாரம்' எனப்பட்டது. நிலம்

செய்வோன் காணியாளனுக்குக் கொடுக்கும் பாகம் மேல் வாரம் எனப்பட்டது.

## அளவைகள்

நிலங்கள் கோலால் அளக்கப்பட்டன. ஒரு கோல் 16 சாண்; 18 கோல் கொண்டது ஒரு குழி; 256 குழி கொண்டது ஒரு மா; 20 மா கொண்டது ஒரு வேலி. இடங்கள் தோறும் குழி அளவு மாறுபட்டது.

ஆண்டு 360 நாட்களாகவும் சில காலங்களில் 365 நாட்களாகவும் கணக்குச் செய்யப்பட்டது.

## தானிய அளவை

2 செவிடு ஒரு பிடி; 5 செவிடு ஓர் ஆழாக்கு; 2 ஆழாக்கு 1 உழக்கு; 2 உழக்கு 1 உரி; 2 உரி ஒரு நாழி; 8 நாழி ஒரு குறுணி; 2 குறுணி 1 பதக்கு; 2 பதக்கு ஒரு தூணி அல்லது காடி; 3 தூணி ஒரு கலம்.

## பொன் அளவை

ஒரு மஞ்சாடி 2 குன்றி; 1 குன்றி 5 மா; 1 மா நாலு காணி; (ஒரு மஞ்சாடி=2 குறுணி = 10 மா=40 காணி) 20 மஞ்சாடி ஒரு கழஞ்சு (68 முதல் 72 தானிய எடை ;) மா 1/20 யும் காணி 1/80 யும் குறிக்கும். பணஎடை என்பது 1/10 கழஞ்சு.

## நீட்டலளவை

8 தோரை (தானியம்) ஒரு விரல்; 12 விரல் ஒரு சாண்; 2 சாண் ஒரு முழம்.

## பள்ளிக்கூடங்கள்

முற்காலம் பள்ளிக்கூடங்கள் மரத்தடி, 1 கோயிற்சாலை அல்லது மடங்கள் அல்லது உவாத்தியாயர் வீட்டுத் திண்ணையிற் கூடின. பேர் பெரிய திண்ணைச்சட்டம்பியார் என்பது இன்றும் வழக்கு. ஆசிரியனுக்கு மாணவர் உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் கல்வி பயின்றனர். ஏட்டில் எழுதப்பட்ட புத்தகங்கள் வழங்கின. ஏடும் எழுத்தாணியும் கணக்காயராற் பயன்படுத்தப்பட்டன. சிறுவர் மணலில் எழுதிப் பயின்றார்கள். ஆசிரியனின் முதல் மாணவன் அவனுக்கு உதவியாளனாயிருந்தான்; அவன் சட்டாம்பிள்ளை எனப்பட்டான். மாணவர் அவனுக்கு அடங்கி நடந்தார்கள். காலையில் மாணவர் மரத்தடியிலோ திண்ணையிலோ கூடினார்கள். ஆசிரியன் வந்ததும் அவர்கள் எல்லோரும் எழுந்து இருவென இருந்து அவன் கூறுவதைக் கருத்தாகக் கேட்டுப் பயின்றனர். தொல்காப்பியர் காலத்தில் இவ்வகைப் பள்ளிக்கூடங்களே இருந்தன. மாணுக்கர் ஆண்டில் ஒரு முறையோ இருமுறையோஉவாத்தியாயருக்குவேண்டியவற்றை (பெரும்பாலும் தம்வயல்களிலும் கொல்லைகளிலும் கிடைப்பவைகளை) கையுறையாகக் கொடுத்தனர். மாணுக்கன் கல்வியை நிறுத்துங்கால் பெரிய கூட்டங்கூடி அவன் பயின்ற நூலைச் சபையோருக்குப் பிரசங்கிப்பித்து அவன் திறமையைக் காண்பிப்பதும் மரபாயிருந்தது.

---

1. The Hindu Temples were fortresses treasures, court-houses, parks, fairs, exhibition sheds, halls of learning and pleasure all in one - Studies in Chola History and Administration-P. 115.

## இலங்கை அரசர் வரலாற்றுல் அறியப் படுவன சில

இலங்கை அரசர் பெரும்பாலும் தமிழர்கள் அல்லது தமிழ் இரத்தக் கலப்புடையவர்களாக இருந்தனர். இவர்களின் அரண்மனைப் பழக்க வழக்கங்கள் தமிழ் அரசருடையனபோலவே இருந்தன. அரசனுக்குப் பக்கத்தில் 'வலங்கை', 'இடங்கை' என்னும் பெருமக்கள் இருந்தனர். சேனபதி அரசனுக்கு அடுத்தபடியில் அதிகாரமுடையவனுயிருந்தான். அரண்மனைச் சமையலறையில் ஆடவரே வேலை செய்தனர். சமைய லறையில் புழங்கும் தட்டுக்களும் பாத்திரங்களும் வெள்ளி தங்கம் என்பவைகளாற் செய்யப்பட்டவை. நாடோறும் காலையில் மருத்துவன் அரசனது உடல் நிலையைச் சோதித்து அதற்கேற்ற உணவுகளைச் சமைக்கும்படி 'பட்டோலை' எழுதிச் சமையலறைத் தலைவனிடம் கொடுத்தான். உணவு சமைத்ததும் அரசன் உண்பதற்கு ஒரு மணி நேரத்துக்குமுன் சமையலறைத் தலைவனுக்குச், சமைத்த எல்லாவகை உணவிலும் சிறிது சிறிது எடுத்துக் கொடுக்கப்பட்டன. அவன் உண்டு ஒருமணி நேரத்துக்குப் பின் அரசன் உணவு அருந்தினுன். அக்கால அரசர் உணவில் நஞ்சு இடப்படுவதைக் குறித்துப் பெரிதும் அஞ்சினர்.[1] அரசனுக்குச் சோறும், நூறு (பல) வகையான கறிகளும் சமைக்கப்பட்டன. அரசன் அவைகளுட் சிலவற்றை

---

1 The kitchen is carefully guarded and is constructed in a secret place. The food for the king is tested by a multitude of testers. Examination is made of any traces of poison found in the viands and the demeanor ofthe tasters; medicines to the king must pass similar tests. Servants in Charge of the king's dresses and toilets must appear bathed and in washed clothing to receive the toilet requisites daily sealed from the body in charge of the same, before applying them on the king - Chandrgupta Maurya and his time - R. K. Mookerji.

மட்டும் கொண்டு வரும்படி செய்து உண்டான். அவனுக்குச் சமையலறையில் சேவிப்போ ரெல்லோரும் வாயைத் துணியாற் கட்டி யிருந்தனர். பெரியோர்க்கு முன் கைகட்டி வாய் புதைத்து நிற்றல் என்பன பழைய மரபுகள். இன்றும் கதிர்காமத் திருக்கோயிலிற் பூசை செய்யும் சிங்கள குருமார் பூசை நேரத்தில் தமது வாயைத் துணியாற் கட்டிக்கொள்வர். புரோகிதன், அரசன் வெளியே செல்வதற்கும் பிற கருமங்களைச் செய்வதற்கும் நல்ல நேரம் அறிந்து கூறினான். அரசனைக் காணச் செல்வோர் அவனைப் பார்த்த பின் சிறிது தூரம் பின் நோக்கி நடந்து சென்று அப்பால் திரும்பிச் செல்வர். அரசனுக்குப் பின்காட்டிச் செல்வது மரியாதைக் குறைவு என்று கருதப்பட்டது. மக்கள் அரசனுடன் பேசும்போது தம்மை அடிமைகள் (அடியேன்) நாய்கள் (நாயேன்) என்று குறிப்பிட்டுப் பேசுவார்கள்.[1]

## இயல் சு.

## கிழக்கே தமிழரின் குடியேற்ற நாடுகள்

கிறித்தவ ஆண்டுகளின் முன்னர் தமிழ்மக்கள் சுமத்திரா, யாவா, பாலி முதலிய தீவுகளிலும் பர்மா சியம் இந்துச் சினம் மலாய் குடாநாடு முதலிய நாடுகளிலும் குடியேறி இராச்சியங்களைக் கோலி ஆட்சி புரிந்தனர். அக்காலத்தில் அக் குடியேற்ற நாடுகளில் சைவமதம் பரவியிருந்தது. அந்நாடுகளிற் காணப்படுகின்ற பழைய அழிபாடுகளும் கல்வெட்டுகளும் பழங்கதைகளும் நன்கு ஆராயப்பட்டுள்ளன. அவைகளை ஆதாரமாகக் கொண்டு அந்நாட்டு வரலாறுகள்

---

1 Robert Knox's Ceylon, ஸ்ரீ விக்ரமராச சிங்கா (சிங்களம்) இந்நூல்களால் மேற்குறித்த பொருள்கள் விளங்குகின்றன.

எழுதப்பட்டிருக்கின்றன. அவ்வரலாறுகளால் அக்காலத்துக் கடல் கடந்து சென்ற தமிழரைப்பற்றி யாம் நன்கு அறிதல் கூடும். மணிமேகலை என்னும் தமிழ்நூல் (கி. பி. 200) சாவகத் தீவிலே நாகபுரத்திலிருந்து அரசாண்ட பூமிசந்திரன் புண்ணியராசன் என்னும் அரசர் இருவரைக் குறிப்பிடுவதோடு தமிழ் வணிகர் மரக்கலங்களில் சரக்குகளை ஏற்றித் தொலைவிடங்களிற் கொண்டுசென்று விற்றுப் பெரும்பொருளிட்டினார்கள் என்றும் கூறுகின்றது.

திரிதிரயதா என்னும் பிராமணன் கம்போதியாவினின்றும் எண்ணூறு கிளிங்குக் (Kling) குடும்பங்களோடு சென்று பிரமாரி காளி என்னும் யாவக மாதை மணந்து அந்நாட்டுக்கு அரசனானான் என அந்நாட்டுப் பழங்கதைகள் கூறுகின்றன. யாவகத்தின் முதல் அரசனுக்கு ஸ்ரீமாறன் என்று பெயர். இப்பெயர் சாவக நாட்டின் அரச பரம்பரை தமிழ் உற்பத்தியுடையதென்பதை நன்கு விளக்கும். யாவாவிலுள்ள பெரோக் என்னும் மக்களிடையே இன்றும் திராவிடக் குடும்பப் பெயர்கள் வழங்குகின்றன.[1] யாவாவிலே மிகப் பெரிய சில ஆலயங்களின் அழிபாடுகள் காணப்படுகின்றன. பழைய புராணங்களில் யாவகத்தீவு, சுவர்ணபூமி எனக் கூறப்பட்டுள்ளது. யாவகத் தீவிலும் அதனை அடுத்துள்ள தீவுகளிலும் காணப்படும் அழிபாடுகளாலும், கிடைத்துள்ள பழம்பொருள்களாலும் பிறவற்றாலும் அறியக்கிடப்

1. Dravidian tribal names are still to be found among the Bataks - India and the Pacific world; Kern recognised long ago that the earliest Indian colonists of Sumatra were of Dravidian origin. Before the spread-of Malays in different parts of the archopa'elago, the Dravidian element was supreme. The Austric people of Cambodia mixed with the Dravidians and founded a powerful kingdom long ago,-Prehistoric Ancient and Hindu India. P 30 R. D. Banerji.

பன பின்வருமாறு. [1] யாவாத் தீவிற் காணப்படும் திருக் கோயில்களுட் பல சிவனுக்கு உரியன. யாவக மக்களின் அமரமாலே என்னும் நூல் பழமையுடையது. அஃது அம் மக்கள் வழிபட்ட தெய்வங்களைப்பற்றிக் கூறுகின்றது. அந்நூலினுல் அந்நாட்டினர் சிவனையே தலைமையாகக்கொண்டு வழிபட்டார்களெனத் தெரிகின்றது. சிவன், குரு, ஈஸ்வரன் என்னும் பெயர்களால் வழிபடப்பட்டார். சுமத்தியாவிலே லாரா யொங்ருங் (Lara Yongrang) என்னுமிடத்தில் ஆலயக் கூட்டங்களின் பெரிய அழிபாடு உள்ளது. இதன் நடுவில் பெரிய சிவன்கோயிலும், இருமருங்கிலும் பிரமன், திருமால் ஆலயங்களும் எதிரே நந்தியின் ஆலயமும் உள்ளன. வலப்பாதி சிவனும் இடப்பாதி உமையுமாகவுள்ள அர்த்தநாரீசுவரத் திருவடிவமும் அங்குக் காணப்படுகின்றது. விநாயக விக்கிரகங்கள் மிகப் பல இங்குள்ளன. இவை இந்திய ஆலயங்களிற் காணப்படும் திருவுருவங்களைச் சாலவும் ஒத்தன.

போர்க் கடவுளாகிய கார்த்திகேயக் கடவுளின் திருவுருவங்களும் யாவாவிற் காணப்படுகின்றன. மனித வடிவம் மயில்மீது ஏறிச்செல்வது போன்ற உருவங்களே பெரும்பாலும் உள்ளன. ஆறுதலையும் பன்னிரண்டு கையுமுள்ள திருவுருவங்கள் சிலவும் காணப்படுகின்றன. சிவன் இலிங்க வடிவிலும் வழிபடப்பட்டார்.

சங்குசக்கரம் தாமரை கேடகம் என்பவைகளைப் பிடித்திருக்கும் நான்கு கைகளுடைய திருமாலின் திருவுருவங்களும் கிடைத்துள்ளன. பாம்பின்மீது படுத்துத் துயில் கொள்ளும் திருவுருவங்கள் சிலவும் இங்குக் காணப்படுகின்

1. Ancient Indian Colonies in the Far East - Dr. R. C. Mazumdar.

றன. இலக்குமியும் சத்தியபாமையும் இருபக்கங்களிலும் நிற்கும் திருவுருவம் பாலித்தீவிற் கண்டுபிடிக்கப்பட்டது. பூமாலை சாமரை தாமரை கரகம் என்பவைகளைக் கைகளில் வைத்திருக்கும் நான்கு முகமுடைய பிரமாவின் விக்கிரம் யாவாவிற் காணப்படுகின்றது. சேரம் (Seram) என்னும் பகுதியில் அமராய என்னுமிடத்தில் மும்மூர்த்திகளின் திருவுருவங்களோடு பொன்னாற் செய்யப்பட்ட சிவன் திரு வுருவம் ஒன்றுங் கிடைத்தது.

செலிபிசியில் (Celebes) சிவ வணக்கத்துக்குரிய சின்னங் கள் பல காணப்படுகின்றன. அந்நாட்டு மக்களின் பழங் கதைகளில் சிவன் பாரத குரு எனப்படுகின்றார். கிருபாட் (Crawfurd) என்பார் நியுகினியிற் காணப்படும் சமயக்கிரியை கள் சிவவழிபாட்டின் தேய்வுகள் எனக் குறிப்பிட்டுள்ளார். மேற்குப் போர்னியோவில் நந்தி, கணேசர் இலிங்கம் முதலிய உருவங்கள் காணப்பட்டன. இவைகளுடன் ஒரு பொன் இலிங்கமும் காணப்பட்டது இங்குக் குறிப்பிடத்தக்கது.

[1] மலாய்க் குடாநாட்டிலுள்ள தீவுக்குச் சிங்கபுரம் என் னும் பெயர் அந்நாட்டு மக்களாற் கொடுக்கப்பட்டதன்று; யாவாத் தீவிற் குடியேறி அங்குநின்றும் வெளிப்போந்த தென்னிந்திய மக்களால் இடப்பட்டது. அதற்குத் தமசக் அல்லது தமசா[2] என்னும் பெயர் இருந்ததெனக் கொள்ளி னும் அதுவும் இந்திய உற்பத்திக்கு உடையதாகும். சுமத் திரா என்பதும் இந்திய மக்களாற் கொடுக்கப்பட்ட பெயரே. சுமத்திரா என்பதற்கு நல்ல பொருள் என்ற கருத்து. [3] கி.பி. 1601 முதல் சிங்கபுரம் சிங்கப்பூர் என வழங்கப்படுகின்

1. British malaya-an account of the origin P. 13. F Swettten-ham. 2. Tamasak or Tamasha. 3. Sumatra, a name of Indian origin (Somatra) excellent matter or substance-Ibid;

றது. மலாய்க் குடாநாட்டிலே கொபுரா இசுவம் (Hopura-Isuom) என்னுமிடத்தில் காணப்பட்ட கணேச விக்கிரகத்தில் தென்னிந்திய எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அங்கு அழகிய நடராசத் திருவுருவமொன்றும் காணப்பட்டது. இன்று மலாய்க் குடாநாட்டிற் காணப்படும் மக்கள் தமிழரினின்றும் தோன்றியவர்களாவர் எனச் சுவற்றின்காம் என்னும் ஆசிரியர் கூறியுள்ளார்.

கம்போதிய மக்களின் பழங்கதைகளில் கம்புசுவாயம்பவ என்பவருக்குச் சிவன் அளித்த மேரா அல்லது பேரா என்பவளிடம் பிறந்து பெருகியவர்களே அந்நாட்டு மக்கள் எனக் கூறப்படுகின்றது. கம்போதியா கொச்சின் சீன தெற்குச் சீயம் முதலியன அடங்கிய பகுதியைச் சீனர் பூனன் (Funan) என வழங்கினர். கவுண்டினியா என்னும் பிராமணன் நாகினி சோமா என்னும் அரசகுலப் பெண்ணை மணந்து கம்போதியாவுக்கு அரசனானான் என அந்நாட்டுப் பழங்கதையுள்ளது.[1] இலங்கை தென்னிந்திய கிழக்குக் கரையோரங்களில் வாழ்ந்த மக்களே கம்போதியாவிற் குடியேறினார்கள்.[2] கம்போதிய அரசர், வர்மன் என்னும் பட்டப்பெயர் புனைந்து முடிசூட்டப்பெற்றனர். தென்னிந்திய பல்லவ அரசர்களும் வர்மன் என்னும்பெயர் பெற்றிருந்தனர். சந்திரவர்மன் என்னும் கம்போதிய அரசன் கி. பி. மூன்றாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்தான். அங்கோர்வாட் (Ankor-Vat) என்னுமிடத்திற் காணப்படும் கோவிற் கோபுரங்கள்

1. The BrahmanKaundinya who married a native princes called nagini Soma and became lord of the country on the 1stcentury A.D. This was the beginning of the Cambodian dynasties ruling Cambodia for over 1,000 years, sharing the peninsula with the Indo-China rulers of cambodia (ultimately of Indian origin)-India and the pacific world - P. 117. 2. Epigraphical evidences of Vocan points to South India as the home of the Indian colonists - Indian colonists in Funan and cambodia P. 12. C, S. Srinivasachari.

தென்னிந்திய கோயிற் கோபுரங்களை ஒத்துள்ளன. இங்குக் காணப்படும் நடராசத் திருவுருவங்களும் பிரசான்றுகளும் இங்குக் குடியேறினோர் தென்னிந்திய மக்களே என்பதை விளக்குகின்றன.[1] கம்போதிய அரசருள் பாவவர்மன் என்போன் சிறந்த சிவபத்தன். இவன் கி. பி. 616-ல் கம்பீரவாணர் என்னும் ஒரு சிவலிங்கத்தை நாட்டி வழிபட்டுவந்தான். கம்போதியர் கடவுளருள் சிவனே தலைமைபெற்றிருந்தார். பிரசார், சினெங், கருபி முதலிய இடங்களிற் சிவன் உமையோடு இடபத்தில் வீற்றிருக்கும் திருவுருவங்கள் காணப்படுகின்றன. இடபத்தின்மீது வீற்றிருக்கும் வடிவத்திலும் பார்க்க நடராச வடிவமே மக்களால் பெரிதும் வழிபடப்பட்டது. அரசரும் பொதுமக்களும் இலிங்கங்களை நாட்டியதைக் குறிப்பிடும் கல்வெட்டுகள் பல கம்போதியாவிற் கிடைத்துள்ளன.

[2] சியத்திலே பாங்கொக் நகருக்கு அருகேயுள்ள குளம் ஒன்றின் பக்கத்தே காலன் இடபம் இலிங்கம் என்னும் சிலைகள் உள்ளன. இவைகளின் முன்னே பொதுமக்கள் சத்தியஞ் செய்தார்கள். பாச்சிம என்னும் புத்த ஆலயத்தின் வெளியே சிவலிங்கமொன்று உள்ளது. பெண்கள் இதனைச் சுற்றிவந்து துதித்துப் பிள்ளைவரம் வேண்டுகின்றார்கள். இவ்வாலயம் முன்பு சிவன் கோயிலாயிருந்ததென்பதிற் சிறிதும் ஐயம் இல்லை. மலாயர் யாவகர் மகமதியர் முதலிய எல்லாச் சமயத்தினரும் சிவனுக்குச் செய்வதுபோலப் பூவும் பழமும் பொங்கலும் வைத்து இவ்வாலயத்தில் வழிபடுகின்றனர். கொச்சின் சின அரசன் ஒருவன் விசய ஈஸ்வரர்

---

1. Hindu Colony of Cambodia-Prof. Phanindranath.

2. ShortStudies in theScience of Comparative religions - Major General - T. G. R. Forlong.

ஆலயங் கட்டி அங்குச் சிவலிங்கப் பிரதிட்டை செய்த வரலாறு கல்வெட்டிற் காணப்படுகின்றது.

கம்போதியாவிலே சிவன்கோயில் ஒன்றிற் செதுக்கப்பட்டுள்ள கல்வெட்டிற் காணும் விபரம் பின்வருமாறு:

3 யோகவர்மன், ஆச்சிரமத்துக்குக் கொடுத்துள்ள முத்து, பொன், வெள்ளிக்காசு, குதிரை, எருமை, யானை, ஆடவர், மகளிர், பூமாலை முதலியவற்றை அரசர் எவரும் கவர்ந்துகொள்ளுதல் ஆகாது. பிராமணர், அரசன், அரசனின்பிள்ளைகள் மாத்திரம் ஆபரணங்களைக் கழற்ருது கோவிலின் உள்ளே செல்லலாம். பெருமக்களின் பரிவாரங்களாகச் செல்லும் பொதுமக்களும் ஆடம்பரமில்லாத உடையுடன் உள்ளே செல்லலாம்; அவர்கள் நந்தியாவர்த்த மாலையையன்றி வேறு மாலைகளை அணிந்துகொண்டு செல்லுதல் ஆகாது. ஆலயத்துள் இருந்து எவரேனும் வெற்றிலை போட்டுக்கொள்ளவோ உணவு அருந்தவோ கூடாது. பொதுமக்கள் ஆலயத்தின் உள்ளே செல்லுதல் ஆகாது; உள்ளே சண்டை அல்லது பரிகாசம் முதலியனவும் செய்தல் கூடாது. சிவனையும் திருமாலையும் வணங்கும் பிராமணரும். நல்ல பழக்க வழக்கமுடையவர்களும் மாத்திரம் உள்ளே தங்கி நின்று மெதுவாகத் துதிபாடிக் கடவுளைத் தியானிக்கலாம். அரசனையன்றி வேறெவராவது ஆலயத்துக்கு முன்னுற் செல்ல நேர்ந்தால் தேரினின்றும் கீழே இறங்கிக் குடைபிடியாது நடந்து செல்லுதல் வேண்டும். பிற நாட்டவர்களுக்கு இவ்விதி விலக்கப்பட்டுள்ளது. பிராமணர், அரசர், மந்திரிமார், அரசனின் பிள்ளைகள் திருமாலை வழிபடும் குருமார் பொதுமக்களுள் சிறந்தோர் முதலியவர்கள் விருந்தாக

---

3. Indian Cultural Influence in Cambodia - B. R. Chatterji.

வந்தால் ஆலயத்தின் தலைமைக்குரு இவர்களை வரவேற்றுச் சொன்ன முறைப்படி உணவு, நீர், வெற்றிலை முதலியன கொடுத்தும் அவர்களுக்கு வேண்டியன புரிந்தும் உபசரித்தல் வேண்டும்.

இதில் எழுதப்பட்டுள்ள கட்டளைகளைக் கடக்கின்றவர் எவரும் ஞாயிறும் திங்களும் உள்ள அளவும் நரகத்தைச் சேர்வார்கள்; இக் கட்டளைகளுக்குட்பட்டு அவைகளை வலுப்படுத்துகின்றவர்கள் இத்தருமத்தை உண்டாக்கியவர் பெறும் பலனிற் பாதியைப் பெறுவர்.

கலிங்க நாட்டினின்றும் எழுநூறு தோழரோடு சென்ற விசயனென்னும் இராசகுமாரனே இலங்கையின் முதல் அரசன் எனப்படுகின்றான். கலிங்கர் தமிழர்களே என்பது எவருமறிந்த உண்மை. முன் 'எல்லம்' என வழங்கிய இலங்கைத்திவு சிங்க வமிசத்தவனாகிய கலிங்க அரசன் ஆண்டமையின் சிங்கலம் (சிங்களம்) எனப் பெயர்பெற்றது. இன்னும் சிங்கள மக்கள் தாம் விசயனதும் அவன் 700 தோழர்களதும் வழித் தோன்றல்கள் என நம்பி வருகின்றனர்.

சுமத்திரா, யாவா, இந்துச்சீனம், மலாயா, இலங்கை முதலிய நாடுகளிலெல்லாம் நாகவழிபாடு காணப்பட்டது. இது காரணமாக அந்நாடுகளின் மக்கள் நாகர் எனவும் அறியப்பட்டனர். யாவாத் தீவிலே அரசனும் அவனைச் சூழ்ந்து திரியும் பெருமக்களும் பொன்பாம்பு, பொன்யானை, பொன்மான், பொன் கோழி, அர்ச்சுனனின் அனுமக்கொடி என்பனவைகளைக் கையில் வைத்திருந்தார்கள். இங்குக் கி. பி. 11-ம் நூற்றாண்டிற் றமிழிற் பொறிக்கப்பட்ட பட்டையமொன்று கண்டுபிடிக்கப்பட்டது.[1] இதனால் ஒரு காலத்தில்

1. Tamilian Antiquary.

தமிழ் யாவாத்தீவில் அரசினர் மொழியாக இருந்ததென நன்கு அறியலாம். அருச்சுனன் நாகர் குலக்கொடியாகிய யாவகமாதை மணந்து அரவானைப் பெற்றானென்று யாவக மக்கள் நம்புகின்றனர்.

இந்தியாவிலே புத்த சமயம் தலையெடுத்தபின் பலி மரபினர் கடல் வழியாகச் சென்று பாலித் தீவிலும் அயலேயுள்ள தீவுகளிலும் குடியேறினர். இத்தீவுகளில் வாழும் மக்கள் திராவிட மக்களை ஒத்த ஒழுக்கமுடையவர்களாகக் காணப்படுகின்றனர் என அகரம் என்பவர் குறிப்பிட்டுள்ளார்.[1] மாபலி அசுரன் எனப்படுகின்றான். அசுரர்கள் வேத காலத்துக்கு முன்பும் அதன் முற்பகுதியிலும் தேவர்கள் எனப்பட்டனர். பிற்காலத்தில் அவர்கள் இராக்கதர் அல்லது தேவர்களின் பகைவர் எனப்பட்டனர். [2] இராமாயணத்திற் கூறப்படும் வாலியும் சிவலிங்க வழிபாட்டினன். வாலியின் மரபும் பலியின் மரபும் ஒன்றேயென்பது ஆராயத்தக்கது.

## இயல் ௭

## தமிழர் சமய வரலாறு

இன்று இவ்வுலகில் பல்வேறு நிறத்தினரும் மொழியினருமாகிய மக்கள் ஆங்காங்கு வாழ்ந்து வருகின்றனர். மனித வரலாற்று, மொழி வரலாற்று ஆராய்ச்சியாளர், இவர்கள் எல்லோரும் ஒரு மையத்தினின்றும் பிரிந்து சென்றவர்களே

---

1. After the rise of Buddhism we find Balis flying seawards to "Little Java" or Baly and the Sunda group; and there they are still with that marked Dravidian characteristics - Rivers of Life Vol 2 P. 486.

2. Indeed the Asur or Asuras were gods or angels in high Asian or Prevedic aud early vedic days; But in all sub Vedic literature they are A - suras or great giants - Ibid - P. 485,

யென ஆராய்ந்து அறுதியிட்டுள்ளார்கள். இதனை ஒப்பவே மக்களின் சமயமும் ஒன்றாயிருந்து வளர்ச்சியுற்றுப் பின் பல வேறு கிளைகளாகப் பிரிந்ததென்பது உய்த்தறியப்படும்.

## அம்மை வழிபாடு

மக்களிடையே ஆதியிற் றோன்றியது தாய் வழிபாடு. வீரம் செல்வம் கல்வி போன்றவைகளுக்கெல்லாம் தலைமை பெற்றிருக்கும் கடவுளர் பெண்பாலினரே. உலகில் ஆதியிற் றோன்றியது பெண் ஆட்சி. அக்காலத்தில் மணத்தொடர்புகள் இறுக்கம் அடையவில்லை. தாய் பெறும் குழந்தைகள் குடும்பத்துக்குச் சொந்தமானவை; தந்தைக்கு அவைகளிடம் உரிமை உண்டாகவில்லை.[1] இன்றும் இவ்வழக்குத் திருந்தாத மக்களிடையும் திருந்திய மக்கள் சிலர் இடையும் காணப்படுகின்றது. மலையாள நாட்டில் மருமக்கட் டாயம் என்னும் வழக்குண்டு. இதன்படி தந்தையின் சொத்துப் பிள்ளைகளைச் சேராது அவன் சகோதரியின் பிள்ளைகளை அடைகின்றது.[2] திருவிதாங்கூர் அரசுரிமையும் பெண்வழியையே சேர்கின்றது. அரசனின் மருகனும் மருமகளுமே இளைய இராசர், இளைய இராணி என்னும் பட்டம் பெறுகின்றனர்.

---

1. The fatherhood is not taken into account when the sexual bord is a loose one, and under such circumstances the descent can only be reckoned in the mother's side...... The sense of fatherhood was of later development and that in premitive times the child was held to be allied by blood with the mother and not with the father - Premitive family - C. N. Starcke.

2. மலையாளத்திலுள்ள நாயர் வகுப்பினரிடையில் காணப்படும் விவாகத்தொடர்பு 'சம்பந்தம்' எனப்படும். பெண், தான் விரும்பிய எந்த நேரமும் இத்தொடர்பை வெட்டிவிடலாம். பின்பு அவள் இன்னொரு ஆடவனோடு சம்பந்தம் வைத்திருக்கலாம். அவனுக்கும் ஒரு வகைக் கட்டுப்பாடும் இல்லை. மலையாளத்தில் பெண் தனது 'தார்வாட்'டில் இருக்கிறாள். அவள் இருக்கும் இடத்துக்குக் காதலன் செல்கின்

அரசனின் பிள்ளைகளுக்கு இராச்சியத்தில் ஒருவகை உரிமையும் இல்லை.[1] இவ்வழக்குகளெல்லாம் பெண் ஆட்சி உண்டாயிருந்த காலத்தின் எதிரொலிகளே. சகோதரியின் மகன் மகளை மணம் முடித்தலினாலேயே பெண்ணின் தந்தையின் சொத்து மருமகனைச் சீதனமாக அடைகிறதெனத் தேயிலர் என்னும் மனிதவரலாற்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். 'தாயம்' என்பது பெண் ஆட்சி உண்டாயிருந்த காலத்துத் தோன்றிய சொல். இது, சொத்துத் தாயிடமிருந்து பிள்ளைகளை அடைந்தது என்பதை நன்கு விளக்குவது. தாயாட்சி உண்டாயிருந்த காலத்தில் பிள்ளைகள் தாயைச் சூழ்ந்திருந்தார்கள். தாயிடத்தில் எல்லா அதிகாரமும் இருந்தன. எல்லா அதிகாரமுமுடைய தாய் தெய்வமாக வணங்கப்பட்டாள். தாயிற் சிறந்தொரு கோயிலில்லை அல்லவா? இவ்வழிபாடு மக்கள் வாழ்க்கைப்பருவத்தின் மிக முற்காலத்திலேயே தோன்றி யிருந்தது. இன்று தாய்க்கடவுளின் சிலைகள், வளர்ந்தகடைவாய்ப்பற்களுடையனவாகக் காணப்படுகின்றன.

---

றான். சிலவேளை காதலன் அவளிடம் செல்லாமலே நழுவிவிடுகிறான், அல்லது அவள் அவனுக்கு அங்கு வருதல் கூடாதென அறிவிக்கின்றாள். இவ்வாறு 'சம்பந்தங்' குலைந்துபோகின்றது. பிள்ளைகள் தாய்க்குச் சொந்தமானவை. தந்தைக்கு அவர்களைப் பராமரிக்க வேண்டிய கடமை இல்லை. அவனுக்குத் தனது குடும்பத்திலுள்ள சகோதரியின் பிள்ளைகளைப் பராமரிப்பதே கடமை—Dravidian Elements in Indian culture—G. Slater.

இலங்கையிலும் சிங்கள மக்களிடையே இவ்வகை மணங்கள் பின்னி (Bini) மணம் என்னும் பெயருடன் நடைபெற்றன.

1. The *Ammachi* is not a member of the Royal household and is nowise is associated with the royal court. She has neither official nor social position at court, and cannot even be seen in public with the ruler whose wife she is. Her issues occupy the same position as herself and the law of Malabar exclude them from all Claims to Public recognition........The nieces, who like nephews have the title of Highness ;and Rani......Native life in Travancore - Rev. Samuel Mateer,

தென்னிந்திய மக்களின் நாகரிகம் படைப்புக்காலம் முதல் படிப்படியே வளர்ந்துவந்துள்ள தென்பது முன்னமே காட்டப்பட்டுள்ளது.

இத் தாய்க்கடவுளின் வடிவமும் ஆதிகாலத்தில் மக்கள் கொண்டு வழிபட்ட வடிவைப் பின்பற்றியே வெட்டப்பட்டும் எழுதப்பட்டும் வருகின்றதெனக் கொள்ளுதல் தவறாகாது. தார்வின் என்பார் (Darwin) எல்லாராலும் உச்சிமேல் வைத்துப் புகழப்படும் உயிர்நூற் புலவர். இவர் ஆதிகால மக்களுக்கு வளர்ந்த கடைவாய்ப்பற்கள் இருந்தனவென்றும், அவை பச்சை இறைச்சியைக் கிழிப்பதற்குப் பயன்பட்டன வென்றும், அவைகளின் பயன் குறைந்தகாலத்தில் அவை வளர்ச்சி குன்றி வேட்டைப் பல் (Canine teeth) அளவில் இருக்கின்றனவென்றும் கூறியுள்ளார் [1]. ஆகவே தாய்க்கடவுள் வழிபாடு மக்களுக்குக் கடைவாய்ப் பற்கள் வளர்ச்சியடைந்திருந்த ஒரு காலத்தில் ஆரம்பித்ததெனக் கொள்ளலாம்.

தாய்க்கடவுளின் வாகனம் சிங்கம். அவள் கையிலிருக்கும் ஆயுதங்கள் தண்டும் கேடகமும். கடவுளருக்கு நான்கு கைகளும் பல கைகளும் கொடுக்கும் வழக்கம் கிறித்தவ ஆண்டுக்குப் பின்னையது என [2] மாக்டனல் என்னும் ஆசிரியர் ஆராய்ந்து காட்டியுள்ளார். அவர் கூறுவது:

---

1. ஆண் விலங்குகளுக்கும், மக்களுள் ஆண்பாலினருக்கும் குழந்தைகளுக்குப் பால்கொடுக்கும் உறுப்புகளின் அடையாளங்கள் காணப்படுகின்றன. பெண் இனங்கள் அதிக குட்டிகளை ஈனுகின்ற காலத்தில் ஆண் இனங்களும் குட்டிகளுக்குப் பால்கொடுத்தனவென்றும், அக்காலத்தில் அவ்வுறுப்புகள் வளர்ச்சியடைந் திருந்தனவென்றும், அவற்றின் பயன்பாடு குறைந்த பிற்காலத்தில் அவை வளர்ச்சி குன்றி அடையாளமளவில் இருக்கின்றனவென்றும் அவர் கூறுவர்.

2. India's past - A. A. Macdonell - P.P. 84-5.



மொகஞ்சொதரோவிற் கண்டு பிடிக்கப்பட்ட சிவலிங்கம்.



அரப்பாவிற் கண்டு பிடிக்கப்பட்ட இருதய வடிவமுள்ள பெண்கள் கைவளை



கித்தைதியிற் காணப் பட்ட அம்மை அப்பர்க் கடவுளர் பொறித்த நாணயம்

—பக்கம் 12

நாணயத்தில் இடபத்தின்மீது இருக்கும் அப்பரும், அருகில் சிங்கவாகனத்தின் மீதிருக்கும் அம்மையும் காணப்படுகின்றனர். சிரியா, பபிலோன் எகிப்திய நாடுகளிலும் சிங்கவாகனமுடைய தாய்க் கடவுளே மேலான தெய்வமாக வழிபடப்பட்டார்.

"The lioness or panther on which she sits (the great Asiatic mother goddess) remind us of the—lion drawn car of Cybele who was worshipped in the neighbouring land of Phrygia across the Halys. So Adargate the great Syrian goddess of Herapolis Bambyce, was potrayed sitting on a lioness....At Babylon image of a goddess whom the Greeks called Rheu had the figures of two lions standing on her knees. On Egyptian monuments the Semitic God Kadesh represented standing on a lion—Golden Bough. Among the Babylonian and northern Semites she was called Istar (ஈசுவரி) the Astoreth of Bible and Astorate of Phoenicia—The Hittite Empire, P. 204.



1

இரண்டாம் கட்பீஸ் என்னும் கிரேக்க இந்திய அரசனின் (கி. பி. 50) தங்க நாணயம்—பக்கம் 129.



2

மொகஞ்சொதரோ முத்திரை ஒன்றிற் பொறிக்கப் பட்டுள்ள பசுபதி (சிவன்) வடிவம்—பக்கம் 212.

(2) மேற்கு ஆசியா நாடுகளிலும் கடவுளரின் தலையில் இரண்டு கொம்புகள் காணப்படுகின்றன. அரசரும் கொம்புகளை அணிந்தனர். கொம்புகள் மேலான அதிகாரத்தைக் குறிப்பனவென்றும் அவை ஞாயிற்றின் கதிர்களின் குறிகளென்றும் கருதப்படுகின்றன.

"The husband god like Baal of Tarsus was identified by the Greeks with Zeus and Lucian tells us that the resemblance of his image to the images of Zeus was in all respects unmistakable. But his image unlike those of Zeus was seated upon bulls. A similar god of thunder and lightning was worshipped from early times by the Babylonians and Assyrians. His image in represented ........wearing a cap with two hours—Golden Bough.

"இந்துக்கடவுளரின் வடிவங்களை அமைக்கும் முறையில் கிறித்தவ ஆண்டின் ஆரம்பத்தில் சில மாற்றங்கள் உண்டாயின. அதற்குமுன் இக் கடவுட்சிலைகள் மனிதனைப்போல இரண்டு கைகளுடையனவாயிருந்தன. இவ்வகை வடிவங்களே புத்த சிற்பங்களிற் காணப்பட்டன. இரண்டாம் கட்பிஸ் (Kadphis ii ; 50. A. D) என்னும் கிரேக்க இந்திய அரசனின் நாணயத்தில் சிவன் இரண்டு கைகளுடையவராகவேகாணப்படுகின்றார்." மொகெஞ்சொ-தரோவிற்காணப்பட்ட சிவன் வடிவுக்கு இரண்டு கைகள் இருப்பதும் மேற்படி கூற்றை வலியுறுத்துகின்றது. சின்ன ஆசியாவிலே கித்தைதி என்னும் நாடு ஒன்று உள்ளது. இம்மக்களின் வழிபாடு நாகரிகம் முதலியன தமிழ்மக்களுடையன போன்றன. இங்குக் காணப்பட்ட பழைய நாணயமொன்றில் ஒரு கையிற் றண்டும் மற்றக் கையிற் கேடகமும் பிடித்துச் சிங்கத்தின்மீது வீற்றிருக்கும் தாய்க்கடவுளின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கின்றது. இதனால் பண்டைய தாய்க்கடவுளின் வடிவம் இரண்டு கைகளுடையதாகவே இருந்ததெனத் துணியப்படும். பெண் சிங்கத்தின்மீதிருக்கும் குடைஷ் என்னும் தாய்க்கடவுளே எகிப்தியாது போர்த்தெய்வமாகும்.

தாய்க்கடவுள் மேற்கு ஆசிய மக்களால் அஸ்ரெறெத், ஹெறா, றியா முதலிய பல பெயர்களால் வழிபடப்பட்டது. மக்கள் மிகத் தாழ் நிலை அடைந்திருந்த காலத்தே தாய்க்கடவுள் வழிபாடு ஆரம்பித்ததென்பது அதன் வழிபாட்டு முறைகளால் நன்கு அறிதும். தமிழ் மக்கள், காடுகிழாள், கொற்றவை, விந்தை, காளிமுதலிய பெயரால் தாய்க்கடவுளை வழிபட்டனர். தாய்க்கடவுளுக்கு நரபலியும், எருமை ஆடு முதலிய பிற பலிகளும் இடப்பட்டன என்று பழந் தமிழ் நூல்களால் அறிகின்றேம். காளி பாலைநிலத் தெய்வம். பாலை

நில மக்கள், வேடர், இடையர், உழவர் என்னும் மக்களின் வாழ்க்கைப்படிகளில் ஆரம்பப் படியிலுள்ளோர். ஆகவே தாய்க்கடவுள் வழிபாடு, மக்கள் பயிரிடாதும், மிருகங்களைப் பிடித்துப் பழக்கி வளர்க்க அறியாதும் இருந்த ஒரு காலத்தில் ஆரம்பித்ததாகும். தாய்க்கடவுள் வழிபாட்டின்போது பாம்பு வழிபாடு ஆரம்பிக்கவில்லைபோலும்.

## அப்பர் வழிபாடு

தாய்க்கடவுள் வழிபாடு இவ்வாறு தோன்றி நடைபெற்று வரும்போது திருமணக்கட்டுப்பாடு இறுக்கமடைந்தது; தந்தை ஆட்சி உண்டாயிற்று. தந்தையே எல்லா அதிகாரமும் உடையவனானன். ஆகவே தந்தை வழிபாடு உண்டாயிற்று. ஔவைப் பிராட்டியார், "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்." என அருளிச் செய்திருக்கின்றமையும் அம்மை அப்பர் வழிபாட்டை ஓரளவு விளக்குவதாகும். தந்தை வழிபாடு, காலத்தில் வேந்தன் வழிபாடாக மாறிற்று. தாய்க்கடவுளை ஒப்பப் பழைய மக்கள் வழிபட்ட தந்தை வடிவம் இன்றைய சிவன் வடிவமே எனத் தெரிகின்றது. கித்தைதி நாட்டிலே காணப்பட்ட பழைய நாணயத்தில் தாய்க்கடவுளுக்கு வலப்பக்கத்தே, முத்தலைவேலும் கண்டகோடரியும் கையிற்றாங்கிய அப்பர் வடிவம் ஒன்று இடபத்தின்மீது நிற்கின்றது.[1] இதே வடிவினதாகக் கல்லாற்செதுக்கப்பட்ட

1. There is on the left band of the image of the bull god and on the right that of the mother goddess both deities are enshrined representing the mated pair of the established Hittitee devinities. But that which arrests the attention and may throw light upon the broader question of the Hittitee origins is the obivious parallelism of Siva. ......This god is seated on the bull throne and the goddess wearing the mural crown sits on a lion throne with staff and mace forming a pair - The Hittitee Empire - John Garstang pp 204, 304.

It (Jupiter Dolichenus) seems more the less to represent the



பழைய சிரியா (மேற்கு ஆசிய) மக்கள் வழிபட்ட
அடாட் என்னும் கடவுளின் வடிவம்

ZEUS—P. 637 Arthur Bernard Cook —பக்கம் 131

சிரியா மக்கள் வழிபட்ட அடாட் என்னும் சிவன் கடவுளின் திருவடிவம் ஒன்று அவ்விடத்திற் கண்டு பிடிக்கப்பட்ட வெண்கலத்தட்டு ஒன்றின் மீது பொறிக்கப்பட்டுள்ளது. அக் கடவுள் ஒரு கையில் இரண்டு அலகுள்ள கோடரியையும் (மழு) மற்றக் கையில் மூன்று அல்லது மூன்று முத்தலைகளுடைய வேலையும் பிடித்திருக்கின்றார். மேற்கு ஆசிய மக்கள் முத்தலை வேல் அல்லது சூலத்தை இடியேறு என வழங்கினர் கள். "At his (The Jupiter of Syria) side hangs his sword in its scabbard. His right hand brandishes a double axe; his left grasps a thunderbolt consisting of six spirally-twisted lines, each of which is tipped with arrow head. The bull that supports the god has a rosette on the forehead between eyes—Zeus. P. 619.

இடபத்தின் நெற்றியில் பூமாலை கட்டப்பட்டுள் ளது "....for in the Roman art he reappears under the title of Jupiter Dolichenus, wearing a phrygian cap, standing on a bull, and weilding a double axe in one hand and a thunderbolt on the other. In this form his worship was transported from the native home by soldiers and slaves till it had spread over a large part of the Roman empire, specially on the frontiers where it flourished in the camps of the legions"—The golden bough—a study of art and religion—Part IV, P. 134—J. G. Fracer.



சின்ன ஆசியாவிலுள்ள கித்தைதி (Hittite) நாட்டு
மக்கள் வழிபட்ட சிவன் கடவுள்

—பக்கம் 131

கித்தைதி நாட்டு அரசனுக்கும் இரண்டாம் இரம்செ என்னும் எகிப்திய அரசனுக்கும் இடையில் எழுதப்பட்ட உடன்படிக்கை ஒன்று சூளையிட்ட களிமண் தகடுகளுட் கண்டெடுக்கப்பட்டது. அவ்வுடன்படிக்கை கி. மு. 1290-ல் எழுதப்பட்டுள்ளது. அதில் இடியேற்றைக் கையிற் பிடித்திருக்கும் தந்தைக் கடவுளே எல்லாக் கடவுளரிலும் மேலானவர் என்று குறிக்கப்பட்டுள்ளது.

Golden Bough—IV, P. 137.

"His hands are raised, in his right he holds a single headed axe or hammer, in the left a trident of wavy lines, which is thought to stand for forked lightning or a bundle of thunderbolts.... The combination of the bull with the thunderbolt as emblems of deity suggests that the animal may have been chosen to represent the sky god not merely of its virility but of its voice; for in the peal of thunder premitive man may well have heard the bellowing of a cellestial bull.—Ibid.

It is from the Indian mythology that we get our nearest insight into the character of these deities and the meanings of those sculptures. For the bull represents Siva whose emblem was a trident and also an exe.—The Hittite empire—John Garstang.

கித்தைதி நாட்டில் காணப்பட்ட வேறு சில சிற்பங்களில் அக்கடவுள் முக்கோண வடிவான வில்லும் சூலமும் பிடித்து இடபத்தின்மீது நிற்கின்றார். இடபத்தின் கொம்புகள் பூமாலைகளால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. "In his right hand which is drawn back there is a triangular bow. The horns of the bull are wreathed with garlands—Ibid P. 202.

சிலைகளையும் அந்நாட்டு மக்கள் வழிபட்டார்கள். சிவனுக்குரியனவாகச் சொல்லப்படும் என்பு, ஊமத்தை மாலை, சங்க வெண்குழை, புலித்தோலுடை முதலியவைகளால் மக்கள், தோலை உடையாகவும், என்பு இப்பி முதலியவைகளை அணிகளாகவும் கொண்ட ஒருகாலத்தில் இவ்வழிபாடு தோன்றிற்று என்று நன்கு சிந்தித்தறியலாகும். முற்காலத்தில் இந்திய மக்களுக்கு வாகனமாகப் பயன்பட்டன எருதுகளே. இன்றும் ஆலயங்களில் எருதுகளின்மீது வாத்தியக்காரர் ஏறியிருந்து பேரிகை கொட்டிச் செல்வதை நாம் பார்க்கலாம். ஆகவே அக்காலத் தந்தைக் கடவுளுக்கு இடபம் சிறந்த ஊர்தி ஆக்கப்பட்டது. கித்தைதி சிரியா, கிரேத்தா, சுமேரியா முதலிய நாடுகளின்[1] நாணயங்களில் இமில் உள்ள இந்திய இடபம் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இடபத்தை ஊர்தியாகவுடைய தந்தை வழிபாடு இந்திய நாட்டிலேயே ஆரம்பித்திருத்தல் வேண்டும்.

## அம்மை அப்பர் வழிபாடு

இவ்வாறு அம்மை அப்பர் வழிபாடுகள் ஆதியிற் றனித் தனியே தோன்றின. பின்பு மக்கள் இவர்களை மனைவி கணவன் என்னும் முறையினராகக் கொண்டு வழிபடலாயினர். கித்தைதி நாட்டில் நாணயத்திற் காணப்பட்ட வடிவங்களும் இதனையே குறிப்பிடுகின்றன. மேற்கு ஆசிய நாடுகளில் அம்மை அப்பர் வழிபாடு இன்னொரு வகையிலும் ஆரம்பித்

---

chief deity of the place. He stands on a bull holding the emblem of lightning and a double axe. His consort was a lion goddess described on inscriptions as Hera Sancta - Ibid p. 307.

1. The humped Indian bull (*Bos Indicus*) all of which are freely figured in Sumerian, Hitto, Phoenecian and Kassi seals as sacred animal of the East - The Indo - Sumerian Seals deciphered - p. 20, L. A. Waddell.

தது. ஞாயிற்றுத், திங்கள் வழிபாடுகள் அவர்களிடையே தோன்றிய காலத்தில் அவர்கள் திங்களைத் தாய்க்கடவுளாகவும் ஞாயிற்றைத் தந்தைக் கடவுளாகவும் கொண்டு வழிபட்டனர். ஆகவே பழைய அம்மை அப்பர் வழிபாடுகள் மேற்கு ஆசிய நாடுகளில் ஞாயிற்றுத், திங்கள் வழிபாடுகளுள் நுழைந்துள்ளன..

## ஞாயிற்று வழிபாடு

இதன்மேல் இவ்வுலகில் இருளைப்போக்கி ஒளியைக் கொடுக்கும் ஞாயிறே முழுமுதற் கடவுள் என்று மக்கள் உணர ஆரம்பித்தனர். அவர்கள் சிவந்தவன் அல்லது சிவந்த ஒளியுடையவன் என்னும் பொருளில் ஞாயிற்றுக்குச் சிவன் என்னும் பெயர் கொடுத்து வழிபடுவாராயினர். இப்பெயரே ஆதியில் ஞாயிற்றுக்குப் பெயராக வழங்கிற்று என்பதைச் சிவன் என்னும் தலைப்பின்கீழ் விளக்குதும். சிவன் என்பதற்கு அடுத்தபடியில் எல் என்னும் பெயர் கதிரவனின் பெயராக வழங்கிற்று. மேற்கு ஆசியாவில் எல்லின் திரிபாகிய பெயர்களே ஞாயிற்றைக் குறிக்கப் பெரிதும் வழங்கின. உலகமக்கள் எல்லோரும் கடவுளின் பெயராக ஆண்ட பெயர்களை ஆராயுமிடத்து அவை ஒளி அல்லது ஒளியுடையவன் என்னும் பொருளையே கொடுக்கின்றன.[2] எல் என்பது ஞா

---

2. Of, Ra, Il, El, Helos, Bil, Baal, Al, Allah, Elohim, I cannot get any further information but that they were names given to the sun as the representative of the creator, who was spoken of reverentally as my lord. The lord &c. - The king &c. as this organ represented the creator and the sun all were typified under such characters as Bacchus, Dionysus, Hercules, Hermes, Mahadeva, Siva, Osiris, Jupiter, Moloch Baal, Assur, and innumerable others - Ancient Faiths pp. 70. 476, Thomas Inman.

Sans - Devas ; Lat - Deus ; Lith - Diewas; Old Irish - Dia ; Old Norse - Tivar; Iran - Diaeva - Prehistoric Antiquities of Aryan peoples, p. 45, Dr. 6, Schrader.

யிற்றையும் ஒளியையும் குறிக்கத் தமிழில் வழங்கிய சாலப் பழைய பெயர். "எல்லே இலக்கம்" என்பது தொல்காப்பியம். ஞாயிற்றுக் கடவுளை மக்கள் மலைமுகடுகளிற் கண்டு வழிபட்டனர். ஆகவே உலகம் முழுமையிலும் இக்கடவுளின் இருப்பிடம் மலைமுகடு என்று கொள்ளப்பட்டது. இன்றும் சிவன் கைலாயமலையில் இருக்கிறார் எனப் பொது மக்களும் பிறரும் நம்பி வருகின்றனர். மலைகள் இல்லாத நாடுகளில் ஞாயிற்றுக் கடவுள் செய்குன்றுகள்மீது வழிபடப்பட்டார். இவ்வகைச் செய்குன்றுகளி லொன்றே பேபெல் என்னும் கோபுரம்.[1] இவ்வகைச் செய்குன்றுகள்

---

1. பெலுஸ் அல்லது பேபெலின் கோபுரம்: சாலடியாவிலுள்ள பெரிய கோபுரம் பகற் கடவுளின் (Bel) ஆலயம். பகல் என்பது (Ba-el, Ba-al or P'al) பிற்காலத்தில் பலுஸ் என வழங்கிற்று. இது 200 அடிச் சதுரமும் 480 அடி உயரமும் உடையதாயிருந்தது. இது வெயிலிற் காய்ந்த களிமண் கற்களாலும் செங்கல்லினாலும் கட்டப்பட்டது. இதன் படிக்கட்டுகள் செல்லச் செல்ல ஒடுங்கிச் செல்கின்றன. இதன் ஒவ்வொரு படியின் உயரமும் 60 அடி. இதன் உச்சியிலிருந்த மேடை ஆதிகால ஞாயிற்றுக் கோவில் எனத் தெரிகிறது. இதன் உயரம் 606 அடி என்று ஸ்ராபோ கூறியிருக்கின்றார். அவர் இதனை பெலுஸின் சமாதி எனக் குறிப்பிட்டுள்ளார். இதன் உச்சிக்கு ஏறிச் செல்வதற்குப் படிக்கட்டு உண்டு. இடையிடையே தங்கியிருந்து செல்வதற்கு இடங்கள் இருந்தன. ஒவ்வொரு படியும் ஒவ்வொரு கிரகத்துக்கு உரியது. அடிப்படி சனிக்கு உரியது. இது கறுப்புநிறம் பூசப்பட்டிருந்தது. இரண்டாவது படி வியாழனுக்குரியது. இது தோடம்பழ நிறம் பூசப்பட்டிருந்தது. மூன்றாவது செவ்வாய்க்குரியது. இது சிவப்புநிறம் பூசப்பட்டிருந்தது. நான்காவது வெள்ளிக்கு; இதன் நிறம் மஞ்சள். ஆறாவது புதனுக்கு; இதன் நிறம் நீலம். ஏழாவது சந்திரனுக்கு; எட்டாவது சூரியனுடையது. தயதோரஸ் (Diodorus) என்பார் இதன் உச்சியிலுள்ள மேடையில் பெல்டிஸ், றீயா, பெல் (Beltis, Rhea, Bel) என்னும் கடவுளருக்குக் கோயில்கள் இருந்தனவென்று கூறியுள்ளார். பகல் (Bel) கடவுளுக்கு முன்னால் இரண்டு பொன் சிங்காசனங்கள் இருந்தன. பெல்டிஸ் என்பன வெள்ளியாற் செய்யப்பட்ட பெரிய பாம்பு

மேற்கு ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்கா என்னும் நாடுகளிற் பல உள்ளன. உலக வியப்புக்கள் எனப்படும் எகிப்திய கூர் நுதிக் கோபுரங்களும் இவ்வகையினவே. இவை ஞாயிறு நடு உச்சிக்கு வரும் நாளில் அது எழும் திசையைப் பார்க்கும்படி கட்டப்பட்டுள்ளன.* தென்னிந்திய ஆலயங்களும் கிறித்தவர்களின் ஆலயங்களும் இவ்வாறே கட்டப்படுகின்றன. சலமனின் ஆலயமும் கிழக்குத் திக்கை நோக்கியே நின்றது:

## இலிங்க வழிபாட்டின் தொடக்கம்

அடுத்தபடியில் மக்கள் செய்குன்றுகளுக்குப் பதில் அடி நிமிர்ந்து தலைகுவிந்த கற்களைச் சோலைகளிலும் வெளிகளிலும் நட்டு வழிபடுவாராயினர். திருவானைக்கா, தில்லையம்பலம், திருவாலங்காடு முதலிய தென்னிந்திய ஆலயங்களின் பெயர்களால் இதன் உண்மை நன்கு தெளிதும். முன் இலிங்கங்கள் நிறுத்தி வழிபடப்பட்ட இடங்களிலேயேபின்பு ஆலயங்கள் எழுந்தன. உலகம் முழுமையிலும் இவ்வகை வழிபாடு ஒரு காலத்திற் காணப்பட்டது.

---

கள். இவை 30 தலன்ட் (Talent) (ஒரு தலன்ட் 200 தங்க நாணய நிறைவரையில்) நிறையுள்ள வெள்ளியாற் செய்யப்பட்டுள்ளன. இம் மூன்று உருவங்களின்முன் 40 x 15 அடி பொன் மேசையும் மேசைக்குமேல் 3 குடிக்கும் கிண்ணங்களுமிருந்தன. ஆண்டில் 1000 தலன்ட் நிறையுள்ள சாம்பிராணி இங்கு எரிக்கப்பட்டதெனக் கெரதோதசு (Heradotus) ஆசிரியர் கூறியுள்ளார். அவர் காலத்தில் இதன் அடியில் தங்கத்தாற் செய்த பகல் உருவமும், அதன்முன் தங்கமேசை ஒன்றும் இருந்தன. உச்சியிலுள்ள மேடையில் ஒரு மேசையும், அழகிய கட்டிலும் இருந்தன. பிள்ளை இல்லாத பெண்கள் பிள்ளைவரம் வேண்டி அங்குச் சென்றார்கள்.—Rivors of life Part 2.

* The gates which lead to the sanctuary ought to be turned to the east in such a manner, that it often happens that the Sun, in rising on certain days in the year, throws its light on the *lingam* which is in the sanctuary - Dravidian architecture : G. Jouveal Dubreuil.

## ஆலமர் கடவுள்

ஒவ்வொரு கிராமங்களிலும் மன்றங்கள் உண்டு. மன்ற மென்பது ஊருக்கு நடுவே மக்கள் கூடும் மரத்தடி. மரத்தைச் சுற்றித் திண்ணையிருந்தது. ஞாயத் தீர்ப்பு, பள்ளிக் கூடம், ஆடல்பாடல் முதலிய பொழுதுபோக்குகள், இன்னும் கிராம மக்களின் எல்லாக் கிளர்ச்சி, நிகழ்ச்சி என்பவைகளுக்கு இடம் இதுவே. மன்றத்தே பெரும்பாலும் ஆலமரம் நின்றது. நிழல் மரங்களில் ஆல் தலைமையுடையது. மன்றத்து மரங்களின்கீழ் இலிங்கம் நிறுத்தப்பட்டிருந்தது. இதனைச் சுற்றித் தினமும் அலகும் மெழுக்குமிடப்பட்டு விளக்கு ஏற்றப்பட்டது.[1] ஆலின்கீழ் இருந்தமையின் கடவுளுக்கு 'ஆலமர் கடவுள்' 'ஆலமர் செல்வன்' என்னும் பெயர்கள் உண்டாயின. பழந்தமிழ் நூல்களில் இப்பெயர்களே சிவனைக் குறிக்கப் பெரிதும் காணப்படுகின்றன. ஆல் ஐயன் இடம் 'ஆலயம்' எனப்பட்டது.

மேற்கு ஆசிய நாடுகளிலும் அருட்குறிகள் கருவாலி மரங்களின் கீழ் வைத்து வழிபடப்பட்டன;[2] கிரேத்தாவில்

---

1. "கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பர் சேக்கும் கல்லடைப் பொதியில்" (பட்டினப்பாலை)

(கொண்டி மகளிர்-சிறை பிடிக்கப்பட்ட மகளிர்; பொதியில்-மன்றம்.)

2. Under the village tree or sacred oak, all very solemn vows must be made; here the young plighted their troths and elders ratified tribal and national offices and offered all the sacrifices of the gods. The sacred groves resounded with music chantings, wailings, with music litanies and prayers...and the wide spreading oak was thought a more devine than these like the ancient ark it was often the altar ego of the heaven father -The short studies in the science of comparative religions - p 376.

யூகாலிப்ரஸ் மரங்களின்கீழ் கற்றூண்கள் நிறுத்தி வழிபடப் பட்டன. எகிப்தியரும் கிரேக்கரும் ஆலினத்தைச் சேர்ந்த அத்தி மரத்தைப் பரிசுத்தமுடையதாகக் கொண்டு, அதனால் இலிங்கங்கள் செய்தனர்.

## திங்கள் வழிபாடு

ஞாயிற்று வழிபாட்டுக்குப்பின் திங்கள் வழிபாடு தோன் றிற்று. இந்தியநாட்டில் சந்திரன் ஆண் தெய்வமாகக் கொள்ளப்பட்டது. மேற்கு ஆசிய நாட்டவர் இதனைப் பெண் தெய்வமாகக் கொண்டனர். அன்னோர் மரத்தின்கீழ் நிறுத்தப்பட்ட கற்றூணை ஞாயிறாகவும் மரத்தைத் திங்க ளாகவும் கொள்வாராயினர். பின்பு திங்கட் கடவுள் ஞாயிற் றுக் கடவுளின் மனைவியாக்கப்பட்டது. மரங்களும் சோலை களும் திங்கட் கடவுளாக வழிபடப்பட்டன. மரத்துக்குப் பதில் மரத்தூண்களும் நிறுத்தி வழிபடப்பட்டன. இவ் வாறு மேற்கு ஆசிய நாடுகளில் ஆண்கடவுள் பெண் கடவு ளரைக் குறிக்க இலிங்கங்கள் நிறுத்தப்படலாயின. தமிழ் நாட்டில் இவ்வாறு நிகழவில்லை.

## இலிங்க வணக்கம் உலகம் முழுமையும் காணப்பட்டது

எச்.சி. வெல்ஸ் என்னும் ஆசிரியர் இலிங்கவழிபாடு இங்கி லாந்து முதல் கிழக்கே யப்பான்வரையும் காணப்பட்டதெனக் காட்டியுள்ளார். அமெரிக்காவின் சில பாகங்களில் இன்றும் இவ் வணக்கம் காணப்படுவதை ஆராய்ச்சியாளர் ஆராய்ந்து வெளியிட்டுள்ளார்கள். முக்கேர்சி என்பவர் இந்திய நாகரிக மும் அதன் பழமையும் என்னும் நூலிற் குறிப்பிட்டுளவற் றின் சுருக்கத்தை ஈண்டுத் தருகின்றோம்.

1 "இந்திய மக்கள் சிவனின் அருட்குறியாகிய சிவலிங்கத்தைத் தொன்றுதொட்டு வழிபட்டு வருகின்றனர். இவ்வணக்கம் இந்தியாவுள் மாத்திரம் நிற்கவில்லை. இஃது உலகின் எல்லா நாடுகளிலும் ஒருகாற் பரவியிருந்ததென்பதை விளக்குவதற்கு வேண்டிய சான்றுகள் கிடைத்துள்ளன. சீனு யப்பான் இந்துக்கடல், பசிபிக்கடற் றீவுகள் முதலிய இடங்களில் இவ்வழிபாடு முற்ருகத் தூர்ந்துவிடவில்லை. ஆபிரிக்க
2 அமெரிக்க மக்களிடையும் இஃது ஒருகாற் பரவியிருந்தது. அசிரிய, யூதேய, சிரிய, சின்னஆசிய, பபிலோனிய மக்களிடையும் இவ்வணக்கம் காணப்பட்டதென்பதைக் கிறித்தவ மறைவாயிலாக அறிகின்ருேம். சின்னுட்களின்முன் பபிலோன் நாட்டில் சிவலிங்கங்கள் பல அகழ்ந்து எடுக்கப்பட்டன. எகிப்தின் சில பகுதிகளில் ஹெறம், ஹோறஸ், இஸ்றஸ் சராபிஸ் முதலிய பெயர்களால் இக்கடவுள் வணங்கப்பட்டது. சிவலிங்கங்களுடன் புலிகளும் பாம்புகளும் வணங்கப்பட்டன. எகிப்திய சமாதிச் சுவர்களில் சிவலிங்கங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. பழைய ஐரோப்பாவில் இவ்வணக்கம் எங்கும் பரவியிருந்தது. இதனை ஒட்டுவதற்குக் கிறித்தவ குருமார் மிக ஊக்கம் எடுத்தார்கள். கிறீசிலே விசா (Viza) என்னுமிடத்தில் சிவலிங்கத் தொடர்பான கிரியைகள் இன்றும் நடைபெறுகின்றன. அயர்லாந்தில் சிவலிங்கங்கள், பல கிறித்தவ ஆலயங்களுட் காணப்படுகின்றன. அவை 'சில நாகிக்' (Sheila-na-gig) என்று வழங்குகின்றன. இஃது ஒருபோது சிவலிங்கம் என்பதன் திரிபு ஆகலாம். பழம்பொருள் ஆராய்ச்சியாளர் இங்கிலாந்திலும் ஸ்கொத்திலாந்திலும் சிவ

---

1. Indian Civilization and its Antiquity: B. Mukerjee.

2. Ganesha, Siva - linga and Yama (the god of death and justice) and numerous serpent gods were worshipped in some areas on the whole continent - Hindu America: p. 60, Chamanlal.

லிங்கங்கள் பலவற்றைக் கண்டுபிடித்தனர். இவை கண்டு பிடிக்கப்பட்ட இடங்கள் உரோமர் கோட்டைகளையும் மாளிகைகளையும் கட்டி வாழ்ந்த இடங்களாகும். உரோமர் இவ் வணக்கத்தை இங்கிலாந்திலே பரப்பியிருத்தல் கூடும். செர்மனியிலும் பிரான்சிலும் இவ் வணக்கம் மிக்கு வழங்கியிருந்ததற்குப் போதிய சான்றுகள் கிடைத்துள்ளன. லிதுவேனிய மக்கள் (Lithuanians) 14-ம் நூற்றாண்டு வரையில் இவ் வணக்கத்தையே கைக்கொண்டிருந்து பின்பு கிறித்தவ மதத்தைத் தழுவினர்கள். திபெத்து, புத்தான் (Bhutan) என்னுமிடங்களில் சிவலிங்க வணக்கம் காணப்படுகின்றது. சிந்தோயிசம் (Shintoism) என்னும் யப்பானிய மதத்தில் சிவலிங்கம் முதன்மையானது. அமெரிக்காவின் பல பகுதிகளில் சிறப்பாக மெச்சிக்கோ பேரு, கைதித்தீவு (Hyti) களில் சிவலிங்கம் வழிபடப்பட்டது. ஸ்பானியர் முதல் முதல் அமெரிக்காவுக்குச் சென்றபோது ஆலயங்களில் சிவலிங்கங்கள் வைத்து வழிபடப்பட்டதைக் கண்டார்கள். ஆபிரிக்காவில் தகோமி (Dahomi) என்னும் இடத்தில் இலிங்கம் லெங்பா (Lengba) என்னும் பெயருடன் வைத்து வழிபடப்பட்டது.

இலிங்க வணக்கம் அசிரியாவிற் றோன்றி அயல்நாடுகளிற் பரவிற்று என்று சிலர் நினைக்கிறார்கள். கிரேக்கநாட்டில் பக்கஸ் (Bacchus) தயோனிசஸ் (Dlonysus) வழிபாடுகள் தொடர்பாகச் சிவலிங்கம் வழிபடப்பட்டது. கிரீசில் பக்கஸ் விழாவில் இலிங்கம் வீதிகள் வழியே உலாக்கொண்டு வரப்பட்டது. எகிப்தியரின் ஒஸ்றிஸ் என்னும் தெய்வம் பக்கஸ் என்பதன் இன்னொரு வேறுபாடே. பக்கஸ் வழிபாடு இத்தாலியில் மிகவும் பரந்திருந்தது. பக்கஸ் கெபன் (Hebin) அல்லது கம்பானியா (Campania) என்னும் பெயருடன் வழிபடப்பட்டார். கெபன் கெபி (Hebe-கௌரி) என்னும்

தேவியுடன் வழிபடப்பட்டார். பக்கசுக்கு இடபமும் புலியும் மிகப் பிரியமானவை. அவர் [1] புலித்தோலை யுடுத்துக் கையில் திரிசூலத்தையும் வைத்திருந்தார். ஆதலால் கெபன் சிவன் என்றும் கெபி கௌரி என்றும் கூறலாம். பக்கஸ் கடவுளைப் பின்தொடர்ந்து இடபமும் புலியும் சென்றன. அவர் கையில், அருந்தும் மண்டையும் இருந்தது. சின்ன ஆசியாவில் இலிங்கக்கடவுள் கெமோஸ் (Chemos) மொலோச் (Moloch) மெரதொக் (Merodock) ஆதோனியிஸ் (Adonais) சபாசியஸ் (Sabazius) பக்கஸ் அல்லது பாகேஓஸ் (Bagaios) என்னும் பெயர்களுடன் வழிபடப்பட்டார்: வெஸ்தொப் (Westropp) என்பவர் அதோனிசஸ் என்பது அர்த்த நாரீசுவரர் என்று ஆராய்ந்து காட்டியுள்ளார். சின்னாட்களின்முன் எகிப்திலே துர்க்கம்மா என அடியில் எழுதிய ஒரு துர்க்கை உருவம் ஒன்று கண்டுபிடிக்கப் பட்டது".

றுடேசியாவில் (அபிரிக்கா) காணப்பட்ட இலிங்கங்களிலும் சிரியாவிற் காணப்பட்ட இலிங்கங்களிலும் பூமாலைகள் வெட்டப்பட்டிருந்தன. பொனீசிய மக்கள் தயர் நகரிலே பகலவன் ஆலயத்தில் மரகதத்தினுலும் பொன்னினுலும் செய்த இலிங்கங்களை வைத்து வழிபட்டார்கள். இவ்வகை இலிங்கங்களை அவர்கள் சிபிருல்டரில் நாட்டியிருந்தமையின் அவ்விடம் இன்றும் "கெக்குவிசின் தூண்கள்" என வழங்குகின்றது.

மேற்கு ஆசிய நாடுகளிற் [2] பேழைகள் (பெட்டி) வழி

1. Bacchus wore tiger skin - Early faiths of Western Asia: p. 36.

2. They (arks) seem to have developed from the old arrangement of the trilithon, enclosing a menhir or a cone. The deities seem to show that they belong to the people of Egyptian influence in Phoenicia - Syrian Stone lore: - p. 100.

படப்பட்டன. இன்று இலங்கையிலுள்ள கதிர்காமம் என்னும் ஆலயத்தில் வழிபடப்படுவதும் பேழையே. மேற்கு ஆசிய நாட்டுப் பேழைகளுள் சிறிய இலிங்கம் வைக்கப்பட்டிருந்தது. நிலைபோல இரண்டு கற்களை நிறுத்தி மேல் ஒரு பாவு கல்லைவைத்து மூடிய கட்டிடங்களின்கீழ் (Dolmen) வைத்து இலிங்கங்கள்வணங்கப்பட்டன. இதிலிருந்தேபேழையில் இலிங்கத்தை வைத்து வழிபடும் முறை ஆரம்பித்தது என்று கூறப்படுகின்றது. விவிலிய மறையில் பேழையில் வைக்கப்பட்ட சாட்சிப்பத்திரம் என்பது நம்மவர் "இயந்திரத் தகடு" என்பதை ஒத்ததே.

## இலிங்க வழிபாட்டின் வளர்ச்சி

கடவுள் ஒருவரே உளர் என உணர்ந்த மக்கள் அம்மை அப்பர்களின் அருட்குறிகளே இறைவனின் ஆண் தன்மை பெண் தன்மை என்பவைகளை உணர்த்தும் எனக் கொண்டனர். ஆண் தன்மை பெண் தன்மைகளை விளக்கும் அறிகுறியாக அவர்கள் ஆண்குறி பெண்குறி வடிவான அடையாளங்களையும் வைத்து வழிபடுவாராயினர். பின்பு இவ்விரண்டும் ஒன்று சேர்க்கப்பட்டுக் கடவுள் ஆண்பெண் இயல்பினர் என்னும் இலப்பினும் வழிபடப்பட்டன. இவ்வடிவங்கள் எலோகிம் எனப்பட்டன. மொகெஞ்சோ-தரோவிலும் ஆண் கடவுளைக் குறிக்க ஆண்குறியும் பெண்கடவுளைக் குறிக்கப் பெண்குறியும்வழங்கின.[1] எலோகிம் வழிபாடே இந்தியர்

1. The practice of (linga worship) was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourished for many ages in Egypt, and Syria, Persia, Asia minior, Greece and Italy ; it still is in vigour in India and many parts of Africa and was even found in America on its discovery by the Spaniards. "being regarded as the most sacred objects of worship and consecrated by religion, the cultus was associated with very idea and sentiment which was regarded as ennobling to

வில் ஆவுடையார் வழிபாடாகும். பண்டைய இலிங்கங்கள் தூண் வடிவின. ஆண்பெண்குறி வடிவுகள் ஐரோப்பாவிலே கிறித்தவ ஆலயங்களில் இன்றும் காணப்படுகின்றன.[1] எருசலேமிலே ஒருகாலத்தில் ஒவ்வொரு வீதியிலும் இலிங்கங்கள் வைத்து வணங்கப்பட்டன.[2] ஞாயிற்றையும் திங்களையும் ஒப்பத் தீயும் வழிபடப்பட்டது. இலிங்கம் தீயின் வடிவாகவும் கொண்டு வழிபடப்பட்டது.

## தீ வழிபாடு

ஞாயிற்றையும் திங்களையும் ஒப்ப ஒளியுடைப் பொருளாகிய தீயும் மக்களால் வழிபடப்பட்டது. விவிலிய மறையின் பழைய ஏற்பாட்டில் நிம்ரொட் என்னும் அரசன் தீவழிபாட்டைப் பலஸ்தீன் நாட்டில் ஆரம்பித்தான் எனக் கூறப்படுகின்றது. இவ் வழிபாடு இன்னும் பாரசிகரிடையே சொராஸ்ரிய மதக் கொள்கையாக நிலவுகின்றது., தீயும் இலிங்க வடிவில் வழிபடப்பட்டது. பீடத்தோடு கூடிய இலிங்கத்துக்குத் தீக்கடைகோலை ஒப்பிட்டுத், திக்கடைகோலையே இலிங்க வடிவமாக அமைத்து மக்கள் வழிபட்டார்கள் எனச்

---

man......In Egypt the phallus is frequently represented by a symbol of generation. The Jews did not escape this worship ; we see their women manufacturing Phalli of gold and silver as we find in Ezakijel. XVI 17 - Westroppe.

1. Out what concerns us as civilized christians, is to inquire how it comes to pass that devices which tell solely of the adoration of the sexual organs of the male and female are still represented in our churches as if they were holy emblems......; Rimmon - the emblem of the prolific womb the celestial mother. Rimmon figures in many christian churches are found as it did in Syrian Temples—Ancient faiths embodied in ancient names; vol. 2. p. 650.

2. That shameful thing which Jermiah reproachfully said had alters in every street of Jeruslem and which no doubt was the symbol of Jacob's *ali-im* - Short studies in the science of Comparative religions - P 352.

சில ஆராய்ச்சியாளர் கருதினர். தமிழ் மக்களிடையே முச்சுடர் வழிபாடுகளும் இருந்தன. தீயை எந்த நேரமும் உண்டாக்கி வழிபடுதல் கூடும். ஞாயிற்றையும் திங்களையும் எந்த நேரத்திலும் கண்டு வழிபடுதல் அரிது. ஆகவே அவர்கள் ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடர்களின் வடிவைக் குறிக்கும் வட்டம், வில் அல்லது பிறை, முக்கோணம் வடிவான குண்டங்களை அமைத்து அவைகளில் தீ வளர்த்துக் கடவுளை வழிபடுவாராயினர். இதுவே முத்தீ வேட்டல் என்னும் வழக்கு. ஆரிய மக்களின் தீ வழிபாடு இவ்வுண்மைகளை அடிப்படையாகக்கொண்டு எழுந்ததன்று. அவர்கள் காலையில் எழுந்து தோய்ந்து, தீமூட்டி எரித்துக் குளிர் காய்ந்து அதன் பக்கத்தே நின்று கடவுளைத் துதித்தனர். இவ்வழக்கிலிருந்தே அவர்களது அக்கினிகோத்திரம் எனப்படும் தீ வழிபாடு எழுந்தது. சனகன், யாக்ஞவல்கியையும் அவருடன் நின்ற பிராமணரையும் நோக்கி நீவிர் அக்கினி கோத்திரம் எப்படிச் செய்கிறீர்கள் என்று கேட்டபோது அவர்கள் சரியான விடை அளிக்கவில்லை. இதற்குக் காரணம் ஆரியரது தீ வழிபாடும் தமிழரது தீ வழிபாடும் வெவ்வேறு வகையினவாதலே. ஆகமங்களும் வேதங்களும் நேர்மாறுனவை என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. தீ வழிபாடு துரானிய மக்களுக்குரியதென்றே வரலாற்று ஆசிரியர்கள் கூறுகின்றனர். 1

“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே- (தொல். புற. 33)

---

1. The fire worship was borrowed from the Turanians - Short studies in the science of comparative religions: துரானியர் - ஆரியரல்லாதார்.

என்னும் தொல்காப்பியத்திற் கூறப்படும் வழிபாடுகள் முறையே திங்கள், தீ, ஞாயிற்று வழிபாடுகளே. பழங்காலப் பலிபீடங்களும் பிற்காலம் இலிங்கமாக வழிபடப்பட்டன [1]. திருவண்ணாமலையில் இறைவன் சோதிவடிவாய் நின்றானென் பது இலிங்கவழிபாடு தீ வழிபாட்டினின்று தோன்றியது என்னும் ஐதீகத்தைக் குறிப்பது. முற்காலத்து ஒடுங்கிய கொடுமுடிகளுடன் நிமிர்ந்து வளர்ந்த மலைகள் இலிங்கங்க ளாக வழிபடப்பட்டன. [2]

## வேந்தன்

மக்கள் ஞாயிற்றைத் தனிப்பெருங் கடவுளாகக்கொண்ட காலத்தில் அரசன்ஞாயிற்றின்*புதல்வனென்றும் இறந்தபின் அவன் ஞாயிற்றுக் கடவுளாக மாறுகிறான் என்றும் மக்கள் நம்பினார்கள். [1] ஆகவே அரசனின் சமாதியின்மீது ஞாயிற்

---

1. While the stone pillar also was a primitive altar - Theism - E - Britannica.

2. The Arab sailors who saw the Phallie cone of Ceylon calling al maka and 'the Adam' an Indo-moslam name for euphamism for the lingam - Short studies in the science of comparative religions: p. 340.

God was supposed to be the king of the country. The king wss only an administrator on behalf of god - Fr. Heras, The Journal of the University of Bomoay - 1936.

1. எகிப்திய அரசர் ஞாயிற்றிலிருந்து தமது பரம்பரையைக் கூறினர். அரசன் ஞாயிற்றின் பிறப்பு என்று கருதப்பட்டான், அவ னுக்குக் கடவுளுக்குச் செய்யப்படும் எல்லா மரியாதைகளும் நடை பெற்றன. மரணத்துக்குப்பின் ஒவ்வொரு அரசனும் ஞாயிற்றுக் கடவுளாக வழிபடப்பட்டான். சீன அரசன் ஞாயிற்றின் புதல்வன் எனப்பட்டான்.—Sun and the serpent—Oldham.

யப்பானிய அரச பரம்பரை ஞாயிற்றினின்றும் உண்டானதென் பது யப்பானியரின் நம்பிக்கை. இவ் ஐதீகத்தைப் பின்பற்றியே யப்பா னிய அரசன் சூரியனுக்குரிய வெள்ளைக்குதிரையிற் சவாரி செய் கிறான்.

றுக் கடவுளின் அருட்குறியாகிய இலிங்கம் நடப்பட்டது. அவ்விடங்கள் வழிபாட்டுக்குரிய ஆலயங்களாகவும் இருந்தன. இவ்வகை ஆலயங்கள் பல எகிப்தில் காணப்படுகின்றன. ஞாயிற்றுக் கடவுளாக மாறிய அரசர்கள் எகிப்தில் ரு என்னும் பெயர் பெற்றனர். ரு என்பதிலிருந்து இராசன் என்னும் சொல் பிறந்ததெனச் சிலர் கூறுவர்.

## நந்தி வழிபாடு

அப்பன் என்னும் தந்தைக் கடவுளின் ஊர்தியாகிய நந்தி மேற்கு ஆசிய நாடுகளில் வழிபாட்டிற்குரியதாயிருந்தது. பலஸ்தீன் நாட்டில் ஆன்கன்று அல்லது நந்தி வழிபடப்பட்டமை கிறித்தவ மறையின் பழைய ஏற்பாட்டிற் காணப்படுகின்றது. தாவீதின் (David) மனைவிக்கே ஆன் கன்று என்று பெயர் [2]. கித்தைதி நாட்டிலே எயுக் (Eyuk) என்னுமிடத்திலே நந்திச்சிலை கருங்கற் பீடத்து வைத்து மக்கள் எல்லோராலும் வழிபடப்பட்டது. இவ்விடபக் கடவுளைச் சேவிக்கத் தனிக்குரு இருந்தார். எகிப்திய மக்கள் ஓசிறிஸ் கடவுளின் வாகனமாகிய அபிஸ் என்னும் இடபத்தை வழிபட்டார்கள். எல்லா மத்தியதரை நாடுகளாலும் இடபம் வழிபடப்பட்டது. இடபத்தின்மீது சத்தியஞ் செய்வதை மக்கள் பெரிதும் அஞ்சினர்கள் [3].

---

2. In the later periods of Jewish history, the worship of the golden calf was held in such honour, even contrivance was adopted to keep it out of sight. The name Eglah (Calf) was borne by one of Davids wives - Ancient Faiths: p. 471.

3. Osris apis (Bull) under the name of Sarapis was worshipped far and wide throughout the countries bordering Mediteranean during the Hellenic age, till Letullian exclaimed indignantly it is not Egypt now-a-days so no Greece but the whole world swares by this African - as in Egypt, so in Crete the fertilising bull was on the long run identified with the sun - Zeus P 49 - Arthur Bernard Cook.

## முக்கட் செல்வர்

மக்கள், ஞாயிறு திங்கள் தீ என்பவைகளுக்கு மேலான தனிப்பெரும்பொருள் ஒன்று உண்டு என்று கொண்ட காலத்தில் அவர்கள் பழைய அப்பன் வடிவத்துக்கு முச்சுடர் களைக் கண்கள் எனக் கொண்டனர். ஆங்காங்கு மக்கள் வழிபட்ட பேய்கள் அவரின் பரிவாரங்களாயின. உலகமக்க ளெல்லாராலும் வழிபடப்பட்ட பாம்பு அவரின் ஆபரணங் களாயின; பயங்கரமான தாய்க்கடவுள் இப்பொழுது சாந்த வடிவினளாய் அவரின் பாரியாயினள். உமை, எஞ்ஞான்றும் கன்னி எனப்பட்டார்.[1] மொகஞ்சொதரோவிற் காணப் பட்ட சிவன் திருவுருவத்துக்கு மூன்று கண்கள் உள்ளன.[2]

## மாதொருபாதி இறைவன்

அம்மை அப்பர்க் கடவுளர், பாதி ஆண் பாதி பெண் வடிவிலும் வைத்து வணங்கப்பட்டனர். இவ்வடிவு "அர்த்த நாரீசுரர்", வடிவம் எனப்படும். அர்த்தநாரீசுர வடிவமே ஆதோனிஸ் என மேற்குத்திசை நாடுகளில் வழங்கிற்று என

---

1. Ishtar, Isiris and Ashtoreth and the present Mary were virgin goddesses - Short Studies in the science of comparative religions.

2. The expression munkan 'three eyed' and munminkan "three fish eyed" referring to Siva are frequently found in the inscriptions. Two inscriptions speak of the god of the City of Natur under the name of Vidukan (open eye); this very ancient idea agrees with the modern cannon belief of Hinduism that the gods have no eyelids. Thus unable to close their eyes, they see every-thing.- Fr. Heras, J. O. T. U. O. Bombay.

முன் கூறப்பட்டது. 1 இவ்வடிவம் பழைய சுமேரிய மக்களாலும் வணங்கப்பட்டது. மொகஞ்சொதரோ மக்கள் அப்பரை ஆண் என்றும் அம்மையை அம்மை என்றுமே வழிபட்டனர். சுமேரிய நாட்டிலும் இதே பெயர்கள் வழங்கின. அம்மை அப்பரின் புதல்வர் சுமேரியரால் 'என்லில்' எனப்பட்டார். மொகஞ்சொதரோவில் அம்மை மீன்கண்ணி எனப்பட்டார். இப்பெயரே மீனாட்சி என வழங்குகின்றது.

## பாம்பு வணக்கம்

இவ்வுலகின் எல்லாப் பாகங்களிலும் பாம்பு வணங்கப்பட்டது. மொசே வெண்கலத்தினாற் செய்த பாம்பை இஸ்ரவேலர் வணங்கிவந்த வரலாறு, கிறித்துவ மறையிற் காணப்படுகின்றது. கிறித்துவ மறையிற் காணப்படும் படைப்பு வரலாறு முதலியன சாலடிய மக்களிடமிருந்து கிடைத்தன என்று கருதப்படுகின்றன. சாலடிய மக்கள் திராவிடர்களே என்பது வரலாற்று ஆசிரியர்களது முடிவு. பாம்பு வணக்கம் இல்லாத நாடு இவ்வுலகில் இல்லை. இதனை ஆராய்ந்து விளக்கும் தனி நூல்கள் பல ஆங்கில மொழியில் எழுதப்பட்டுள்ளன. இன்றும் சில நாடுகளில் உயிர்ப் பாம்புகள் வணங்கப்படுகின்றன; சில நாடுகளில் பாம்பின் சிலைகள் வணங்கப்படுகின்றன.

---

1. Sumerian Triad An, Ama and Enlil - Father mother and son. Amman is called minkanni in inscriptions "Uyarelter or amman" - i. e. One amman of the chariot of the Suris. This deity half man (Proper left) and half woman (Proper right) which is also fonnd in Sumer with the name of amma, - seems to be original idea of the Hindu Image Arthanareswara and which has the two parts put in relative position - Journal of the University of Bombay - Fr. Heras.

"ஆபிரிக்க மக்களின் முக்கிய தெய்வம் பாம்பு. மழை யின்மை, பஞ்சம் பிணி முதலிய காலங்களில் மக்கள் பாம்பு களைச் சிறப்பாக வழிபடுகின்றனர். இவ்வகையாக உரோம ரும் ஒருகாலத்திற் செய்தனர். ஒரு நிகிரோவனுவது வேண்டு மென்று பாம்புக்கு ஒருவகையான தீமையுஞ் செய்யமாட் டான். தற்செயலாய்ப் பாம்பு ஒன்றைக் காயப்படுத்துகிற வன் நிச்சயமாகக் கொல்லப்படுவான். ஒருமுறை ஆங்கிலக் கப்பற்காரர் சிலர் தாங்கள் தங்கிய வீட்டினுள் வந்த பாம்பு ஒன்றை அடித்துக் கொன்ருர்கள். அதற்காக இவர்கள் அங்குள்ள மக்களால் கொடுமையாகத் தாக்கிக் கொல்லப்பட் டார்கள். பாம்புகள் உறைவதற்கெனக் கட்டப்பட்ட குடிசைகள் நாடு எங்கும் காணப்படுகின்றன. இவைகளுக்கு முதிய பெண்கள் தினமும் உணவு கொடுக்கிருர்கள். பாம்பு களுக்கு அழகிய பெரிய கோயில்களும் இருக்கின்றன. ஒவ் வொரு வகைப் பாம்பைக் கவனிப்பதற்கும் ஒவ்வொரு வேலைக்காரன் இருக்கிருன்.

"நியுகினியில் சோலைகளில் பாம்புகளின் கோயில்கள் இருக்கின்றன. இவைகளுக்குப் பருவகாலங்களுக்கேற்றவாறு பன்றி, ஆடு, கோழி முதலியன உணவாக அளிக்கப்படு கின்றன[1]" இது பாம்பு வணக்கத்திற்கு ஓர் எடுத்துக் காட்டு.

இவ்வணக்கம் எவ்வாறு உண்டானதென்று வரலாற்று ஆசிரியர்களால் நன்கு அறிந்து கூற முடியவில்லை. இதன் தொடக்கம் மறைவாக இருக்கின்றது. உலகில் காணப்படும் மக்கட் கூட்டத்தினர் தத்தம் குலக்குறிகளாக (Totem) மயில், ஆடு, முயல், ஆமை போன்ற யாதேனும் ஒன்றைக்

---

1. Rivers in life.

கொண்டிருந்தனர்; இன்றும் கொண்டிருக்கின்றனர். இக் குலக்குறிகள் பிற்பாடு வழிபடவும் பட்டன. இவ்வகைக் காரணத்தைப் பாம்பு வணக்கத்திற்கும் கொள்ளலாமோ என்பது ஆராயத்தக்கது. இந்தியநாட்டில் பாம்பு வழிபாடு நடைபெற்று வருவதைக் கூறவேண்டியதில்லை. பாம்புச் சிலைகள் இல்லாத ஆலயங்களே இல்லை எனக் கூறலாம் [1].

## முருக வழிபாடு

முருக வழிபாடு ஞாயிற்று வணக்கத்தின் இன்னொரு வகை. கடல்மீதெழும் உதயகால ஞாயிறு [2], மயில்மீதெழுந் தருளும் முருகனாக உருவகப்படுத்தப்பட் டுள்ளது. முருகன் என்பதற்கு இளையவன் என்று பொருள். யூதமக்களும் பகற் கடவுளை முதியபகல் இளம்பகல் (Ba-al)என இருவகை யாக வழிபட்டனர். முதிய பகல் தாடியுடைய முதிய வடி வுடனும், இளம்பகல் குழந்தை வடிவுடனும் வழிபடப்பட்

---

1. Another emblem of god only once referred to is the snake. The snake one of the most common symbols of Shiva in modern Hinduism. Thus an inscription (of Mohenjo - Daro) informs us that mina meditates on the snake of the three eyed one,- Fr. Heras.

2. The pea - cock in the banners of so many Asiatic kings and princes is generally a symbal of past or present faith of the sun - Faiths of man in all lands - Vol. 1. P 28

குறிப்பு: சிவனைக் குறிக்க ஒரு முக்கோணமும், துர்க்கையைக் குறிக்க ஒரு முக்கோணமும் வழங்கினவென்றும் சிவனைக் குறிக்கும் முக்கோணம் நிமிர்ந்தும் துர்க்கையைக் குறிக்கும் முக்கோணம் கவிழ்ந்தும் இருந்தனவென்றும் இவ்விரண்டையும் அவ்வாறு சேர்த்து வைக்குமிடத்து அறுகோணம் உண்டாகின்றதென்றும் இவ்வறு கோணமாகிய வடிவு பிற்காலத்தில் கொற்றவையும் சிவனும் சேர்வ தால் தோன்றிய அறுமுகக் கடவுளாகக் கொள்ளப்பட்டதென்றும் சிலர் கருதினர். மேற்கு ஆசியாவில் பகல், அசெறெத் என்னும் அம்மை அப்பரைக் குறிக்க நிமிர்ந்த கவிழ்ந்த முக்கோணங்கள் பயன் படுத்தப்பட்டன. இஃது ஆராயத்தக்கது.

டன. யூதமக்களுக்குச் சமய அறிவு கொளுத்தியவர்கள் தமிழ் மரபைச் சேர்ந்தோர் எனப்படுகின்றமையின் அவர்க ளிடையே தமிழர்களுட் காணப்படும் பல கொள்கைகள் நிலவின. இளம் கடவுள் யூதரால் போர்க்கடவுளாகவும் கொள்ளப்பட்டது. இளம்பகலே பின் உரோமரின் மார்ஸ் என் னும் போர்க் கடவுளாகவும் மாறிற்று. முருகக்கடவுளுக்கும் அசுரர் எனப்பட்ட மக்களுக்கும் இடையில் நிகழ்ந்த போர் கள் என்பன முருக வழிபாட்டினருக்கும் சிவ வழிபாட்டின ருக்கும் நிகழ்ந்த போர்களாகும். அசுரர் சிவ வழிபாட்டி- னர் என்பது முன்னமே கூறப்பட்டது. யெகோவா என் பது எல் கடவுளையே குறிக்கும் பெயரென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். யெகோவா வழிபாட்டினர் எல்லின் வேறு வகை வழிபாடுகளாகிய பகல் (Ba-al) மொலொச் முதலிய வழிபாடுகளை அழிக்க முனைந்து நின்ற வரலாற்றுடன் இதனை ஒப்பு நோக்குக. மக்களிடையே நிகழ்ந்த போர்கள் மக்கள் வழிபட்ட தெய்வங்கள்மீது ஏற்றிக் கூறப்பட்டன. வேத பாடல்கள், இந்திரன் தாசுக்களின் செல்வங்களைக் கொள்ளைகொண்டு அவர்களை அழித்தானென்று கூறுகின் றன. ஆரியமக்கள் தாம் பெற்ற வெற்றிகளைத் தாம் வழி பட்ட கடவுள்மீது ஏற்றிக் கூறியிருத்தல் காண்க. இவ்வாறு கூறுதல் அக்கால மரபுபோலும்.

## மால் வணக்கம்

மால் (மா + *எல்) வணக்கமும் ஞாயிற்று வணக்கத்தின் இன்னொரு வகை. திருமாலின் கையில் இருக்கும் சக்கரம்

---

* எல் என்பது அல், அல்லா, அலி முதலிய சொற்களாகத் திரிவதைக் காணலாம். மால் என்பதிலுள்ள அல் எல்லின் வேறு பாடே.

ஞாயிற்றையே குறிக்கின்றது. "அரியல்லாற் றேவியில்லை ஐய னையாறனார்க்கே", பெருமாள் (பெருமானின் பெண்பால்) என வருவன ஆராயத்தக்கன. ஒருபோது கரிய தாய்க் கடவுள் மாஎல் என வழிபடப்பட்டதோ என்பது சிந்திக்கத் தக்கது. பாரத காலத்துக்குப் பின் திருமால் வழிபாடு கண்ணன் வழிபாடாக மாறியுள்ளது. திருமால் மூவுலகை அளந்தாரென வரும் புராணக்கதை ஞாயிறு, காலை நண்பகல் மாலை என்னும் மூன்று காலங்களிற் செல்லும் செலவினை உணர்த்துமெனக் கூறப்படுகின்றது.

## சிவன்

ஞாயிறே சிவன் என்னும் பெயரால் ஆதியில் வழிபடப் பட்டதென்பது உலகமக்களின் பழைய வரலாறுகளை நோக்குமிடத்து நன்கு புலனாகும் [1] "அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில் - அருக்கனாவான் அரனுருவல்லனோ" (திருநா-தே) என்பதும் இதனையே உணர்த்தும். ஞாயிறு, ஆண்டின் ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு வீட்டில் தங்கும். ஒவ்வொரு வீட்டில் நிற்கும்போதும் அது வெவ்வேறு வடிவில்

1. It may be noted at the outset that the sun was identified with Siva (perhaps also with Vishnu) and the *Suriasevana* really means the worship of Siva in the form of the sun "It is interesting as showing the identity of Siva and Surya and thereby explaining the inner significance of the Surya worship" Ancient Indian Colonies in the far East. Vol. 2 pp 106-7.

வழிபடப்பட்டது.[1] ஆகவே, ஒவ்வொரு திங்களும் ஒவ்வொரு கடவுளுக்கு உரித்தாக்கப்பட்டிருந்தது. இவ்வழக்கு மேற்கு ஆசிய எகிப்திய இந்திய நாடுகளுக்கெல்லாம் பொது. எபிரேய மக்களின் ஆண்டின் மூன்ருவது மாதம் சிவன் என அறியப்பட்டது.[2] ஆசியாவிலும், பபிலோனிலும் ஆண்டின் மூன்ரும் மாதம் சிவன் அல்லது சிமானு எனப்பட்டது. பபிலோனில் இதே பெயருடைய இடம் ஒன்றும் இருந்தது.

இஃது அங்கே களிமண் ஏடுகளில் எழுதிவைக்கப்பட்ட உறுதி (documents) களிற் காணப்படுகின்றது.[3] இதனுல் பபிலோன் ஆசியா பலஸ்தீன நாடுகளில் சிவன் என்னும் பெயரால் வழிபடப்பட்ட கடவுள் ஒன்று இருந்ததென்பது தெள்ளிதிற் புலப்படும். அரேபியரும் யூதரும் சாலடியாவிலுள்ள ஊர் என்னும் நகரினின்றும் சென்று கானுன் தேசத்திற் குடியேறிய ஆபிரகாமின் (கி. மு. 2153) சந்ததியினர் என்று கூறப்படுகின்றனர். ஆகவே யூத மக்கள் சாலடியரைப் பின்பற்றியே திங்கட் பெயர்களையும் வழங்கினுர்களாதல் வேண்டும். சாலடியாவில் இப்பெயர் சாலப் பழையதாய் வழங்கினமையினுலேயே அது திங்களுக்குப் பெயராக்கப்பட்

1. The Assyrians had twelve great gods clearly corresponding to the twelve houses or months of fertility - Rivers in life - P 2. Now The snn in the course of the year travels through the constellations of the zodiac, which were called houses accordingly each month of the sun being in a different house was supposed to take a different form and since the constellation of the Proto - Indians as said above were eight (அட்டமூர்த்தம்)...... Images of the supreme being under these forms were worshipped in different parts of the country - Fr. Heras.

எகிப்தில் ஆண்டின் ஒவ்வொரு திங்களும், வாரத்தின் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கடவுளுக்குப் பரிசுத்தமானவை - கெரதோதசு ('Heradotus).

2. Calandar - En, Britannica.

3. The civilization of Babylon and Assyria - pp 484, 512,

டது. பபிலோன் மக்களும் பலஸ்தீனரும் எல்சடை என வழங்கிய கடவுள், சிவனைப்போலவே மலைமுகடுகளிலிருப்பவ ராகக் காணப்படுகின்றனர்.[1] கிறித்துவ மறையின் பழைய ஏற்பாடு கி. மு. 5-ம் நூற்றாண்டுக்கும் கி. மு. 3-ம் நூற்றாண் டுக்கும் இடையில் எழுதப்பட்டது.[2] இதில், மொசே என்பவர், யெகோவா அருளிய பத்துக் கட்டளைகளைச் சினாய் மலை மீது நின்று சிவன் மாதத்தின் ஆறுவதுநாள் மக்களுக்கு வெளியிட்டார் என்று கூறப்படுகின்றது. இதனால் சிவன் என்னும் பெயர் திங்களின் பெயராகக் கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலும் வழங்கிற்று என்பது ஊகித்தறியப்படும். கிறித்துவ மறையிலே சியன் எனக் கூறப்படும் கடவுள் சிவனே என்பதை மேல் நாட்டறிஞர்களே ஆராய்ந்து கூறுகின்றனர்.[3] ஆதர்லில்லி என்பார் கூறுவது பின்வருமாறு "சிவன் என்னும் சொல் வலித்தும் மெலித்தும் இந்தியாவின் பல பகுதிகளில் உச்சரிக்கப்படுகின்றது. பிரான்சு மக்கள் 'ச்சிவன்' என உச்சரிப்பர். கிறித்துவ மறையிலே

---

1. Samash is represented upon the bas - relief as seated upon a throne with his feet resting upon the rows of cones which in Babylonian art represent rocks or mountains; and one of the names of sun god was El - shaddai or god of mountains. which has been compared with the Hebrew El-shaddai - Hammurabic code—p. 83 - Chilporic Edwards.

2. Old testament was written between 450 and 285 BC. Moses was said to have written inspired records for his tribes, but which bave unfortunately all perished, so at least we gather from Ezra who with his scribes endeavoured to reproduce them and result in our old testament - Rivers in life p. 11.

3. Another Bibilical analogy has received attention. But ye have borne the tiber-nacle of your Moloch your Cheun, your images the star of your god which ye made for yourselves (Amos V. 26)......Scholars saw at once that the Chiun was Siva. His tibernacle is the pavilion carriage of Sive. His star, the six rayed star of Siva made of the two equilatral triangles Siva's own and the same upside down for Durga-Rama and Homer pp. 196, 218, 220.

(Amos. V. 26) வரும் சியன் என்பது சிவனே என ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்துள்ளார்கள்". எபிரேயரின் யேகோவா என்னும் சொல்லும் சிவா என்பதுபோன்ற ஹெவா, செவா என்னும் சொற்களினின்றும் பிறந்ததென ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். [1] எகிப்திலே சிவன் என்னும் பாலைநிலப் பசுந்தரை ஒன்று உண்டு. இங்குப் பழைய அமன் ஆலயம் ஒன்று காணப்படுகின்றது. அமன் எகிப்தியரின் ஞாயிற்றுக் கடவுள். அமன் வழிபாடு பண்டு நாட்டினின்றும் சென்றதாக அவர்கள் வரலாறுகளிற் காணப்படுகின்றது. அமன் வழிபாடு சியஸ் (Zeus) யூபிதர் வழிபாடுகளாகக் கிரேக்க உரோமை நாடுகளில் வழங்கிற்று. சியஸ் யூபிதர் வழிபாடுகளும் ஞாயிற்று வழிபாடுகளே. இப் பாலைவனப் பசுந்தரையில், ஞாயிற்றுக்கடவுள், சிவன் என்னும் பெயரால் வழிபடப்பட்டமையினாலேயே அதற்குச் சிவன் என்னும் பெயர் உண்டாயிற்று என எளிதில் ஊகித்தறியலாம். சிவன் என்பதே அமன் எனப் பிற்காலந் திரிந்து வழங்குதல்கூடும். அமன் (Amon) என்பதே கிறித்தவர்கள் வழிபாட்டு முடிவில் கூறும் ஆமேன் எனத் திரிந்து வழங்குகின்றதென்பது வரலாற்று ஆசிரியர்கள் சிலரது கருத்து. மேற்கு ஆசியாவில் இடங்களுக்கும் மாதத்துக்கும் மாத்திரமன்று. மக்களுக்கும் சிவன் என்னும் பெயர் இட்டு வழங்கப்பட்டது. [2] சொய்ரோ ரோயிஸ் என்னும் சுமேரிய அரசனது மனைவியின் பெயர் சிவன். இவளுக்கு மாத்திரம் சிவன் என்னும் பெயர் இடப்பட்டதெனக் கருதுதல் கூடாது. அக்கால மக்கள் பலருக்கு இப்பெயர்

---

1. Accordingly to Hebrew scholars the name Jehovah is to be derived from the stem Havah and this we take for the modified form Chava. - Book of the beginning.

2. Wife of Chosroroes ii - Twin Rivers" p. 129 - Seton Lloyds.

இட்டு வழங்கப்பட்டதென்றும் அம்மரபுபற்றி இவளுக்கும் இப்பெயர் கொடுக்கப்பட்டதென்றும் நன்கு உய்த்தறியலாகும். அமெரிக்காவிலே கொலறடோப் பள்ளத்தாக்கிலுள்ள பீடபூமியில் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சிவன் ஆலயம் கண்டுபிடிக்கப்பட்டது. கிரேக்கரின் சியஸ் என்னும் கடவுட் பெயரும் சிவன் என்பதன் திரிபே. இது, சியஸ், மலையில் இருப்பவராயும் மூன்று கண்களுடையராயும் கூறப்படுதலால் நன்கு அறிதும். யூபிதர் என்னும் பெயரும் செவா என்னும் அடியாகப் பிறந்ததென ஆராய்ச்சியாளர் கூறுவர்.[1] உக்கிரோ பின்னிய தூரானிய மொழிகளில் சிவன் சிவோ என வழங்கும். லாப்பியரின் காத்தற் கடவுள் சிவன். துருக்கிமொழியில் செவ் என்பது அன்பை உணர்த்தும். அக்கேடிய மொழியில் செ கருணையையும், செப் உள்ளத்தையும் உணர்த்தும்.[2] ஆரிய மக்களிடையே வேதகாலத்தில் சிவாக்கள் (Sivas) என்னும் ஒரு கூட்டத்தினர் இருந்தனர். பாணினியின் இலக்கணத்திற் கூறப்பட்ட சிவபுரம், இவர்களின் நகரமாகலாமெனக் கருதப்படுகின்றது. மெசபெதேமியாவிலே பழைய பபிலோன் மக்களின் மரபினராகிய சிறுகூட்டத்தினர் சிலர் காணப்படுகின்றனர். இவர்கள் கபில் சிவா, றபில் சிவா என்னும் கடவுளரை வணங்கினர். பழைய இலங்கை அரசர் பலர் சிவன் என்னும் பெயரைத் தமது பெயரின்

---

1. Jupiter traced *fervo*. The direct Assyrian denomination however of the planet is lost in the gulf of time from the Chaldie Sevah - History of Hindustan p. 239 - Author of Indian antiquities.

2. Ugro - Finnic and other Tunarnian dialects Zivo or Sivo - and Siva is protecting deity among the Lapps. The Turkish sev kind, Akkadion Se - favour, sub - heart - Faiths of man - p. 308. Forlong.

3. The place Sivapura connected with - Panini might have been named after them, Mr. A. C. Das suggests that they might have been the worshippers of Siva or Phallus-History of Pre - Musalman India - p. 185.

இறுதியிற்சேர்த்துவழங்கினர். அரசரல்லாத சிலருக்குச் சிவனென்றும் பெயரிருந்தமை மகாவமிசமென்னும் புத்தநூலாலறியப்படுகின்றது. சிவன் ஒளிமலை என்னும் பெயர் புத்தர் காலத்துக்கு முற்பட்டது. கிரேத்தாவிலுள்ள (Crete) ஓர் இடத்துக்கும் சிவன் என்று பெயர்.

## மரவணக்கம்

மரங்களின்கீழ் கடவுள் வடிவங்கள் வைத்து வழிபடப் பட்டமையின், மக்கள் மரங்களிலும் கடவுள் உறைவதாக நினைந்து அவைகளை வழிபடலாயினர். இவ்வணக்கமும் உலகம் முழுமையிலும் காணப்பட்டது; இன்றும் காணப் படுகின்றது.[1] இன்று கிறித்தவரின் தேவாலயத்துக்கும் பெயராக வழங்கும் 'சேட்ச்' என்னும் பெயர் கருவாலி மரத்தைக் குறிக்கும் 'கேர்க்' என்னும் சொல்லினின்றும் பிறந்ததென ஆராய்ச்சியாளர் காட்டியுள்ளார்கள்.[2] மரவணக்கத்தில் மரங்களின் உச்சிக்கிளைகள்மீது ஆடைத்துண்டுகளைக் கொடிபோலக் கட்டிப் பறக்கவிடுவது வழக்கு.

## நடராச வணக்கம்

நடராச வடிவில் இறைவனை வழிபடும் வழக்கு மொகஞ்சோதரோ காலத்திலேயே காணப்பட்டது.* அங்குள்ள

1. Africa is full of tree worship, 'because Bruce found trees adorned with streamers flags or tags and with altars at their base, where meats, grain, wine and oil were offered'. - Rivers in Life Vol. 2 p. 456.

2. Trees were worshipped by the ancient Celts, and Brosses even derives the word kirk now softened into church, from quercus, an oak the species being peculiarly sacred - The origin of civilization and the Primitive condition of man - Lubbock p. 213.

*மொகஞ்சொதரோவில் "தாண்டவன் இர் நால் மரம்" என ஒரு பட்டையத்திற் காணப்படுகின்றது. நாலு மரங்களுக்கிடையில் தாண்

முத்திரைகளில் இறைவனைக் குறிக்கத் தாண்டவன் என்னும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது; அரசன் ஒருவன், தானே ஒப்பற்றவன் என்னும் பெருமிதத்தினால் ஆடும் ஆடலை இவ்வடிவம் குறிக்கின்றது. காலின்கீழ் ஒருவனை மிதித்து நிற்றல் 'ஒன்னார்த்தெறல்' என்பதையும், அமர்த்தி நிற்கும் கரம் அடைந்தாரை ஆதரித்து அடைக்கலம் காத்தலையும் குறிக்கின்றன. தம்மைப் பணியும் சிற்றரசர்கள் முடிமீது தமது காலைத்தூக்கி வைத்து அருள்வது அக்காலப் பெருமன்னர் மரபு. அவ்வழக்கே 'திருவடித்திக்கை'யுமாம்.

## கோவில்

மரங்களின்கீழ் இருந்த அருட்குறிகளைச் சுற்றிச் கற்களை அடுக்கி மதில் அல்லது வேலி செய்வதிலிருந்து கோயில் ஆரம்பமாயிற்று. மனிதனின் வீடு ஒன்றைப் பார்த்து அமைக்கப்பட்டதே கோயில்.[1] கோயில் என்பது அரசனின் வீடு எனப் பொருள்படும். ஆலயம், கோயில் எனப்பட்டது போலவேஅரசனது இல்லும் கோயில்எனப்பட்டது.[2] மொகஞ்

---

டவமாடும் கடவுள் இருக்கிறார் என்பது இதன்பொருள். "Thandavan is among the four trees *I. E.* this shows that the idea of god dancing as the source of all the movement of the universe is a very old one.—The Journal of the University of Bombay-Fr. Heras.

1. The Temple was the house of the gods copied from a human house; - Translations of the 3rd international congress of the History of Religions - Vol. 1. P. 187 - Flinders Petrie.

2. The recent excavations in Punjab and sind show that the temple was a familiar institution in the 3rd millennium before Christ. "The temples", says Sir John Marshall, stand on elevated ground and are distinguished by the relative small-ness of their Chambers and the exceptional thickness of their walls, a feature, which suggests that they were several storeys in height - Anessay on the origin of the South Indian Temples - N. Venkata Ramanayya, M. A. Ph. D.

சொதரோவில், சிறிய அறைகளும் தடித்த சுவர்களுமுடைய தாகக் காணப்பட்ட கட்டிடம் அக்கால ஆலயம் எனக் கருதப் படுகின்றது. அதன் அமைப்பைக்கொண்டு அது பல மாடி யுடையதாயிருந்ததெனக் கருதப்பட்டது. மாடிகளே இன்று கோபுரங்களளவில் சுருங்கிவிட்டன போலும்.

மேற்கு உலகத்திலும் ஆதியில் ஆலயங்கள் மரமும் இலிங் கமும் கிணறும் பலிபீடமும் அளவில் இருந்தன. பலிபீட மென்பது மேலே சிறிய தீமூட்டக்கூடிய ஒரு கல். "ஆரம் பத்தில் மரமும், பின் சோலையும் கிணறும், பின் இலிங்கமும், பின் செதுக்கி மட்டஞ் செய்யப்படாத கல்லாகிய பலிபீட மும், பின்கொடிகள் அல்லது பாம்புகளும் முறையே ஓரிடத் தில் கூடி ஆலயங்களாயின. மெக்காவில் உள்ள காபா, மரமும் இலிங்கமும் கிணறுமாகிய இவ்வளவில் உள்ள கோயிலாக இருந்தது. இங்கிலாந்திலுள்ள கல் வட்டங்களுக்கு அயலில் தோப்புகளும் கிணறுகளும் இருந்தன"1 என்று பர்லாங் என் னும் ஆசிரியர் ஆராய்ந்து கூறியுள்ளார். "ஆதியில், சதுரமான அல்லது வட்டமான கல் வேலிகளின் நடுவே இலிங்கமும் அதன்முன்னால் பலிபீடமும் வைத்து வழிபடப்பட்டன. இவ்வகைக் கல்வேலியின் ஒருபுறத்தே மூன்று கல்லினால் எடுக்கப்பட்ட கட்டிடங்கள் (கவிழ்ந்த 'ப' போன்றன) பொனி சியாவிற் காணப்படுகின்றன. இக்கொள்கையை அடிப்படை

---

1. First and prominently comes the tree; then the grove and the well, then the little column or phallus; then the altar of unhewn stone and an oak or adytum, steamers or serpents &c. "The early gods liked not walls" said Pliny very truly and the Jews well know this - Rivers of life.

The grove was undoubtedly man's first temple but became a sanctuary, asylum, or place of refuge and as time passed temples became to be built in the sacred groves. There is no doubt but that where the holy *al Kaaba* of Meka stood was but a grove and a well and round all the holy circles of England stood sacred woods - Ibid. P. 70.

யாகக்கொண்டே பாபிலஸ் (Babel) பால்பெக்[1] ஆலயங்கள் எழுந்தன. மெக்காவில் உள்ள காபா ஆலயம் முற்கூறிய வகை ஆலயத்துக்கு உதாரணமாகும்" என "சிரியாவில் கற்களிற் காணப்படும் வரலாறு" என்னும் நூல் கூறுகின்றது.[2]

தென்னிந்தியாவில் மிகப் பழைய ஆலயங்களின் அழிபாடுகள் காணப்படவில்லை. தென்னிந்தியாவில் ஆலயங்கள் மரத்தினாற் கட்டப்பட்டனவென்றும் பின்பு அம்மரக்கோயில்களின் அமைப்பைப் பின்பற்றி கல்லினால் ஆலயங்கள் எடுக்கப்பட்டனவென்றும், அதனாலேயே மிகப் பழைய ஆலயங்களும் அவைகளின் அழிபாடுகளும் தென்னிந்தியாவிற் கிடைக்கவில்லையென்றும் பழைய கட்டிடக் கலை ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். தென்னிந்திய கட்டிடக்கலை ஆராய்ச்சியாளருள் சிறந்த யோவு தெபுருஇல் (Jouveau Dubreuil) என்பார் தென்னிந்திய கட்டிடக்கலையைப்பற்றிக் கூறியிருப்பன சில பின்வருவன: "திராவிடரின் கட்டிடக்கலை 1500 ஆண்டுகள் வரையில் மற்றைய நாட்டு அவ்வகைக் கலையினால் பாதிக்கப்படாது தனிமையாக நின்றது. இது மற்றைய நாட்டவரின் கட்டிடக் கலைகளினின்றும் எதையும் கடன் பெறவில்லை. இது படிப்படியே வளர்ச்சியடைந்திருக்கின்றது. திராவிடநாட்டின் ஒவ்வொரு காலத்துக் கட்டிடங்களையும் நோக்கும்போது அவைகளின் அமைப்பு மெதுவாக வளர்ச்சி

---

1. சிரியாவிலுள்ள மாபெரும் ஞாயிற்றுக்கோயில்.

2. The original temple in which the cone and its shrine or the altar were placed was but a cromlech or enclosure squire or round, made by setting up stones. The remains of such enclosures with a 'dolmen on one side are found......in Phoenicia. It was with this sacred ideas of sacred enclosure or *gilgal*, with its pillar or Metzebah that Hypaethral temples of Byblus and Baalbek developed. The original temple at Kaaba at Mecca with sacred stone to Hobal was another such temple - Syrian stone lore.

யடைந்துள்ளதென்று விளங்குகின்றது. இது மனிதர் நூலார் குரங்குபோன்ற மனிதனுடைய மண்டை முதல் இன்றைய மனிதனின் மண்டை வரையில் படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்துள்ளமையைக் காட்டுதல் போன்றது. மாமல்லபுரத்தில் காணப்படும் தேர்களுக்கும் திருப்பாப்புலியூரிற் காணப்படும் தேர்களுக்கும் மாதிரியில் வேறுபாடு உண்டு. இது கொறமாங்கன்[1] மனிதன் மண்டைக்கும் இன்றைய மனிதன் மண்டைக்குமுள்ள வேறுபாடு போன்றது.

"கற்சிற்பிகள் தம் முன்னோர் தமக்குக் கற்பித்த பரம்பரை முறைப்படியே கட்டிடங்களை அமைத்தார்கள். தமிழிலே வழங்குகின்ற எழுத்துக்களின் வடிவுகள் காலந்தோறும் மாறுபட்டு வந்துள்ளன. இதுபோலவே மொழியும், மொழி வழக்குகளும், மக்களின் பழக்கவழக்கங்களும் மாறுபட்டு வந்துள்ளன; சமயமும் கிரியை முறைகளும் சமயக் கோட்பாடுகளும் தனிவுபெற்று வந்துள்ளன. மிகப் பழைய உருவச்சிலைகளுக்கும் இன்றைய அவ்வகைச் சிலைகளுக்கும் வேற்றுமை காணலாம். நிலநூலார் நிலத்தில் அடுக்கு அடுக்காகக் காணப்படும் பாறைகளைப் பார்த்து அவற்றின் வயதைக் கூறுகின்றார்கள். இதுபோலவே கட்டிடக்கலையில் தேர்ந்த ஒருவனுக்குக் கட்டிடங்களிற் காணப்படும் கூடு, அல்லது போதிகையின் வடிவங்கள் ஆராய்ச்சிக்குப் போதுமானவை. இது பாறைகளிற் காணப்படும் தொல்லுயிர்களின்

---

1. கொறமாங்கன் என்னும் மனிதன் இன்றைய மனிதனுக்கு ஒரு படி முன் வாழ்ந்தான். இவ்வினத்தைச் சேர்ந்த மக்கள் ஆசியாவிலோ ஐரோப்பாவிலோ தோன்றி 25,000 ஆண்டுகள் வரையில் ஐரோப்பாவில் பரம்பினார்கள். இம்மக்களின் எலும்புகள் பிரான்சிலுள்ள கொறமாங்கன் என்னும் மலைக்குகையிற் காணப்பட்டது. ஆகவே அவர்கள் குறோமங்கன் மக்கள் என மாந்தர் நூலாரால் வழங்கப்படுவர்.

என்புக் கூடுகள் (Fossils) அப்பாறைகளை இன்ன இன்ன பாறை என்று கூறுவதற்கு நிலநூலாருக்குப் பயன்படுவது போலாகும்."

வெர்கூசன் (Fergussion) என்பார் தென்னிந்திய ஆலய அமைப்புகள் எகிப்திய கோயில்களை ஒத்தனவென்று காட்டியுள்ளார்.[1] தேஸ்ரன் என்பார் இந்தியாவின் பழைய கட்டிடங்களில் எகிப்திய சாலடிய போனீசிய அமைப்பு முறைகள் கலந்துள்ளன எனக் கூறியுள்ளார்.[2] மலையாளத்தில் சில ஆலயங்கள் குடில்போல வட்டவடிவாக அமைக்கப்பட்டுள்ளன- வட்டவடிவிலிருந்தே பின் சதுர வடிவு ஆரம்பித்திருத்தல் வேண்டும். மக்கள் ஆதியில் கட்டி வாழ்ந்த வீடுகள் வட்டவடிவினவே. கருவுக்கு (கர்ப்பக் கிருகம்)மேல் உள்ளபாகம் இன்றும் வட்டவடிவாகவே அமைக்கப்படுகின்றது. முடி என்பது குடில் வீடுகளுக்கு உச்சியில் வைக்கப்பட்ட பானையேயாகும். அரசன் இல்லத்தைச்சுற்றி அவனுடைய சுற்றத்தினர் சேனைபதியர் இருப்பதுபோலக் கோயிலின் உள் வீதியைச்சுற்றிப் பரிவார தெய்வங்களுக்கு ஆலயங்கள் அமைக்கப்பட்டன.[3] ஆதியில் மரமும் இலிங்கமு கிணறுமாகவிருந்த ஆலயம் இவ்வாறு வளர்ச்சியுற்றது.

---

1. Fergussion first called attention to the striking similarity in general arrangements and conception between the great South Indian temples and that of ancient Egypt. The gopurams or gate-towers which in the later more ornate examples are decorated from the base to the summit with sculpture of Hindu Pantheon increase in size with the size of the walled quadrangles, the outer ones becoming imposing land marks, which are vissible for miles around and are strikingly similar to Egyptian Temples - Migrations of Early Culture - G. Elliot Smith. - P. 79.

2. Thus in the matter of its early buildings India has clearly been influenced by Egypt Phoenecia and Chaldia - Thurstorn.

3. (In China) The idol of the chief deity of the temple Commonly, a seated human figure with distinctive atributes occupies a wooden shrine or tobernacle facing the main entrance often gods, his associates "ministers" have their places near him or in side chapels - History of Religions - G. F. Moore,

## தலவிருட்சம்

இலிங்கத்தைச்சுற்றிக் கட்டிடமெழுந்தது. அப்பொழுது மரம் இடம் பெறவில்லை. எந்த மரத்தின்கீழ் இலிங்கம் ஆதியில் வைத்து வழிபடப்பட்டதோ அம்மரம் அவ்வாலயத்தின் தலவிருட்சம் எனப்பட்டது. மேற்கு ஆசிய நாடுகளிலும் எகிப்திலும் கிரேத்தாவிலும் தென்னிந்திய ஆலயங்களிற் காணப்படும் கொடிமரம் போன்ற மரத்தூண்கள் ஆலயங்களில் நிறுத்தப்பட்டு ஆண்டு விழாக்காலங்களில் கிரியைகளுடன் வழிபடப்பட்டன. கொடிமரத்தின் நுனியில் மூன்று கிளைகள் காணப்படுதல்போல அம்மரங்களுக்கும் கிளைகள் இருந்தன. தலவிருட்சமே, காலத்தில் கொடிமரமாக மாறியுள்ளதோவென்பது ஆராயத்தக்கது.[1] இலிங்கம் வைக்கப்பட்டுள்ள மரங்களின் கிளைகளில், ஆண்டில் ஒருமுறை சிறப்பாக நடைபெறும் பொங்கி மடையிடுதல் போன்ற வழிபாட்டை அறிவிக்க ஆடைத்துணியைக்கட்டிவிடுதல் இந்தியநாட்டிலும் பிறவிடங்களிலும் உள்ள வழக்கு.

## திரை

அரசன் உறையும் உள் மண்டபத்தின் எதிரே திரை இடப்பட்டிருக்கும்.[2] அதனை ஒப்ப ஆலயங்களிலும் உள் மண்

---

1. In the year festival of the Assyrians the bare pole itself was the object of ritual practices,......just as was the case in Syria and Palastine. There is considerable reason for believing that this ritual importance of a tree or tree trunk was a feature of the religion of all the peoples in the Eastern Mediterranean... for in Crete, in Asia Minor, and in Egypt similar ceremonies may be observed.......At the top (of the pole) there are four or more spreading lines which seem to intend to represent branches. Below these branches there are generally represented bands - Early history of Assyria - P. 113.

2. முல்லைப் பாட்டு.

டபத்தின் எதிரிலும் திரைச்சீலை இடப்பட்டிருந்தன. ஆலயங்களில் இன்றும் திரைச்சீலையிட்டிருப்பதை நாம் காணலாம். மேற்கு ஆசிய நாடுகளிலும் ஆலயங்களுக்குத் திரைச்சீலையிடப்பட்டிருந்தது.[1]

## ஐயர்

அரண்மனையில் அரசனைச் சேவிக்கும் பணியாளர் பலர் இருந்தனர். அவர்கள் பல தரங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தார்கள். அவருள் ஒருவன் தலைவனாகவிருந்தான். இதனை ஒப்பவே ஆலயங்களிலும் ஐயனைச் சேவிக்கும் அடியவர்கள் பலர் இருந்தனர். அரசன் துயில்விட்டு எழுந்ததுமுதல் அவன் துயில் கொள்ளப்போகும் வரையில் அவன் அடியோர் என்ன என்ன பணிகளைச் செய்கின்றார்களோ அவ்வேலைகளை எல்லாம் ஐயனது அடியாரும் செய்தனர்.[2] ஐயனைச் சேவித்தலின் இவர்கள் ஐயரென்றும், கோயிற் கருமங்களைப் பார்த்தலிற் பார்ப்பார் என்றும் பெயர்பெற்றனர். அன்னோர் பழைய

---

1. In the Hindu temple of today and the tebernacle of the Jews so in Assyrian temple a veil existed-Ancient Faiths-Vol. 1, P. 614.

The Jerusalem temple was not only one which had sacred veil before the entrance, we have found such a veil mentioned in connection with the temples of the sun in Suppra in 880 B. C. together with ceremonial vestments proper for various feasts. The temple at Olympia was famous for the Assyrian veil described by Josephus as symbolizing the heaven is like the veil of *Gabala* in Phoenecia, which Symbolizes the cosmos. The Jerusalem veil is said to have renewed every year - Syrlan stone lore - P. 189.

To which (Arabian Venus at Mecca) a veil was presented by Hymyaritt King (about 1688 - 1629 B. C.) - Ibid.

2. So the king or priest carried out the daily routine of a servant in a house - Flinders Petrie.

நாளில் ஆறு தரங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனர்.[1] கிறித்துவ மறையில் சேர்மையா, நேசையா என ஐயாவில் முடியும் பல பெயர்களைக் காணலாம். தமிழ்மொழியில் மாத்திரமன்று, மேற்கு ஆசியமொழிகளிலும் ஐயர் என்பது கடவுளைக் குறித்தது. அராபி மக்கள் பபிலோன் நாட்டைச் சின்—ஐயர் என வழங்கினர். சின்—ஐயா என்பதற்கு ஞாயிற்றுக்கடவுள் என்று பொருள். பழைய கெல்திய மொழியிலும் ஐயர் என்பது கடவுளைக் குறித்தது.[2]

ஐயர் என்பது ஆரியர் என்பதன் திரிபு எனச் சிலர் கருத லாயினர். இது சிறிதும் பொருந்துவதன்று. தொல்காப்பி யத்தில் "ஐயர் யாத்தனர் கரணமென்ப" என ஐயர் என்னும் பெயர் வந்துள்ளது. ஆராய்ச்சியாளர் ஐயர் என்பது தூய

---

1. தொல்காப்பியத்தில், "அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்" எனக் கூறப்படுவதன்பொருள் இதுவே. ஓதல், ஓதுவித்தல், ஈதல், ஏற்றல், வேட்டல், வேட்பித்தல் என்னும் அறுதொழில்களை அறுவகை எனக் கூறுதல் ஏற்றதன்று. இந்திய பழைய வரலாற்றுக் கதைகளை ஆராய்ந்த பகிதர் என்பார் பிராமணரில் மூன்று வகையினரைக் குறிப்பிட்டுள்ளார். "There have been three classes among Brahmans throughout Indian history namely (1) The ascetic devotee and teacher, the Rishie or Muni (2) The priest and spiritual guide of kings, nobles and people (3) The minister of state, royal officer and those who followed secular employments-Ancient Indian Historical traditions-P 62 F. E. Pargiter.

2. The Arab still calls the Babylonian plain-Shin Iaa; that is sun god. For in the oldest Keltic as well as in Modern Dravidan. Tamil *Iar* is god; even in Ze-piter of the groves - Early Faiths in Western Asia - Forlong.

தமிழ்ச்சொல் என்றே அறுதியிட்டுக் கூறியுள்ளார்கள்.[1] வட மொழிப் பிரளயம் தென்தேசத்தே படை எடுத்துவந்த ஒரு காலத்தில், தமிழ்ப்பெயர்களின் இடத்தை வடமொழிப்பெயர்கள் எடுத்தன. அவ்வாறு வந்த பெயர்களுள் பிராமணர் என்பதும் ஒன்று. இன்றும் கோயிற்றொண்டு செய்யும் குலத்தவர் ஐயர், ஐயங்கார், நம்பி, பட்டர் முதலிய தமிழ்ப் பெயர்களாலேயே அறியப்படுகின்றனர். தமிழ்நாட்டுக் குருமாரை மேற்கு ஆசிய நாட்டுக் குருமாரோடு ஒப்பிட்டுப் பார்க்குமிடத்துப் பல உண்மைகள் வெளியாகின்றன. எகிப்திய குருமாரின் ஒழுக்கங்கள் பெரும்பாலும் தமிழ்நாட்டுக் குருமாரின் ஒழுக்கங்களை ஒத்தனவென்பது கெரதோதசு ஆசிரியர் கூறியுள்ளவைகளால் விளங்கும்.[2]

---

1. Aiyer is the term employed and it is either a corruption of Aryar or is a derivative form ஐ meaning வியப்பு(Tholkappyam) and denotes men who evoke admiration - Sera Kings of Sangam Period - 148. K. G. Sesha Aiyar

ஐயாஎன்னும்சொல் மொகஞ்சொதரோ முத்திரைகளிலும் காணப்படுகின்றது. அங்கு அது கோயிற்குருவைக்குறிக்கின்றது. ஹெரஸ் பாதியார், "மீனனிர் மாற அடுஇர்ஐயன்செறி தல்தல்வ" எனமகஞ்சோதரோ முத்திரையில் பொறிக்கப்பட்டிருத்தலைக்காட்டி அதற்கு "மீனவரின் பகைவர் மறியற்படுத்தப்பட்ட அரசகுரு" என்றுபொருள் எழுதியுள்ளார். 'Minanir maru adirayyan sere taltalva' -(the object of) the hostility of Minnas is the imprisoned illustrious ruler who is a priest" - The Journal of the University of Bombay-July 1936 - Fr. Heras.

2. ஒவ்வொரு மூன்றும் நாளும் (எகிப்திய) குருமார் பேன் முதலிய அழுக்குகள் இராதபடி உடல் முழுவதையும் மழித்துக்கொள்கின்றனர். அவர்கள் சணல் ஆடையை உடுப்பார்கள்; காலில் மிதியடியைத் தரிப்பார்கள். மிதியடி பைபிலஸ் (Byblus) என்னும் மரத்தினற்

## புரோகிதர்

ஐயர், மக்களுக்கு சமயப் பொருளில் வழிகாட்டியாக விருந்தார். அவர் இறந்தவர், இருப்பவர்களுடைய நன்மை யை முன்னிட்டுப் பல கிரியைகளைச்செய்ய ஆரம்பித்தனர். மக்கள் அவர் புரியும் கிரியைகளில் அளவுகடந்த நம்பிக்கை வைத்தனர். மக்களை எல்லாத் தீமைகளினின்றும் காப்பவர் என்னும் பொருளில் அவர் புரோகிதர் எனப்பட்டார். சோதிடம், வான ஆராய்ச்சி, மந்திரவித்தை முதலியவைகள் எல்லாம் முற்காலத்திற் குருமார்களிடத்திலேயே இருந்தன. இதனால் பொதுமக்கள் குருமாருக்குப் பெரிதும் அடங்கி நடந்தார்கள். இது உலக வரலாற்றில் எல்லா நாடுகளிலும் காணப்பட்ட உண்மை. புரோகிதன் அரசனது உறுதிச் சுற் றங்களுள் ஒருவனாகவும் இருந்தான். அரசர் அவைகளில் ஐய ருக்குத் தனிப்பட்ட மதிப்புக் கொடுக்கப்பட்டது. அரச

---

செய்யப்பட்டது. அவர்கள் வேறுவகையான ஆடையும் மிதியடியும் பயன்படுத்துதல் கூடாது. அவர்கள் பகலில் இருமுறையும் இரவில் இருமுறையும் நீராடுவார்கள். சுருங்கக் கூறுமிடத்து அவர்கள் பல கிரியைகள் புரிகின்றனர். அவர்கள் தமது சொந்தப் பொருளைச் செல விடுவதில்லை. அவர்களுக்காகப் புனித உணவு ஆக்கப்படுகின்றது. குருமார் பலர் கடவுளுக்குப் பணிவிடை செய்கின்றனர். அவர்களுள் ஒருவர் தலைமைக்குருவாய் இருப்பார். குரு ஒருவர் மரணமானால் அவர் புதல்வன் அவ்விடத்துக்கு வருகின்றான். எகிப்தியர், பருகும் கிண் ணங்களைத் தினம் சுத்தஞ் செய்கின்றனர். இஃதைச் சிலர் செய்தும் சிலர் செய்யாதும் விடுகின்றார்களல்லர். அவர்கள் எப்பொழுதும் தோய்த்துலர்ந்த சணல்ஆடையை உடுக்கின்றனர். விரதமிருந்த பின்பே எல்லோரும் பலி செலுத்துகின்றனர்-ஹெரதோதஸ்.

அறுவகைப் பார்ப்பனப் பக்கம் என்பதற்கு உதாரணம் இன்றைய உரோமன் கத்தோலிக்க குருமார்களிடையே காணப்படுகின்றது.

சபைகளில் ஐயருக்குத் தனது கருத்துக்களை எடுத்துக்கூறும் அதிகாரம் இருந்தது.[1] ஐயரும் புரோகிதனும் ஆரியன் என்று நினைப்பது தவறுடைத்து.

## கோயிற் கிரியைகள்

ஓர் அரசனுக்கு அவன் வேலைக்காரன் நித்திரைவிட்டெழுந்தது முதல் நித்திரைக்குச் செல்லும் வரையில் என்னென்ன வேலைகளைச் செய்தானோ அவ்வகை லேலைகளை எல்லாம் கடவுளுக்குச் செய்வதே ஆலயக் கிரியைகளாகும்.[2] விழாக்கள் என்பன அரசன் உலாவரும் காலத்தில் நடை

---

1. There appear to have been a general permit for a learned Brahman to speak his mind in any durbar; and these Brahmans often gave out their opinions most fearlessly. This privilege was similarly accorded also to men of learning - Beginnings of South Indian History, P. 139 - S. K. Aiyengar.

2. First thing in the morning, fire must be lit, a lamp carried round to the master, as they usually rose before the sunrise, then some incense burnt to give devine nourishment of perfume, incense being literally, 'divine food' like cooking the morning meal. The master's door was then opened, obeisance was made to him, with protestations of fidelity, he was anointed, and the divine food of incense put before him. The servant then returned with assurances that he was ready to his master. After the breakfast the servant comes forward again, goes through the same obeisance and calls on him to wake up in peace, declaring that his word is law, and that he will destroy bis enemies. Then the master is washed perfumed, and dressed in various cloths, anointed and decorated. The ground is sanded for him to walk on when he comes forth. Several offerings of incense and another washing represent the meals and cleaning during the day and the service is over. - Flinders Petrie.

இங்கு கூறப்பட்டது எகிப்திய ஆலயங்களில் நடைபெறும் கிரியை.

பெறுவதுபோல நடத்திக் கண்டு மகிழ்தல். விழாக்களையும் நித்திய கிரியைகளையும் கொண்டு பண்டை அரசரின் வாழ்க்கையை இனிது அறிந்துகொள்ளுதல் கூடும். அவ்வத்தேச வழக்குகளுக்கேற்ப இக்கிரியைகள் சிறிது வேறுபடும். திருவுருவத்துக்கு நறுமணத்தைலம் தேய்த்தல் திருமுழுக்காட்டுதல் ஆடை உடுத்தல் நறும்புகையும் தீபமும் (ஆலத்தி) காட்டுதல் உணவுபடைத்தல் போன்ற கிரியைகள் எல்லா நாடுகளுக்கும்பொதுவானவை. கிறித்துவ ஆலயங்களில் நடைபெறும் கிரியைகள் தென்னிந்திய ஆலயங்களில் நடைபெறுவன போன்றவே. சலமன் கட்டிய ஆலயத்தில் நடைபெற்ற கிரியைகளும் இவ்வகையின. சிரியா, ஜுடேசியா முதலிய இடங்களிற்காணப்பட்ட இலிங்கங்களில் பூமாலைகள் வெட்டப்பட்டிருந்தன.[3] சிரியாவிலே கடாட் (Hadad) என்னும் சிவன் கடவுளுடைய இடபத்தின் நெற்றியில் பூமாலை காணப்படுகின்றது.[4] இதனால் பொனீசியா சிரியா ஆபிரிக்கா முதலிய நாடு

---

3. The discovery of Zimbawe of soap stone cylinder of quern shape with rings of rosettes on the top and sides, which rosettes are believed to represent the sun and are common in phallic decorations. This cylinder which is considered as undoubtedly Phoenician is similar to the one found at the temple of Paphos in Cyprus which was once a leading colony. The rosettes are also similar to those on the sacred cone of the great Phoenician temple of the sun in Emesu in Syria and also to the rosettes on the Phoenician sepulchral setele in the British museum. - The Ancient Ruins of Rhodesea P. 38 - R. N. Hall and W. G. Neal.

4. The Jupiter of Syria is represented as a bearded god with phrygian cap...at his side hangs his sword in its scabboard. His right hand brandishes a double axe; his left gashes a thunderbolt consisting of six spirally twisted lines, each of which is tipped with arrow head. The bull that supports the god has a rosette on the forehead between the eyes - Zeus - P. 637 Arthur Bernard Cook.

களில் வழிபாட்டில் பூமாலைகள் பயன்படுத்தப்பட்டன வென்பது தெரிகின்றது. யூதர் வழிபாடு பழைய அக்கேடிய பொனிசிய வழிபாடுகளை ஒத்தது. ஆதலின் அக்காலத்து அந்நாடுகளிலும் இவ்வகைக் கிரியைகளே நடைபெற்றனவென்பது தெற்றெனப் புலப்படும். ஆலத்தி காட்டுதல் தென்னாட்டுப் பழைய வழக்கு. அரசருக்கு முன்னும் இது காட்டப்பட்டது. தீபம் ஞாயிற்றைக் குறிக்குமெனச் சிலர் கூறுகின்றனர்.1

## மக்களின் வழிபாடு

அரசனைக் காணுவதற்கு மக்கள் எப்படிச் செல்லுகிறார்களோ, அப்படியே ஆலயத்துக்கும் சென்றனர். பெருமக்களைக் காணச் செல்லுமிடத்து வெறுங்கையோடு செல்வது தமிழர் மரபன்று. "போனவன் வெறுங்கையோடே போகாவண்ணஞ்சென்று ஞானசற்குருவை நன்றாய் வணங்கிநின்று" (கைவல்யம்); ஆகவே அவர்கள் செல்லுமிடத்துக் கையுறையுடன் சென்றனர். நடுவிருக்கை என்னும் கருவிமூலம் அரசனுக்குத் தமது செய்தியை அறிவித்தல்போல அவர்கள் தமது கையுறையை நடுவிருக்கைகளாகிய குருமார் (ஐயர்) மூலம் கடவுளிடத்தில் சேர்ப்பித்துத் தம் குறைகளையும் அவர்மூலம் உணர்த்தினர். இதற்குக் கைம்மாறாகக் குருமார் கூலியும் பெற்றனர். பத்தர்கள் கடவுளின் எதிரே நின்று

1. The custom of using lamps and candles in worship is very ancient having prevailed in Babylon (Baruch VI. 14) in Pagan Rome in Egypt......The lights are typical to sun - Ancient Faiths Vol. 1 - P. 444 - T. Inman.

அவன் புகழ்பாடிக் கும்பிட்டுக் கூத்துமாடினர்.[1] மேற்கு ஆசிய நாடுகளில் இவ்வகைக்கூத்து இன்றும் நடைபெறு வதை வரலாறுகளிற் காண்கின்றோம். சலமன் அரசனின் தந்தையாகிய தாவீது (David) பேழைக்கு முன்னால் துள்ளி ஆடின வரலாறு கிறித்தவ மறையில் (2. Sam VI, 14, 15) கூறப்படுகின்றது.

## தேவதாசிகள்

அரசரின் அரண்மனைகளில் அரசனைப் பாட்டாலும் கூத்தாலும் மகிழ்விக்கும் மகளிர் பலர் இருந்தனர். அவ் வாறே ஆலயங்களிலும் அவ்வகை மகளிர் பலர் இருந்தனர். இந்தியநாட்டில் மாத்திரமன்று, மேற்கு ஆசிய நாடுகளிலும் உரோமிலும் இவ்வகை மகளிர் இருந்தனர். இவர்களின் ஒழுக்கம் இன்று இந்தியநாட்டுத் தேவதாசிகளின் ஒழுக்கத் தைப் பெரிதும் ஒத்தது.[2] பலஸ்தீன் ஆலயங்களிலும் தேவ தாசிகள் இருந்தார்கள். இதற்குஆதாரம் கிறித்துவமறையின் பழைய எற்பாட்டிற் காணப்படுகின்றது. இராசராசன் கட் டிய தஞ்சாவூர் ஆலயத்தில் நானூறு தேவதாசிகள் இருந் தார்கள் என்று ஒருகல்வெட்டிற் காணப்படுகின்றது. மகமத் கசனி காலத்தில் சோமநாத ஆலயத்தில் 300 தேவதாசிகள் இருந்தனர்.

---

1. We have interesting evidences of the sacred dancing which we know to have found part of the ritual of the Hebrews and Phoneicians. Indeed they still survive not only in Asia-minor but in Palastine at Adh Dhaheryth (Debir). In 1874 I saw the village elders dancing solemnly before the shrine of their Neby. David, it will be remembered danced with almost the fury of a Bacchic right before the ark. The Derwish dances also must not be forgotten and the dancing of the Jerusalame people at the feast of tabernacles mentioned in the Misbnah - Syrian Stone lore P. 100.

2. The religious prostitutes mentioned by Heradotus, who were certainly a prominent feature in Babylonean religion. They

## சங்கு வாத்தியம்

தென்னிந்திய ஆலயங்களில் சங்கு வாத்தியம் ஒரு சிறப்பு. சிவன், காதில் அணிந்திருப்பது "சங்கவெண்குழை"; திருமால் கையில் வைத்திருப்பது சங்கு. "சங்காபிடேகம்" என்னும் பெயருடன் இன்றும் ஆலயங்களில் மாபெருங் கிரிகைகள் செய்யப்படுகின்றன. இந்திய மக்கள் பரிசுத்தமாகக் கொள்ளும்பொருள்களுள் சங்கும் ஒன்று. சங்கு இந்தியநாட்டில் மாத்திரமன்று இவ்வுலகம்முழுமையிலும் தூய்மையுடையதாகக் கருதப்பட்டு ஆலயங்களில் வாத்தியமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது. எலியட்சிமித் என்னும் ஆசிரியர், சங்கை வாத்தியமாகக்கொள்ளும் வழக்கம் தென்னிந்தியாவில் ஆரம்பித்துக் கிழக்குநோக்கி சினு யப்பான் கிழக்குத் தீவுகள் பசுபிக் கடற்றீவுகளுக்கு ஊடாகச் சென்று அமெரிக்காவையும்

---

were women who took vows of celebacy though usually dwelling together in special convents, could neverthless live in this world and were often nomally married. If married (and to possess votaress wife was probably regarded as distinction) a concubine was provided to bear children to the husbands, but had no legal wifely rights, which belonged to the votaresses. - The Ancient History of the Near East - R. H. Hall.

The Syrian emperors brought with them to the Capital of the world (Rome) the Phoenician calus of conical stone and the troops of temple women. - The Syrian stone lore - P. 228.

The women attached to the Hindu temple exactly reproduce the Kadesh or other town sacred to the great mother goddess. The menhir, or conical stone was the emblem throughout Syria of the gods presiding over fertility - Ibid P. 47.

All alike had women allotted to their service, but the Hebrew god went beyond the Hindu, for he was cheered with wine and for long periods the male Kadashism thronged in the santuary - Judges IX 13; Dent XIX 26; Jer. XXXV - Short Studies in the Science of Comparative Religions.

அடைந்ததெனக் கருதினர்.[1] கிரேத்தாத் தீவின் பழைய மக்கள், ஆலயங்களில் கடவுளை வீதிவழியே அழைத்து வரும் போது சங்கு வாத்தியம் ஊதினர்கள்.[2] இன்றும் கிறித்துவ ஆலயங்கள் சிலவற்றில் சங்கு வாத்தியம் ஊதப்படுவதை வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். இன்றும் சீனவிலே புத்தஆலயங்களில் சங்கு ஊதப்படுகின்றது. கிறித்துவ மறையின் புதிய ஏற்பாட்டில் சங்குஒலி, உயிர்த்தெழுவதின் அடையாளமாகக் கருதப்பட்டது.[3] மெக்சிக் கோவில் பழைய கையெழுத்துச் சுவடி ஒன்றில், இரண்டு குருமார் தங்கள்

---

1. Ancient Egyptian Civilization - G. Elliot Smith P. 23.

2. ......Should here be certainly regarded as the couch shell used in Minoan cult for summoning divinity. Such trumpet shells are themselves of frequent occurance in Minoan shrines......The special object of cult in this case is the group of cyprus like trees shown behind the altar and in front of which are set the sacred horns and altars, while a votary brings down the divinity by blowing blasts - The Palace of Minos at Knossos Vol. IV - P. 244.

The earliest use of the couch shell trumpet was in the Minoan worship in Crete. Thence it spread far and wide until it came to play apart in religious services of Christian, an Jehovah, Brahman, an Buddhist. Shinto, and Shamanislic, in widely different parts of the world - In Mediterranean, in India in central Asia, in Indonesia and Japan, in Ocenia and America. In many of these places it was supposed to have the definite ritual object summoning the Deity - Shells as evidence of the migration of early culture p. XXIV - J. Wilfred Jackson.

(கிரேத்தாமக்கள் இந்தியாவினின்றும் சென்ற தமிழர்களே என்பது வரலாற்று நூலார் துணிவு. ஆகவே கிரேத்தாமக்கள் இந்தியாவினின்றுமே இவ்வழக்கைக் கொண்டுசென்று பரப்பினர்.)

3. In new testament the sound of the trumpet was the signal for resurrection - Ibid.

காதுகளைத் துளைத்து ஞாயிற்றுக் கடவுளுக்குப் பலி செலுத்துவதுபோலவும், இரண்டு குருமார் சாம்பிராணிப்புகை இடுவதுபோலவும் இன்னும் இரண்டு குருமார் சங்கு ஊதுவது போலவும் உள்ள படம் காணப்படுகின்றது. இக்கையெழுத்துச் சுவடி இப்பொழுது புளோறன்ஸ் (Florance) என்னுமிடத்தில் உள்ளது.[4] ஞாயிற்று வணக்கம் எங்கெங்குக்காணப்பட்டதோ அங்கு எல்லாம் சங்கு வாத்தியமும் பயன்படுத்தப்பட்டது.

கடல் உயிர்களின் ஓடுகள் மிக முற்பட்ட காலமக்களால் புனிதமாகக் கருதப்பட்டனவென்றும், அவற்றுள் கவடி (சோகி) போன்றவை வழிபடப்பட்டனவென்றும், கடவுள் தன்மையுடையனவாதலின் கவடிகள் மக்களால் அணியப்பட்டனவென்றும், பிற்காலங்களில் அவைகளுக்குப் பதில் அவை (சங்கு) கொடுக்கும் முத்து சிவஒளி அளிப்பன எனக் கருதி அணியப்படலாயின என்றும் கூறுகின்றனர். முத்துக்களை அணியும் வழக்கிலிருந்தே பிற்காலத்தில் சிவசத்து உடையதாகிய உருத்திராக்கம் அணியும் வழக்கு உண்டாயிற்று எனக் கருதப்படுகின்றது. முத்துநகை, முத்துப்பல்லக்கு முத்து ஆபரணம் என்பன அரசர், கடவுளர்களுக்குச் சிறந்தனவாகக் கொள்ளப்படலாயின.

## துவராடை

சிவன், திருமால் அடியவர்கள் துவராடை உடுக்கின்றனர். துவராடை உடுத்தற்கும் பழைய வரலாறு உண்டு. இவ்வழக்குப் பண்டைமக்கள் பலரிடையே காணப்பட்டது. சங்கு வாத்தியம் எங்கெங்குப் பயன்படுத்தப்பட்டதோ அங்

4. I bid P. Ibid P. XXV.

கெல்லாம் ஒருவகைச் சிவப்புச்சாயம் உற்பத்தியாக்கப்பட்டது.[1] பொனீசிய மக்கள் சிவப்புச்சாயம் ஊட்டிய ஆடைகளை உலகின் பல பாகங்களுக்குக் கொண்டு சென்று வாணிகம் புரிந்தனர். பொனீசியாவிற் செய்யப்பட்ட சிவந்த ஆடைகள் அக்காலத்து உயர்ந்த வாழ்க்கைப் பொருள்களுள் ஒன்ருக விருந்தன. சில சமயங்களில் அதன்விலை பொன்னுக்குச் சமனுகவிருந்தது.[2] அக்காலஅரசரும் பெருமக்களும் குருமாரும் இவ்வாடைகளையே உடுத்தனர். கோயில்களிலும் இவ்வாடைகள் அலங்காரத்தின்பொருட்டுத் தூக்கப்பட்டன. மொசே, யெகோவாவின் கூட்டுக்கு (விமானம்) சிவப்பு ஆடையையே பயன்படுத்தினர். குருமாரும் அந்நிற உடையை அணிந்தனர். பபிலோனிய தெய்வங்களுக்குச் சிவப்பு ஆடைகளே உடுக்கப்பட்டன. எகிப்திய பபிலோனிய அரசரும் இந்நிற உடைகளையே உடுத்தினர். கிரீசிலும் உரோமிலும் அரசரும் பெருமக்களும் குருமாரும் உயர்ந்த கருமிகளும் மாத்திரம் சிவப்பு

1. In Phoenician, Greek and later times these couch shell trumpets were essentially used in the Mediterranean. European travellers have found them in actual use in East Indies, Japan, and by Alfurs in Ceram; the Paupuans of new Guienea, as well as in South Sea Islands as far as New Zealand and in many places in America. In the old and new world alike one find, in the same close Association the Purple industry - Migrations of Early culture - G. Elliot Smith.

2. Tyrian purple and purple stuff were essentially articles of luxury varying in price according to times and quality. They were always costly and vied in value even with gold itself. Consequently we find them reserved for the hanging of temples or employed for the robes of priests and kings. The Babylonians are said to have devoted purple to the dress of their idols - Shells as evidence of the migrations of early culture - P. 7.

In the Romish Church the prevalent colours for sacrod dresses &c. are purple or and Scarlet-Ancient Faith - P. 470,

உடை அணிந்தனர். ஏனைய மக்களுக்கு இவ்வுரிமை மறுக்கப்பட்டிருந்தது. இக்கட்டுப்பாட்டை மீறிச் சிவப்பு ஆடை அணியும் பொதுமக்கள் கடுந்தண்டனை அடைந்தார்கள்; சில சமயங்களில் கொலைத்தண்டனையும் பெற்றனர். பப்புரு (Paupra) என்னும் சொல்லே சிவப்பை உணர்த்தும் பேப்பிள் (Purple) என்னும் சொல்லாக மாறிற்று. பொனீசிய மக்கள் தமிழ்நாட்டிற் கொண்டுவந்துவிற்ற சிவப்பு ஆடை பச்சைவடம் எனப் பெயர் பெற்றது. பச்சை என்பது பப்புரு என்பதன் உச்சரிப்பு வேறபாடு எனக் கருதப்படுகின்றது.

இந்தியநாட்டிலும் சிவப்பு உடை உயர்ந்ததாகக் கருதப்பட்டது. தெய்வங்களுக்குச் சிவந்த ஆடைகளே உடுக்கப்பட்டன. திருமுருகாற்றுப்படையில் தெய்வமகளிர் தம்புலப்பூச்சி போன்ற நிற ஆடை உடுப்பவர்கள் எனக் கூறப்பட்டுள்ளது. பரிபாடல், திருமால் சிவந்த பட்டாடை உடுத்திருப்பவராகக் கூறுகின்றது. முருகக்கடவுள் உடுத்திருப்பது சிவந்த ஆடை (முருகு). மற்றும கடவுளரும் சிவந்த ஆடையையே உடுத்திருப்பதாகப் படங்கள் வரையப்பட்டுள்ளன. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறையில் தீக்கை பெற்றபோது அணிந்திருந்தது சிவப்பு ஆடை (திருவா—பு).

இதனால், கடவுளர் பெருமக்கள் குருமாரின் உடைகள் சிவப்பு நிறமாயிருந்தனவென்றும் அம்மரபைப் பின்பற்றியே கடவுள் அடியார் துவர் ஆடை அணியும் வழக்கு ஏற்பட்டதென்றும் நன்கு துணியப்படுகின்றது.

## சுவத்திகம்

சுவத்திக அடையாளம் புத்தர்காலத்துக்குப் பின்பே வழங்குகின்றதெனப் பலர் கருதலாம். ஞாயிற்று வழிபாடு, சங்குவாத்தியம் என்பவைகளைப்போலவே இக்குறியும் மிகப்

பழமையுடையது. வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட சுவத்திகம் பொறித்த பழம்பொருள்கள் தென் இந்தியாவிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[1] ஆதிகாலமக்கள் ஞாயிற்றைக் குறிக்கப் புள்ளடியை(×) அல்லது புள்ளடியைச் சுற்றி வட்டமிட்ட குறியை வழங்கினர்.[2] இப்புள்ளடி குரிசு (Cross) என ஆங்கிலமொழியில் வழங்கும். புள்ளடியிலுள்ள கோடுகளின் வளைவே சுவத்திகக் குறியாகும். இதனால் புள்ளடி சுவத்திகமாக வளர்ச்சியுற்றதென வறியலாம். சுவாத்திகம் என்பது வடமொழிப்பெயர். அங்கிலோசாக்சனியர் இதனை

---

1. Foote found near the French rocks near Mysore, "part of a large chatty with two ornaments cuniform in shape, with a small pap in each re-entering angle and a raised garland like ring round each cross". This is evidently a Swastika, and it bears a strong resemblance to a Trojan Type of Swastika - Stone age in India - P. 43.

2. Baal was represented by an altar, by a bull, by the cross sign of the sun + (sun and its rays) or by a linga stone, or a stone pillar - Links with past ages - P. 22 - E. P. Orton.

The sacred symbol of the Hittites also, including the true cross or the sun - cross or the Red - Cross of St. George of Cappadocia and England and St. Andrews Cross are identified with the sun-cross of Sumerians, Trojans ancient Britons as displayed in my comparative plates of these crosses - The makers of civilization - P. 16. Waddell.

We do not know where the Swastika first appeared. It may have appeared in India or in some near part of Asia, long before the time of Budda and spread from there to all over the world. The Symbol is universal anthropoligists draw maps showing the distribution and migration of the Swastika. There are the maps of the whole world spotted with Swastika from New Zealand, Australia and Japan, through Asia, Africa and Europe to North and South America. "This odd little Symbol spins gaily round the world" say - H. G. Wells in his out line of History - The Swastika - P. 14. - Well Hayes.

'வவர்வொற்' (Fower fot) என்றும், பிரான்சியர் குறொயிக்ஸ் கிறமி (Croix Grammee) என்றும் ஸ்காந்திநேவியர் தோர்க்கடவுளின் தடி (Thor's Hammer) என்றும் வழங்கினர். சுவத்திகம் என்பதற்கு மகிழ்ச்சி என்று பொருள். பதஞ்சலியின் யோக சூத்திரத்தில் யோகாசனத்தில் ஒன்று சுவத்திகம் எனப்படுகின்றது. இது இந்தியாவிலோ கிழக்குத் தேசங்கள் ஒன்றிலோ தோன்றி இவ்வுலகம் முற்றிலும் பரவியிருத்தல் வேண்டுமென ஆராய்ச்சியாளர் துணிகின்றனர். மாந்தர் நூலார் உலகில் எல்லாப் பாகங்களிலும் இவ்வடையாளம் சமயக்குறியாக வழங்கியதெனக் கூறி உலகப்படத்தின் எல்லாப்பாகங்களிலும் புள்ளியிட்டுக் காட்டியிருக்கின்றனர். 3 சிவன் என்னும் பெயர் ஞாயிற்றுக்குச் சாலப் பழையபெயர் என்று முன் விளக்கப்பட்டது. சுவ என்பதே சிவ என வந்ததென மொழியாராய்ச்சியாளர் கூறுவர். சிவன் சம்பந்தமான குறி என்னுங் கருத்துப்பற்றியே ஞாயிற்றுக்குறிக்கு சுவத்திகம் எனப் பெயர் இடப்பட்டது என நாம் நன்கு உய்த்துணரலாம். சுவத்திகக்குறி ஆரியரின் இந்திய வருகைக்கு முற்பட்டது.

ஹேரஸ் பாதிரியார் கூறுவது: மொகஞ்சொதரோவில் வாழ்ந்த திராவிடமக்கள் சிறிய சதுரமான நகைகளைப் பயன்படுத்தினர். அவைகளில் சுவத்திகம் பொறிக்கப்பட்டிருந்தது. அங்கு கிடைத்த பட்டையங்களிலும் இக்குறி காணப்படுகின்றது. இவ்வடையாளம் திராவிட மக்களுடையது. புதிதாக இந்தியாவை அடைந்த ஆரியர் தாம் புதிதாகக் கைக்கொண்ட பலவற்றோடு இவ்வடையாளத்தையும் பயன்படுத்தினர். இச் சுவத்திக அடையாளம் தமிழருடன்கூட

3. India the empire of Swastika - Coronation Souvenir - Bombay 1937 - Fr. Heras.

மேற்கே கிரேத்தா (Crete) கிரீஸ் எற்றுனு (Etruna) ஐபீரியா (ஸ்பெயின்) முதலியவும் பிறவுமாகிய நாடுகளுக்குச் சென்றது. மொகஞ்சொதரோவிலும் இலங்கையிலும் வழங்கியதுபோல அது அந்நாடுகளிலும் சுகம் என்னும் பொருளைக் குறித்தது. குடிக்கும் கிண்ணத்தில் இவ்வடையாளம் இருக்குமாயின் அது குடிப்பவனுக்குச் சுகம் தருவதாக என்னும் பொருளைக் குறித்தது. இவ்வடையாளம் எற்றுஸ்கிய (Etruscian) சமாதித் தூண்களிலும், கிறித்துவரின் கல்லறைகளிலும் பொறிக்கப்பட்டன. இது, இவ்வடையாளத்தின் கீழ் அடக்கஞ் செய்யப்பட்டவர் மறு உலகில் சுகமாக இருக்கட்டும் என்னும்பொருளைக் குறித்தது.

## * ஆகமங்கள்

ஆலயம் அமைக்கும் முறைகளையும், அங்கு நடக்க வேண்டிய கிரியை வகைகளையும், மக்கள் ஆலயங்களில் கடவுள் வழிபாடு செய்யவேண்டிய முறைகளையும் கூறும் நூல்கள் ஆகமங்கள் எனப்படும். வேதங்களும் ஆகமங்களும் நேர்விரோதமுடையன.[1] வேதங்களிற் கூறப்படும் தெய்வங்களும் ஆகமங்களிற் கிளக்கப்படும் தெய்வங்களும் வேறு. வேதங்கள் வருணச்சிரம தருமங்களை வலியுறுத்துகின்றன.

---

* வழிபாட்டு முறையில் மேலோர் (ஆப்தர்) காட்டிய வழி என்பதை ஆகமம் என்னும் சொல் குறிக்கும் என பேராசிரியர் எஸ். கே. கிருஷ்ணசாமி ஐயங்கார் குறிப்பிட்டுள்ளார். சிவ ஆகமங்கள் 28; வைணவம் 108.

Agama is the Synonym of what logicians call *Apta Vakyam*...... This would correspond to what is generally called...the practice of the disciplined......We may define Agama generally as that which is the accepted practices of the deciplined in respect of worship. - Paramasamhita - Translation by - Dr. S. K. Aiyengar.

1. The ancient as well as modern worship of Siva and Vishnu and Amba, are......described in the three sets of books

ஆகமங்கள் சரியை கிரியை முதலியவைகளைக் கூறுகின்றன. ஆலய வழிபாடு வேதங்களுக்கு அன்னியமானது. ஆகமங்கள் வடமொழியில் எழுதப்பட்டிருத்தலின் அவை தமிழருடையனவாகா எனச்சிலர் கருதுதல்கூடும். எம்மொழியில் ஆகமங்கள் எழுதப்பட்டுள்ளவேனும் அவைகளிற் பொதிந்துள்ள பொருள்களைக்கொண்டு அவை எவருக்குச்சொந்தம் என அறிதல் எளிது. ஆகமங்கள் தமிழருடையனவே என்பது வரலாற்று நூலார் நன்கு ஆராய்ந்து அறுதியிட்ட முடிவு. உபநிடதங்கள் பாரசிக மொழியிலும் லாத்தின் மொழியிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பாரசிகரும், இத்தாலியரும் அந்நூல்கள் தங்களுடையனவென்று வாதாடமாட்டார்கள். ஆலயம் கட்டும் சிற்பக்கலை, திருவுருவங்கள் செய்யும் முறை முதலியனவும் இவைபோன்றனவும் பெரும்பாலும் அவ்வத் தொழில்களுக்குரிய கூட்டத்தினரிடையே எட்டிலெழுதப்படாது பரம்பரையாகத் தொடர்ந்துவந்துள்ளன. இவ்வகை வழக்குகள் எல்லாவற்றையும் திரட்டிப் பிற்காலத்தில் ஐயர்மார் எழுதிவைத்தனர். திருவுருவங்கள் உலோகங்களில் அமைக்கும் முறைகள் நீண்டகாலம் எழுதப்படாது பரம்பரையாக வந்ததென்பதை கன்கூலி என்பார் தென்னிந்திய வெண்கலத் திருவுருவங்கள் என்னும் நூலிற் குறிப்பிட்டுள்ளார்.[1]

---

called Agamas. They are utterly different from and opposed to the Vedic fire Cult. - Stone age in India P. 52.

The worship of Siva or Vishnu or Sakti in temples or houses was considered a heresy by the Vedantis, till in the tenth century Yamunacharya wrote the Agama Pramanya and Ramanujacharya in the next century blended the Vaishnava rites and concepts and the Vedic practices and Vedanta tents into one whole - Ibid.

1. South Indian Bronzes - G. O. Gangoly.

ஆகமங்களிற் கூறப்படும் யோகம்ஞானம்முதலிய பகுதிகள் பிற்காலத்து எழுதப்பட்டனவாதல் வேண்டும். தமிழில் அறம் பொருள் இன்பம் என்னும் முப்பாலாக நூல் செய்தலே வழக்கு. வீடுபற்றி நூல்செய்தல் வழக்கின்று.*

"அந்நிலை மருங்கின் அறமுதல் ஆகிய
மும்முதற் பொருட்கும் உரியவென்ப" (தொல். செ. 106)

இவ்வழக்குப்பற்றியே திருவள்ளுவரும் முப்பாலாக நூல் செய்தார். ஆரியரின் முறையைப் பின்பற்றியே தமிழில் நூல்கள்செய்யப்பட்டன என்று சிலர் வாதிப்பர். இது தந்தைக்கு மகன் முப்பாட்டன் என்பதுபோன்றதோர் கொள்கை. நாற்பாலாக நூல் செய்தலே ஆரியர் மரபு.

## புராணங்கள்

புராணங்கள் என்பன பழைய வரலாறுகள். புராணங்களில் பழைய் அரசர் வரலாறுகளும் அவர்கள் காலங்களில் நிகழ்ந்த பெரிய செயல்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அரசர்களது சபைகளிலே புலவர்கள் இருந்தார்கள். அவர்கள் அரசனது பரம்பரையிலுள்ள வரலாறுகளை எல்லாம் திரட்டிப் பெருநாட்களில் அரச சபைகளில் கூறுவது வழக்கம். இவ்வாறு வடநாட்டு அரசர் சபைகளில் இருந்த புலவர்கள் சூதர் எனப்பட்டனர். இதனாலேயே புராணங்கள் சூத முனிவராற் சொல்லப்பட்டன என்று வழ்ங்குகின்றன. இவ்வாறு கன்ன பரம்பரையில் வந்த வரலாறுகள் பிற்காலத்துத் திரட்டி எழுதப்படலாயின. இவைகளே பழைய இந்திய மக்களின் வரலாறு

---

* "அவற்றுள் வீடென்பது சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாதலின்......நூல்களாற் கூறப்படுவன ஏனைய மூன்றுமேயாம்." (பரிமேலழகர்) "அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடு பேற்றிற்கு நிமித்தங் கூறுதலன்றி, வீட்டின் தன்மை இலக்கணத்தாற் கூறாரென்றுணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி....., வீடு பேற்றிற்கு நிமித்தங் கூறினார்."—(நச்சினார்க்கினியர்)

ளாகும். மற்றைய நாடுகளிற் காணப்படும் பழைய வரலாறு கள் புராண வரலாறுகளைவிடச் சிறந்தன என்று கூற முடியாது. அபஸ்தம்பர் (கி. மு. 400) கௌடலியர் முதலானோர் புராணங்களைக் குறிப்பிட்டுள்ளமையின் அக்காலத்திலேயே புராணங்கள் தோன்றியிருந்தனவென பார்கித்தர் (Pargiter) என்னும் ஆரியர் கூறுவர்.

புராணங்களை நன்கு ஆராய்ந்து, இந்தியமக்களின் வரலாற்றுக் கதைகள் என நூல் எழுதிய பார்கித்தர் என்பார் கூறியிருப்பதின் சுருக்கம் பின்வருமாறு:

புராணகதைகள் எனப்படும் பழைய வரலாறுகளில் பிராமணர் கையிட்டு அவைகளை வேண்டியளவு பெருக்கியும், பிராமணக் கதைகளையும் கட்டுக்கதைகளையும் சேர்த்தும் தங்கள் சாத்திரக் கொள்கைகளையும் கிரியைகளையும் புகுத்தியும் இருக்கின்றனர். பிராமணரின் கதைகள் பிராமணருக்கு எப்படிப் புலப்படுமோ அவ்வாறு எழுதப்பட்டுள்ளன. அக்கதைகளில் பிராமணரின் கருத்துக்களும், பிராமணரின் உயர்வும், அவர்களின் புனிதத்தன்மைகளும், அவர்கள் மனிதருக்கு அப்பாற்பட்ட நிலையில் இருப்பதும், இவை போன்றனவுமாகிய தமக்கு மாத்திரம் வாய்ப்புடைய கொள்கைகள் கூறப்படுகின்றன. அக்கதைகள் சிறிதும் பொருத்தமற்றன. பிராமணர்களின் பிழையினால் புராணங்கள் மதிப்பை இழந்துவிட்டன [1]. வரலாற்று நூல்களாகிய புராணங்கள் பிராமணரின் கையீட்டினால் சமய நூல்களாக மாறியுள்ளன.

---

1. The Puranas naturally lent themselves to augmentations, and the Puranic Brahmans used their opportunities to the full, partly with further genuine traditions, but mostly with additions of Brahmanical stories and fables and doctrine and ritual matter.

சிறுவன் ஒருவன் சிறிதாயுள்ள இறப்பர்ப் பையை (Baloon) எப்படி ஊதிப் பெருக்கச் செய்கிறானோ அவ்வாறு சிறிய அளவில் இருந்த பண்டைமக்கள் வரலாற்றை அதனிலும் பன்மடங்கு பெரிதாகப் பிராமணர் தம் சொந்த நலம் கருதிப் பெருப்பித்துள்ளனர்.

## இதிகாசங்கள்

இதிகாசம் என்னும் பெயருடன் வழங்குவனவும் புராணங்கள்போன்ற பழைய வரலாறுகளே. இவ்வரலாறுகளிலும் பல கட்டுக்கதைகள் நுழைந்துள்ளன. புராணங்களில் கையிட்டதுபோலவே இதிகாசங்களிலும் பிராமணர் கையிட்டு அவைகளின் பெருமையைக் குறைத்துவிட்டனர். பார்கித்தர் கூறுவது: "பிராமணரின் கதைகள் பொதுவில் நம்பத் தக்கனவல்ல. இராமாயணத்தில் பிராமணக் கொள்கைகள் பெரிதும் காணப்படுகின்றன. கதையும் புதுமுறையாகவும் நம்பக்கூடாததாகவும் இருக்கின்றது." 1

---

Brahmanic tradition speaks from the Brahmanical standpoint, describes events and expresses, feelings as they would appear to Brahmans, illustrates Brahmanical ideas, maintains and incalcates the dignity, sanctity, suprimacy and even superhuman character of Brahmans, enunciates Brahmanical doctrines whatever subserved the interest of the Brahmans often enforcing the moral by means of marvellous incidents that not seldom are made up of absurd and utterly impossible details. It often introduces kings because kings were their patrons, yet even so the Brahmans, dignity is never forgotten.

It is mainly the Brahmanical mistakes and absurdities that have discredited Puranas. - Ancient Indian Historical Traditions - p.p. 37, 39 - F. E. Pargiter.

1. Brahman tales generally untrustworthy for traditional history. The Ramayana is highly Brahmanical and its stories are fanciful and often absurd. - Ibid.

## மத்தியதரை மக்கள் எல்லோருக்கும் ஆகமம் ஒன்றே

மேல் நாட்டுமக்கட் குலநூலார் மத்தியதரைச் சாதியினர்எனப் பிரிக்கும்பெருங்கூட்டத்தில் பொலினீசியர், தமிழர், எகிப்தியர்,பபிலோனியர்,ஸ்பானியர்,கிரேத்தாமக்கள், பழைய இத்தாலியர் முதலியோரும் இன்னும் மத்தியதரைக்கடலை அடுத்த நாடுகளில் வாழும் மக்களும் அடங்குவர். இம்மக்கள் எல்லோரும் ஒருகாலத்து ஒரு கூட்டமாக வாழ்ந்து பின்பு பிரிந்து சென்றோர். மத்தியதரை நாடுகளிலுள்ள மக்களே ஒருகாலத்தில் இந்தியாவை அடைந்து தமிழர் என்னும் சாதியினராகப் பெருகினர்கள் எனக் கருதப்பட்டது. பழைய மக்கள் வரலாறுகள் ஓரளவு வெளிச்சம் அடைந்துள்ள இக்காலத்து, தமிழ்மக்களே மத்தியதரை நாடுகளிற் சென்று குடியேறினர்கள் என்னுங் கொள்கை வலுத்துள்ளது. ஹேரஸ்பாதிரியார் ஆரம்பத்தில் முன்னைய கொள்கையுடையவராகவே இருந்தார். மொகஞ்சொதரோ, அரப்பாவிற் கிடைத்த ஆயிரத்து எண்ணூறு எழுத்துப்பொறித்த முத்திரைகளை வாசித்தபின் அவர் தமிழர்களே மத்தியதரை நாடுகளிற்சென்று குடியேறினர்கள் எனப் பலவகையில் ஆராய்ந்து காட்டியுள்ளார்.[1]

---

1. After the study of the above one-thousand and eight hundred inscriptions which up to now have been deciphered by the present writer, it is easy to realize that the wave of migrations of the mediterranean race which has supposed to have been from West to East must now be finally settled as having taken place in the opposite direction, i.e., East to West.

The development of Mohenjo - Daro script, the religion of these two countries and that of Egypt, the titles of Kings, the number of Zodiacal constellations among the Proto Indian people

விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டில், மத்தியதரை மக்கள்எல்லோருடைய வழிபாடுகளும்ஒருவகையினஎன்பதற்குரிய ஆதாரங்கள் நிறையக் கிடைக்கின்றன. அவற்றுட் சிலவற்றை ஈண்டுத் தருகின்றோம். அவற்றை இன்றும் இந்திய நாட்டிற் காணப்படும் வழக்குகளோடு ஒப்புநோக்கி உண்மை ஓர்க.

"யெகோவா மொசேயைநோக்கி அதிஉத்தம சுகந்த திரவியங்களாகிய சுத்தமான வெள்ளைப்போளத்தில் பரிசுத்த ஸ்நானத்துக்குச் சேக்கலின்படி 5000 சேக்கலும்,கருவாப்பட்டையில் அதிற் பாதியாகிய 2500 சேக்கலும், சுகந்த வசம்பு 2500 சேக்கலும், இலவங்கப்பட்டையில் 500 சேக்கலும், சித விருட்சத்தெண்ணெயில் ஒரு கின்னும் எடுத்து, பரிமள தைலக்காரனுடைய செய்கையாகச் செய்யப்பட்ட பரிமள தைலத்தைப்போல, அவைகளினுற் சுத்த தைலத்தைச் செய்

---

and the relative position of these constellations, the changing of the Proto Indian constellation of the harp (Yal) for Turus (the bull) which might have taken place in Sumer, the tradition of ancient people of Mesopotamia recorded by Berosus, the parallel by Bibilical account in Gen. ii . 1 . 5 all point to the same conclusion, that the migration of the Mediterranean race commenced from India and extended through South Mesopotamia and Northern Africa; spread through Crete Cyprus, Greece, Italy and Spain and across the Pyrenees reached central Europe and the British Isles. This route starting from Ceylon to Ireland is marked by uninterrupted chain of Dolmens and other megaliths that seem to be the relics of the enterprising and highly civilized race which is termed the Mediterranean by the anthropologists and which in India has been quite unreasonably despised under the name Dravidian. - Journal of Indian History Vol. XVI -Part-1 - Fr. Heras.

1. Judaism is an improved form of Chaldian, Phoenecian Greecian and possibly Egyptian worship. - Ancient Faiths p. 2 p. 294.

வாயாக. அதுவே அபிஷேக தைலமாக இருக்கவேண்டும். அதனாலே சபையின் ஆவாசத்துக்கும், சாட்சிப் பெட்டிக்கும், பீடத்துக்கும் கிளை விளக்குக்கும் தூபவேதிகைகளுக்கும், தகன பலிவேதிகைக்கும் அபிஷேகம் பண்ணக்கடவாயாக. ஆரோனும் அவன் புத்திரரும் எனக்கு ஆசாரியத் தொண்டு புரியும்படி நீ அவர்களுக்கு அபிஷேகம்பண்ணி அவர்களைப் பரிசுத்தப்படுத்துவாய். (யாத்-௩௦-௨௨-௩௩) (யாத் ௨௫-௩௦) என் சந்நிதியில் எப்பொழுதும் பீடத்தின் மீது அப்பம் வைக்கவேண்டும். நைவேத்தியத்துக்கு ஒரு கூடையில் எண்ணெயிற் பிசைந்த புளிப்பில்லாத மெல்லிய மாவினாற் செய்த அதிரசங்களையும் எண்ணெய் தடவப்பட்ட புளிப்பில்லாத அடைகளையும் கொண்டுவரக்கடவன். அவைகளை ஆசாரியன் கொண்டுவந்து யெகோவாவின் சந்நதியில் ......பலியாக இடக்கடவன். நைவேத்தியமாகும்பொருட்டு அடுக்குந்தோறும் சுத்தகுந்துருவை இடக்கடவாய்...... நித்தியமாக யெகோவாவுக்கு அக்கினியிலிடப்படும் நைவேத்தியங்களுள் அவை மிகவும் பரிசுத்தமானவைகளாகையால் அவைகள் அரோனுக்கும் அவன் புத்திரர்களுக்கும் உரித்தாகும்; அவைகளைப் பரிசுத்த ஸ்தானத்திற் புசிக்கக்கடவர்கள். (லேவி. 16. 12. 13.) யோகோவாவின் சந்நிதியிலிருக்கும் வேதிகையிலெரியும் நெருப்புத் தணல்களினாலே தகன தூப கலசத்தை நிறைத்து, தூளாக்கப்பட்ட சுகந்த தூப வர்க்கத்தில் தன் கை நிறைய அள்ளித் திரைக்குள்ளே கொண்டுவந்து சாட்சிப் பத்திரத்தின் மேலிருக்கும் கிருபாசயத்தை மூடத்தக்கதாக, யெகோவாவின் சந்நிதியில் அக்கினியின்மேல் தூப வர்க்கத்தைப் போடக்கடவன்.

(லேவி 24-1-4) யெகோவா மோசேயை நோக்கி நித்தமும் விளக்கேற்றும்படிக்கு இஸ்ரவேலர் இடித்துப்பிழிந்த

சிதவிருட்சத்தின் சுத்தமான எண்ணெயை உன்னிடத்தில் கொண்டுவரும்படி அவர்களுக்குக் கட்டளையிடு. ஆரோனு னவன் திரைச்சீலேக்கு வெளியே சாயங்காலம் தொடக்கம் விடியற்கால பரியந்தம் யெகோவாவின் சந்நிதியில் நித்தமும் விளக்கு ஏற்றக்கடவன்; (எண் 8. 1-4) யெகோவா மொசேயை நோக்கி ஆரோனுக்கு நீ விளக்கேற்றும்போது ஏழு தீபமும், கிளே விளக்குத் தண்டுகளுக்கு நேரே ஒளிகொடுக்க வேண்டு மென்று சொல் என்றார்.

(நாளா 15, 15, 16) யெகோவாவின் வாக்கின்படி, மொசே கட்டளையிட்ட பிரகாரம் தேவனுடைய பெட்டியைத் தண்டோடும் தங்கள் தோளின்மேல் எடுத்துக்கொண்டுவந் தார்கள்; தங்கள் சகோதரரைத் தம்புருவும் கின்னரமும், கைத்தாளங்களுமாகிய கீதவாத்தியங்கள் முழங்க ஆனந்தக் கூத்துடன் உரத்த சத்தமாய்ப் பாடும்படி ஏற்படுத்தும்படி தாவீது கட்டளையிட்டான். (ஷை அதி. உ) ஊதுகொம்போ டும், பூரிகைகளோடும், கைத்தாளத்தோடும், தம்புருவும் கின் னரமும் முழங்க இஸ்ரவேலரனைவரும் யெகோவாவின் உடன் படிக்கைப் பெட்டியைக் கொண்டுவந்தார்கள்.

(எண். 8-10) உங்கள் ஆனந்த தினத்திலும், உற்சவ நாளிலும் மாசாரம்பங்களிலும் உங்கள் தகன பலிகளையும் ஸ்தோத்திர பலிகளையும் செலுத்தும்போது எக்காளங்களை ஊதவேண்டும். (சங். 18-5) கின்னரத்தினுலும் கின்னரத் தோடு, கீதத்திேனாசையினுலும் யெகோவாவைப் பாடுங்கள். (2. சாமு 6, 5) தாவீதும் இஸ்ரவேல் சந்ததியார் சமஸ்தரும் யெகோவாவின் சமுகத்தில் தேவதாருவினுற் செய்த கின்னர மும், தம்புருவும், மிருதங்கமும், வீணையும், கைத்தாளமு மாகிய நானுவித வாத்தியங்களையும் முழக்கினுர்கள்.

(லேவி 2-3) ஓய்வுநாளும் மாசப்பிறப்பும் அமாவாசியும் பூரணையும் உற்சவ நாள்களும் புண்ணியகாலங்கள். அந்தக் காலங்களிலே நித்தியாக்கினியிலே இறைச்சி முதலியவைகளை யிட்டுத் தகனபலி செய்தல்வேண்டும். தங்கள் சங்கற்பத் தின்படியே நியமித்த தினங்களிலே உபவசித்து விரதமனுட் டித்தல் வேண்டுமென்றுஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. (லேவி. 12. 1-5) ஒரு ஸ்திரி கருப்பவதியாகி ஆண்பிள்ளை பெற்றால் அசுசியின் நிமித்தம் ருதுமதியைப்போல ஏழுநாள் அசுசியாயிருக்கக்கடவள். பின் அவள் உதிரசுசி நிமித்தம் முப்பத்து மூன்று நாள் வரையும் அசுசியாயிருப்பாளாக. சுசிக்கேற்ற தினங்கள் நிறைவேறுமளவும் எந்தப் பரிசுத்த வஸ்துவையும் பரிசிக்கவும் பரிசுத்த ஸ்தானத்திற் பிரவேசிக் கவும் கூடாது. (ஷை 15-19-24) ருதுமதியான ஸ்திரி தன் சரீரத்தின் ஊறலினிமித்தம் ஏழுநாளளவும் அசுசியா யிருப்பாள். அவளைப் பரிசிக்கிறவன் எவனொருவனோ அவன் சாயங்கால பரியந்தம் அசுசியாகவிருப்பான். அவள் அசுசி யாயிருக்கையில் அவள் படுத்த எந்தப் படுக்கையும் அவ ளிருந்த எந்த ஆசனமும் அசுசியாயிருக்கும்."

1 ஆசாரியபிடேகம், விரதம் அனுட்டித்தல், மரண, சென்ன தீட்டுக்காத்தல், ஆலயங்களில் கிரியைபுரிதல், தீயில் பலியை இடுதல், இவையும் இவைபோன்றனவும் தமி ழர் ஆரிய மக்களிடமிருந்து கற்றுக்கொண்டனவல்ல வென் பதற்கு மேற்காட்டியவை சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். பழைய தமிழ்நாட்டு வழக்குகளையே நம்மவர் தவறாக ஆரியக் கொள்கைகளெனக் கருதி வருகின்றனர்.

---

1. Colonel Tod believes that the religion of Siva was spread abroad at a very early age, before the Phoenecians came in with their Baal worship. Recent discoveries have confirmed Colonel Tod.

It has been discovered that Indian teak was used for building purposes in Babylon, and Indian Muslin was known there and called Sindu, the early name for India.

## சமயத்தின் அகவளர்ச்சி

இதுகாறும் கூறியன சமயத்தின் புறவளர்ச்சி முறைகள். சமயம் இன்னொரு வகையிலும் வளர்ச்சியடைவதாயிற்று. அதனை அகவளர்ச்சி எனக் கூறலாம். மக்கள் இவ்வுலகத்தையும், தம்மையும் ஒருங்கே இயக்கும் மேலான ஒரு பொருளையும்பற்றி ஆராயத் தலைப்பட்டனர். அவர்கள் அம்மேலான பொருள் தமது சிந்தைக்கு வாராததென்றும் அதுவே எல்லாப் பொருள்களையும் இயக்குகின்றதென்றும் கண்டார்கள். ஆகவே அவர்கள் அப்பெரும்பொருளுக்கு 'உள்ளத்தைக் கடந்தது' என்னும் பொருளில் கடவுள் என்றும், எல்லாவற்றையும் இயக்குவது என்னும் பொருளில் இயவுள் என்றும் பெயர்களை இட்டு வழங்கினர். இப்பெயர்கள் தமிழில்மிகப் பழமையுடையன. மொகஞ்சொதரோ முத்திரைகளில் கடவுள் என்னும் பெயர் இருத்தலைக் ஹெரஸ் பாதிரி

---

Another singularly able orientalist Mr. Paterson wrote that in the Asiatic researches, "the doctrine of Siva's seem to have extended themselves over the greatest portion of Mankind. They spread amongst remote nations who were ignorant of the origin and meaning of the rites they adopted, and the ignorance may be considered as the cause of the mixure and confusion of images and ideas which characterised the Mythology of ancient Greeks and Romans".

Siva in his creative power became Zeus *Triopthalmos* the three eyed (a special characteristic of Siva) Jupiter and Osiris ......Prof. Maspero shows a curious point of conduct between the worshippers of Baal in Syria and the worshipper of Siva...... when Saivaism went abroad on its strange missionary career, this bull worship was very prominent. We must all differ to an Indian authority as shrewed as Colonel Tod. He hold that this bull, worship was the strongest evidence in Palastine, Egypt etc. of Sivan Derivation. - India in Primitive Christianity - Arthur Lillie.

யார் காட்டியுள்ளார்[1]. மொகஞ்சொதரோவிற் காணப்பட்ட திருவுருவம் ஒன்று, கடவுள், பசுபதி என்னும் கருத்தை விளக்காநிற்கின்றது. அவ்வுருவம் யோகத்திலமர்ந்திருக்கும் திருக்கோலத்துடனுமுள்ளது.[2] இதனல் அக்கால மக்கள் முப்பொருள் உண்மைகளையும், சிந்தையையடக்கிச் சும்மா விருக்கின்ற யோகமுறைகளையும் நன்கு அறிந்திருந்தார்களென்பன தெற்றெனப் புலப்படும். மற்றைய நாடுகளில் இவ்வுண்மைகள் அறியப்பட்டிருந்தமைக்குச் சான்றுகள் காணப்படவில்லை. தமிழ்மக்களின் சமய அகவளர்ச்சி மிக உயர்நிலை பெற்றிருந்தமையினலேயே அவர்கள் புதிதாக வந்த ஆரிய மக்களின் சமயக்கொள்கைகளுக்கு உடம்படாராயினர். ஆரியருக்கும், தாசுக்கள் என அவர்களால் இழித்துக் கூறப்பட்ட தமிழர்களுக்குமிடையில் நேர்ந்தபோர்களுக்கு முக்கிய காரணம், தாசுக்கள் ஆரியர் தெய்வங்களை வழிபட மறுத்ததோடு அவர்கள் வேள்விகளையும் வெறுத்தமையேயாகும். இராவணன் ஆதியோர் வடநாட்டு முனிவர்கள் உஞற்றும் வேள்விகளுக்கு இடையூறாய் நின்று அவைகளை அழித்துவந்த வரலாறும் இராமாயணத்திற் கூறப்படுகின்றது.

ஆரியர், இந்தியாவை அடைந்தபோது உலகம் உயிர் கடவுள் என்னும் முப்பொருள் உண்மைகளை அறிந்திருக்கவில்லை. மறுபிறப்பைப் பற்றியே வேதங்கள் அறியா என்று முன் காட்டப்பட்டது. வேதமதம் தத்துவக்கொள்கை

1. தமிழர் சரித்திரம் பக். 19.

2. A nude three face god seated in a sort of Yoga pose wearing crescentlike head gear round this figure several figures are placed. It has been said this is a figure of Pasupathi. - Fr, Heras.

(Philosophy) இல்லாத மதம். ஆரியமக்கள் இந்தியநாட்டிற் குடியேறிய காலத்தில் ஆரியர் தமிழர் என்னும் இருகூட்டத்தினரும் கலந்து ஒன்றுபட்டனர். அக்காலத்தில் பிராமணர் பிராமணரல்லாதார் ஆரியர் ஆரியரல்லாதார்களின் கலப்புத் திருமணங்களைக் கட்டுப்படுத்தும் சட்டங்கள் உண்டாயிருக்கவில்லை.[1] அக்காலத்தில் தமிழ்மக்களின் கொள்கைகள் பலவற்றை ஆரியமக்கள் பின்பற்றலாயினர். அவற்றுள் காட்டிற் சென்று தவஞ்செய்தலாகிய வழக்கு ஒன்று. காட்டிற் சென்று தவஞ்செய்தலைப்பற்றி இருக்கு வேதத்திற் காணப்படவில்லை என ஆர். சி. தத்தர் குறிப்பிட்டுள்ளார். இதனால் இவ்வழக்குத் தமிழர்களுடையதே என்று நன்கு துணிதும்.

"காமஞ் சான்ற கடைகோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே." (தொல்-கற்-51)

என்னும் தொல்காப்பியச் சூத்திரமும் இதனை வலியுறுத்தும்.

## உபநிடதங்கள்

உபநிடதங்களே தமிழர்களின் பண்டை மறைகள் என்பது முன் ஓரிடத்திற் கூறப்பட்டது. ஆரியப் பிராமணர்க

1. Though the people were divided into castes, there was no restriction with regard to marriage "when a woman has had ten former husbands, not Brahmans, if a Brahman takes her hand it is he alone who is her husband (A. V. Y. 17, 18) Brahmana women were not regarded as secrosant but could be restored to their husbands after being seduced (R. V. X 109-6) curses are levelled against people who shut up Brahmana's wife (A. V. 17, 12 - 18) thereby proving that it was not uncommon. - Life in ancient India - P. 42 - P. T. S. Iyengar.

* சிறந்தது பயிற்றல்—தவஞ்செய்தல்.

ளுட் சிலர் உண்மை ஞானங்களை அறியும் தாகம் உடையவர்களாய் இடங்கள்தோறும் அலைந்து திரிந்தனர். இவ்வாறு திரிந்த யாக்ஞவல்கியும் அவருடன் சென்ற மற்றைய பிராமணர்களும் விதேக நாட்டரசனாகிய சனகனைக் கண்டார்கள். யாக்ஞவல்கி சனகனிடத்தில் மாணாக்கனாக அமர்ந்து உண்மை ஞானத்தைப் பயின்றார். இதன்பின் பிராமணர், தாம் முன் னொருபோதும் அறிந்திராத உண்மை ஞானங்களை அரசமரபினரின் பாதங்களின்கீழ் மாணாக்கராயிருந்து பயின்றனர். அதன்பின்பே ஆரியருடைய மதம் தத்துவக் கொள்கையுடையதாக மாறிற்று. வின்ரணிச் [1] என்னும் அறிஞர் உபநிடதங்களைப்பற்றி ஆராய்ந்து கூறியிருபதின் சுருக்கம் பின்வருமாறு:

"உபநிடதஞானம் அரசர்களிடம் மாத்திரமன்று பெண்களிடமும் ஐயமான குலத்தவர்களிடையும் இருந்தது. ஆரியர்களுடைய நீதிநூல்கள், பிராமணன் மாத்திரம் ஆசிரியனாக அமர்ந்து மூவருக்கும் வேதங்களைக் கற்பிக்கலாம் என வற்புறுத்திக் கூறுகின்றன.[2] ஆனால் அரசரும் அரசர் குலத்தவர்களுமே உயர்ந்த ஞானத்தைப் பெற்றிருந்தனர் என்றும், அவர்களிடமிருந்தே பிராமணர் அவ்வறிவைப் பயின்றனரென்றும் உபநிடதங்கள் கூறுகின்றன. அரசர் அவ்வாறு

1. A History of Indian literature - M. Winteruitz.

2. The Arya Veda is too pure to be touched by a Sudra or a woman. A person of a Sudra or a woman of any Caste is not entitled either to learn or hear his Veda. Thus all women as well as Sudras are not previleged to obtain salvation. The Tamil religion on the other hand is the common property of all either Men or Women. Its essence is love of god and neighbour. - Siddhanta Depika Vol. IV P. 269.

In the Upanishads however we find not only Kings but also women and even people of dubious discent, taking active part in

அளித்த ஞானம் மறுபிறப்புத் தொடர்புடையது என்று கூறப்படுகின்றது. இஞ்ஞானம் பிராமணர் சிறிதும் அறி யாதது. உபநிடதமென்பதற்குக் கிட்ட இருப்பது என்று பொருள். ஆசிரியன்ஒருவனிடத்தில் சில மறைவானஉண்மை களைப் படித்தற்கு மாணுக்கனுயிருத்தல் என இதுபொருள் படும். அவ்வாறு கொடுக்கப்படும் ஞானம் மறை (இரக சியம்) எனப்பட்டது. உபநிடதங்கள், அம்மறையைத் தகுதி யில்லாதவர்களுக்கு அளித்தல் கூடாதென வற்புறுத்துகின் றன. இதற்குஎடுத்துக்காட்டு, இம்மறையைத் தந்தை தனது மூத்த புதல்வனுக்கு அல்லது உண்மையுள்ள மாணுக்கனுக்கு அளிக்கலாம்; இவ்வுலகம் முழுவதையும் பெறுவதாயிருந்தா லும் மற்றவர்களுக்கு அளித்தல் கூடாது. ஒருவன் ஆசிரிய னிடம் மாணுக்கனுக அமர்ந்து பலமுறை வருந்திக்கேட்ட போது இஞ்ஞானம் வெளியிடப்பட்டதென உபநிடதங் கூறு கின்றது.'' உபநிடத காலத்தை ஆராய்ச்சியாளர் பலவாறு கூறுவர்.[1] றனேட் என்பார் உபநிடதகாலம் கி. மு. 1200க் கும் கி. மு. 600க்கும் இடையில் எனக் கூறுவர். இதுகாறும் மறைவாக மறை என்னும் பெயருடன் நிலவிய தமிழர்களின்

---

the literary and philosophical aspirations of the highest knowledge. - The History of the Indian Literature p. 220.

யாக்ஞவல்கியுடன் வாதம்புரிந்தவர்களுள் ஒருவர் வச்சக்னு என்பவரின் புதல்வியாகிய கார்கி என்னும் பெண்பாலினர்.

In a word we may say that as we pass from the Vedas to Upanishads, we pass from prayer to philosophy from hymnology to reflections, from polytheism to monotheistic mysticism. - Constructive survey of Upanishadic Philosophy p. 3 - R. D. Ranade.

1. Upanishadic age to have been placed Rome where between 1200 B.C. and 600 B. C.-Constructive History of Upanishadic Philosophy p. 13 - R. E. Ranade.

உண்மை ஞானங்கள் அவ்வாரிய மக்கள் வாயிலாக உபநிட தம் என்னும் பெயருடன் வெளிவரலாயின. அக்காலத்தி லேயே சிவழிபாடு ஆரியருக்குள் தலைமை பெற்றிருந்தது. ஆரியரின் உருத்திரன் என்னும் கடவுளும் சிவனும் ஒருவ ராகக் கருதப்பட்டனர் [1].

உபநிடதங்கள் உயிர் உலகம் இறைவன் என்னும் முப் பொருள்களின் உண்மைகளை ஆராய்கின்றன; யோ கத்தைப்பற்றிக் கூறுகின்றன; ஓங்காரத்தை உச்சரிக்கும்படி வலியுறுத்துகின்றன; மாயை உள்பொருள் எனக் கொள் கின்றன. இவைகளிற் கூறப்படும் உண்மைகள் எல்லாக் காலத்துக்கும் எல்லா மக்களுக்கும் பொதுவானவை. [2] உப நிடதஞானம் ஞாயத்துக்கு உட்பட்டது; வேதங்களுக்கு மாறானது. [3]

---

1. During the Brahmana period we notice the beginning of the regular worship of Siva......in this period Sivan or Rudra gradually became to be one of the most important figures of the reformed Indo - Aryan Pantheon - Pre - historic ancient and Hindu India P. 43 - R. D. Banerji.

The worship of Siva or Mahadeva towards the close of this period......the new deity being identified with Rudra of the Vedic poets, the howling god of tempests, the father of the Maruts - The Philosophy of the Upanishads - P. 18. A. Edward Gough.

2. The Upanishads as a world scripture, that is to say, a scripture appealing to the lovers of religion and truth in all races and at all times without distinction. - Thirteen principal Upanishads translated. - Robert Ernest Home.

3. The Upanishad may be regarded as a work of thought and reason. Upanishads which stained first the knowledge as against the Brahmanical philosophy of works. -Critical Survey of Upanishadic Philosophy p.p. 4, 7.

உபநிடதங்களிற் கூறப்படும் பிரணவம் தமிழுக்கே உரியது. வடமொழியில் எ, ஒ என்னும் குறில்கள் இல்லை. எந்த மொழியில் எ, ஒ என்னும் குறில்கள் காணப்படுகின்றனவோ அம்மொழிக்கே ஓ, ஏ என்னும் நெடில்களும் உரியன. இம்முறையைக்கொண்டு, பந்தாக்கர், பாலி மொழியில் எ, ஒ என்னும் குறில்கள் காணப்படுகின்றமையின் மகதநாட்டில் தமிழ் வழங்கியதென்றும், எகர ஒகரங்கள் தமிழுக்கே உரியனவென்றும் காட்டியுள்ளார்.

## சாங்கியம்

உபநிடதங்களுக்குப்பின் தோன்றியது கபிலரின்சாங்கிய நூல். சாங்கிய மதக்கொள்கை 'சத்காரியவாதம்' எனவும் வழங்கும். இது மாயை உள் பொருளெனக்கூறுகின்றது; வினை, வினைப்பயன்களை வலியுறுத்துகின்றது. இது கடவுளைப்பற்றி யாதும் பேசவில்லை. ஆகவே இது நிரீச்சுரசாங்கியம் எனவும்படும். கபிலரின் நூற்கொள்கைகளுக்கு அடிப்படை உபநிடதங்கள். சாங்கியநூல் கி. மு. 760 வரையிற் செய்யப்பட்டதெனக் கருதப்படுகின்றது. கிரேக்க தத்துவ சாத்திரியாகிய பதகோரஸ் என்பவர் இந்தியாவுக்கு வந்து கபிலரின் சாங்கிய நூற்கருத்துக்களைப் பயின்று அவற்றைக்கிரீசில் வெளியிட்டார் எனக் கருதப்படுகின்றது. 1

---

1. பதகோரஸ் சாமோஸ் (Samos) என்னும் இடத்தில் கி. மு. 570-ல் பிறந்தார். இவர் பல புதுமைகளைச்செய்து எகிப்துக்குப் பிரயாணஞ் செய்தார். கோல்புருக் என்பார் (Colebrooke) அவர் இந்தியாவுக்குச் சென்று கபிலரின் தத்துவக் கொள்கைகளைப் பயின்று அவைகளைக் கிரேக்க மக்களுக்கு வெளியிட்டார் என்றும் கூறுவர்— Rama and Homer - P. 220 Arthur Lillie.

புராணங்களிலே கபிலரின் வேள்விக் குதிரையைப் பிடித்துக் கட்டிய கபிலர் ஒருவர் காணப்படுகின்றார். அவர் தமிழ் மரபினர் என ஒல்ட்காம் என்னும் ஆசிரியர் ஆராய்ந்து கூறியுள்ளார்.[1] கௌதமபுத்தர் கபிலர் மரபில் வந்தவரென்றும் அவர் தமிழ் மரபினரென்றும் கருதப்படுகின்றனர்.[2] சாங்கிய நூல், ஒவ்வொன்றையும் நியாய வாயிலாக ஆராய்கின்றது. சாங்கியம் வேத மார்க்கத்துக்கு முற்றும் முரண்பட்டது.

## புத்தம்

கபிலருக்குப்பின் தோன்றியது புத்தமதக்கொள்கை. இம் மதக்கொள்கைக்கு அடிப்படை உபநிடதங்களும் சாங்கிய நூலும். புத்தமதம் மாயையை இல்பொருளெனக் கூறும். ஆகவே அம்மதக் கொள்கை 'சூனியவாதம்' எனப்படும். சாங்கியம், புத்தம் முதலிய மதங்கள், உபநிடதக் கொள்கைகள் எவ்வாறு சிறிது சிறிதாக மாறப்பட்டு வெவ்வேறு மதக் கொள்கைகளாக மாறியுள்ளன என்று காண்பதற்கு எடுத்துக் காட்டுகளாகும். புத்தமதம் வேத மதத்துக்கு மாறானது. புத்தரின் ஞானம் தமிழர் ஞானத்தை அடிப்படை

---

1. In Patala reigned the Royal Rishi Kapila Vasudeva or Kapila Nagu who destroyed the sons of Sagara. Ishkuvahu, too, from so many solar Dynasties claim descent was a Rajah of Patala.—The sun and the serpent - P. 56 - C. F. Oldham.

2. So even Bhag says (XI, 2-3) Satyavirata, king of Dravida became Vaivasvats's son Manu and his sons were Ikshvaku and other kings-Ancient Indian Historical traditions-F.E. Pargiter.

[Sakya Buddha was a solar race, and descended from Ikshvaku_ sun and the serpent.] Kapilavastu was an oxford of learned Dravidians several centuries before Aryans settled in Mid-gangetic states before the Rishi Kapila about 700 - 600 B.C.-Short Studies on the science of comparative religions P. XII.

யாகக் கொண்டதென மேல்நாட்டு ஆசிரியர் தாமும் எளிதி லறிந்து கூறியுள்ளார்கள். 1 ஆல்டன்பேக் என்னும் ஆசிரி யர் உபநிடதங்கள் புத்தருக்கு எவ்வாறு வழிகாட்டிகளா யிருந்தனவென்பதை நன்கு ஆராய்ந்து காட்டியுள்ளார். 2

## யோகம்

குரு மாணுக்க முறையில் நெடுங்காலம் வந்தனவும் உப நிடதங்களிற் கூறப்பட்டனவுமாகிய யோகநூற் பொருள் களைப் பதஞ்சலி முனிவர் திரட்டி (கி. மு. 150) யோக சூத் திரங்களாகச் செய்தார். 3 யோகம் என்பது மனத்தை ஓரி டத்தில் நிறுத்திச் செய்யப்படும் தியானம். யோகநூலில் மனத்தை ஓரிடத்தில் நிறுத்துதற்குரிய பயிற்சிகளும்,

---

1. From the cradle of Goutama about Kapilavastu the early literary centre of India came most of the scriptures of Indo-Aryans which if prior to Sakya Muni must, like the philosophic schools founded by the sage Kapila have had their origin in the brain of Dravidians or Dramilian Pandits like learned Dramila Chanakya to whom was dedicated 350 years after his death, the beautiful sacred cave temple of Kanchery. - Short studies in the science of comparative religions P. 12. [Chanakya the Damila of Jurashtra, who is described in the Mahavanso as a Malabari. His name appears in two inscriptions of the fourth century B. C. in the Kancheri caves to which he retired in old age - Ibid P. 10.]

2. Oldenburgh has indeed fairly worked out both in his earliest volumes on Buddha how the Upanishads prepared the way for Buddhistic thought and derives precise for having attempted a hitherto unattempted work. - Constructive survey of Upanishadic Philosophy P. 4.

3. The yoga therefore under that name was recognised anticidentally to Pathanjali and is not to be regarded as the invention of his. - The uphoisms of the yoga Philosophy of Pathanjali with illustrative extracts form the Commentary by Boja Rajah.

யோகத்தினால் அடையும் பேறும் நன்கு விளக்கப்படுகின்றன. யோகநூலும் நியாய முறையாக உண்மைகளை ஆராய்ந்து, யோகத்தின் முடிவு, கடவுளை அடைதல் எனக் கூறுகின்றது. ஆதலின் இது 'ஈசுவர சாங்கியம்' எனப்படும்.[1] யோகநூல் பிரணவத்தை உச்சரிக்கவேண்டும் என வற்புறுத்துகின்றது. மனம் சார்ந்ததன் தன்மையை அடைகின்றதென்று கூறுகின்றது;[2] பற்றை அறுக்கவேண்டுமென மொழிகின்றது; அப்பற்றை அறுப்பதற்குக் கடவுளைப் பற்றவேண்டுமென நவில்கின்றது. கடவுள் பத்தி, யோகங்களிற் சிறந்ததென அறைகின்றது;[3] அகத்தூய்மை புறத்தூய்மைகளைப் பற்றிப் பேசுகின்றது. நல்லவர் இணக்கத்தைப்பற்றிச் சாற்றுகின்றது; மனம் உயிரின் அகக் கருவியாதலைப்பற்றிப் புகல்கின்றது. சாங்கியநூலும் யோகநூலும் உயிர்கள்பல எனக் கொள்கின்றன.[4] இவ்வகை யோகவழிகளை எல்லாம் தமிழ்மக்கள் மிக மிக முற்பட்ட காலத்திலேயே அறிந்திருந்தார்கள் என்பது மொகஞ்சொதரோவிற் காணப்பட்ட திருவுருவங்களால்நன்கு தெளிவுறுகின்றதென்பது முன்னோரிடத்திற் கூறப்பட்டது.

---

1. In admitting the existence of a divine being in which the good qualities belonging to man reach their limit, the yoga hence named the *Seswara* Sankya differs from the Sankya of Kapila what is known as *nirèswara*-I bid.

2. The change of the mind into the likeness of what is Pondered.—Ibid - "யாதொன்று பற்றி னதனியல் பாய்நின்று பாசமறும் பளிங்கனையத் தீ."

3. Perfection of meditation Comes from possessing devotion to the lord. - Ibid.

4. Where Sankya argues the objections that is souls were but one, then all will would be happy when one is happy, all would die when one died, and so on, which is contrary to experience. —Ibid. P. 63.

## யோகமும் ஆலய வழிபாடும்

யோகப் பழக்கத்துக்கு ஒரு வடிவை மனத்தில் நிறுத்துதல் வேண்டும். அல்லாவிடின் மனம் ஓர் இடத்தில் நில்லாது. ஆகவே குணங்குறியில்லாத கடவுளை ஒரு வடிவம் கொடுத்து நினைக்க வேண்டியதாயிற்று. அதற்கு ஆலயங்களிலுள்ள திருவுருவங்கள் பயனளித்தன. சமயதீக்கை, மந்திரங்களை நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்று உச்சரித்தல் முதலியன, அவ்வாறு செய்யுமிடத்து மணிகளை எண்ணுதல் மூச்சுப் பயிற்சி புரிதல் போல்வன யோகப் பயிற்சியின் முதற்படிகளாகும். இப்பொழுது, ஆலயபூசை அரசனுக்குச் செய்யும் வழிபாடுபோல் கருதப்படாது, யோகநிலையிற் கைவந்தார் ஒருவர் இவ்வுலகமக்கள் எல்லோரும் தீவினைகளினின்றும் நீங்கி நல்வழிப்பட வேண்டுமென நினைந்து கடவுளை நினைப்பது எனக் கருதப்படுவதாயிற்று. இது பரார்த்தபூசை (பிறர் பொருட்டுச் செய்யும் பூசை) எனப் படலாயிற்று.

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே"

என்றவாறு வேண்டுதல் பரார்த்த பூசைக்கு எடுத்துக்காட்டாகும். யோகநிலை கைவரப்பெறாத பார்ப்பானையே திருமூலர் "பேர்கொண்ட பார்ப்பான்" எனக் கூறினர் ஆதல் காண்க.

யோகம் கைவந்த பெரியோர் நினைப்பன நினைத்தபடி ஆகும் என மக்கள் நம்பினார்கள்.[1] சித்தர்கள் எனப்பட்டோர் யோகத்தின் மகிமையினால் பல புதுமைகளைச் செய்தோர்களேயாவர். எல்லாச் சமயத்தவர்களும் தத்தம் சமய முதல்வர்கள் புதுமைகளை விளைத்தார்களெனக் கூறுகின்றனர். இறைவனிடத்தே, உள்ளம் படிந்து நிற்கும் உயிர்களிடத்து இறைவனின் இறைமைக் குணங்கள் சில உண்டாவது இயல்பு எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறும். மருத்துவம் சோதிடம் போன்ற பெரிய உண்மைகள் யோகிகளால் தமது தெளிந்த உள்ளக் காட்சியிற் கண்டு கூறப்பட்டன வென்று நம்பப்படுகின்றன.

## திருமந்திரம்

தமிழ் மக்களிடையே வழங்கிய உண்மை அறிவுகள் எல்லாவற்றின் திரட்டாக வெளிவந்துள்ளது திருமூலர் அருளிய 'திருமந்திரம்' என்னும் நூல். இந்நூலிற் காணப்படும் அகச் சான்றுகளால் இதிற் கூறப்படும் பொருள்கள் தமிழ்மக்களிடையே வழங்கியவை என்பது தெளிவாகின்றது. பற்றறுத்தல், அன்பு கனிந்து இளகிய உள்ளத்தர் ஆதல் கடவுளிடத்தில் பத்திசெய்தல் போன்றனவே முத்திக்குவழி என இவர் கூறுவர். எல்லா ஞானங்களும் பத்தியில் அடக்கம்.

---

1. "......நின் றெண்டரோடு பயிறலிற்
பூண்டவவ் வேடங் காண்டொறுங் காண்டொறும்
நின்னிலை யென்னிடத் துன்னி யுன்னிப்
பன்னாள் நோக்கின ராதலி னன்னவர்
பாவனை முற்றிப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன்......"

எனக் குமரகுருபர அடிகள் கூறுதல் காண்க.

"என்பே விறகாக இறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்பொ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்பொன் மணியினை எய்தவொண் ணாதே"

"அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட்ட ஆய்வருந் துன்பம்
ஆசை விடவிட ஆனந்த மாமே" (திருமந்திரம்)

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" (குறள்)

திருமந்திரம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற் செய்யப்பட்ட தெனக் கருதப்படுகின்றது. சித்தர் நூல்களிலும் திருமந்திரத்திற் கூறப்படும் உண்மைகள் காணப்படுகின்றன.

## திருமுறைகள்

தமிழ்மக்களின் சமயக் கருத்துக்கள் திருமுறைகளிலும் ஆழ்வார் பாடல்களிலும் ததும்பிக் கிடக்கின்றன. தோத்திரங்களுடன் அவை மிடைந்து கிடத்தலின் அவை சாத்திரமாகப் பயன்படா. ஆயினும் சாத்திரங்களுக்கு மேற்கோள் அத் தோத்திரங்களே.

## சித்தாந்த நூல்கள்

பண்டுதொட்டுத் தமிழ் மக்களிடையே 'மறை' எனப் பெயர் பெற்றுவந்த சமய தத்துவக் கொள்கைகள் எல்லாவற்

றையும் தொகுத்து முறைப்படுத்திச் செய்யப்பட் டன வே சைவசித்தாந்த நூல்கள் பதினான்கும்.[1] "ஒரும் வே தாந்தமென் றுசியிற் பழுத்த-சாரங் கொண்ட சைவசித் தாந்தத் தேனமுது" (குமரகுருபரர்) வேதாந்தம்-உப நிடதம்.

## வீடு

தமிழ்மக்கள் வீடு எனக்கொண்டது மெய்யுணர்வினாற் பற்றற்றுத் திருவருட் பண்புறுதலேயாகும். "பரனை நினைந் திம்மூன்றும் விட்டது பேரின்பவீடு" (ஔவையார்). தொல் காப்பியத்திலும் வீடுபெற நிற்றல் துறவு எனக் கூறப்பட் டது. திருக்குறளில் நீத்தார் பெருமையும் இதனையே குறிக் கின்றது. சைவசமயத்தின் முடிவு, "அவனருளால் அவன் றுள் வணங்கி" அவனை அடைதல்.

"காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம் போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பின் அரன்கழற் செலுமே" (சி. போ. 10-சூ)

## சிவ வழிபாட்டின் தொன்மை

சிவ வழிபாடு அறியமுடியாத பழைமையுடையது. சிந்து வெளிப் புதைபொருள் ஆராய்ச்சி நிகழ்த்திய சேர்யோன்மார்

1. The Saiva Siddhanta system is the most elaborate, influential and most intrinsically valuable of all religions of India. It is peculiarly The South Indian and Tamil religion and must be studied by every one who hopes to understand the influence of the great South Indian people. Saivaism is the old prehistorical religion of South India, essentially existing from pre-Aryan times, and holds sway over the hearts of Tamil people. But this great attempt to solve the problems of god, and soul, humanity nature, evil suffering, and the unseen world, has never been expounded in English. Its text books exist in Tamil only.—Translation of Thiruvasagam - Dr. Pope.

சல் என்பார் சிவமதத்தின் பழைமை கற்காலத்துக்கும் அப்பாற் செல்கின்றதென்றும், இப்பொழுது உலகிற் காணப்படும் சமயங்கள் எல்லாவற்றுக்கும் அது முற்பட்டதென்றும் கூறியுள்ளார்.[1] பனேசி என்பார், "மொகஞ்சொதரோ அரப்பா என்னுமிடங்களிற் கிடைத்த, களிமண்ணாற் செய்யப்பட்ட உருவங்களும், கடவுள் வடிவங்களும் இலிங்கங்களும், நாம் இதுகாறும் எண்ணியதைவிடத் துர்க்கை சிவ வழிபாடுகள் மிகப் பழைமையுடையனவென்று அறிவிக்கின்றன" எனக் குறிப்பிட்டனர்.[2]

## பழைய சமய நூல்கள் வடமொழியில் எழுதப் பட்டமைக்குக் காரணம்

முன்னேரிடத்திற் கூறியாங்குத் தமிழ்மக்கள் வீட்டு நெறிக்குரிய உண்மை ஞானங்களைக் குருமாணாக்கர் முறையிற் பயின்றுவந்தனர். இவ்வுண்மைகளைத் தமிழர் வாயிலாக அறிந்த ஆரியமக்கள் சிலர் அவற்றை மற்றைய தம் குழுவினர்களுக்கு முணர்த்துவான் விழைந்து, அவைகளை அவர்கள் படித்து விளங்கக்கூடிய மொழியில் வெளியிட்டனர். வடக்கிலுள்ளவர்களின் மொழியைத் தெற்கிலுள்ளவர்களும் அறிந்

1. Among the many revelations that Mohenjo - Daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivaism has a history going back to the chalolithic age or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in the world. - Sir Jhon Marshall in his preface to Mohenjo-Daro and the Indus civilization - Vol. I P. VII.

2. Clay figures and images and phallic (Bactylic) stores suggest the Durga and Siva worship was of very much greater antiquity in India than has hitherto been supposed. - Prehistoric Ancient Hindu India - R. D. Banerji.

திருந்தனர். தெற்கிலுள்ளவர்கள் தம்மிடத்திலுள்ளனவும் வடக்கிலுள்ளவர்கள் நன்கு அறியாதனவுமாகிய உண்மைப் பொருள்களை அவர்கள் கண்டு வியக்குமாறும் நூல்கள் இயற்றினர். இது, இக்காலம், திருக்குறள், சிலப்பதிகாரம், தமிழர் நாகரிகம்போன்ற பொருள்களைத், தமிழ் அறியாத மேல் நாட்டு அறிஞரும் வடநாட்டு அறிஞரும் கண்டு வியக்குமாறு தமிழ் அறிஞர் ஆங்கிலமொழியில் வெளியிட்டு வருதல் போன்றதோர் வழக்கு. ஆங்கிலமொழியில் எழுதப்படும் நூல்கள் எல்லாம் ஆங்கிலமக்கள் எழுதியனவாகாதனபோல வடமொழியில் எழுதப்பட்ட நூல்கள் எல்லாம் வடவர் எழுதியனவாகா. வடமொழி வடக்கே உள்ளவர்களது என்று கருதப்படினும் தெற்கே உள்ளவர்களே அதனையும் நன்கு கற்று அம்மொழியில் அரிய நூல்கள் இயற்றி அதனையும் வளம்படுத்தினர். சாணக்கியர், இராமானுசர், சங்கரர், நீலகண்டர் போன்று, வடமொழியிற் சிறந்த நூல்கள்செய்து அம்மொழியை வளம்படுத்தியவர்கள் யாருமில்லை. கபிலரும் அவர் மரபில் வந்த சித்தார்த்த புத்தரும் தமிழர்களே என்பது முன்பு விளக்கப்பட்டது. பழைய கட்டிடக்கலை இருக்கின்றது; எந்தத் தேசத்திற் காணப்படும் பழைய கட்டிடங்களையும் நோக்கி, அவை இன்ன நாட்டுக் கட்டிடக்கலை அமைப்புள்ளன என, அந்நூல் அறிஞர் எளிதில் அறிந்து கூற வல்லுனராவர். அதனை ஒப்பவே எம்மொழியில் எழுதப்பட்டிருப்பினும் நூல்களின் பொருளையும் போக்கையும் கொண்டு அவை எவருக்குரியன என எளிதில் நிச்சயம் செய்யலாம். தமிழ்த் தெய்வங்களுக்கு ஐயர்மார் வடமொழியைச் சாற்றியே பூசை செய்கின்றார்கள் எனின், இது வடமொழியில் நம்பிக்கை வைத்த பிற்கால அரசர்களின் ஆணையால் உண்டான வழக்கு. "வல்லான் வகுத்ததே வாய்க்கால்"

அரசினர் தலையீட்டினால் பெரிய மாற்றங்கள் எளிதில் உண்டாகும். இதற்குச் சான்று தாழ்ந்தோரும் தாழ்த்தப்பட்டோரும் ஆலயங்களிற் புகுத்தப்படுவது ஒன்று; இந்தி கட்டாயக் கல்வியாக வந்தது மற்றொன்று.

## சமயச் சொற்கள்

சமயத் தொடர்பாகத் தமிழில் வழங்கும், ஆணவம், கன்மம், மாயை, பதி, பசு, பாசம்போன்ற சொற்களும் பிறவும் வடமொழிச் சொற்களெனப் பெரும்பாலும் கருதப்பட்டு வருகின்றன. தமிழ்மக்களில் ஒருசாரார் பழந்தமிழ் நூல்களில் ஆளப்பட்டுள்ள சொற்களை மாத்திரம் தூயதனித் தமிழ்ச் சொற்களாகக்கொண்டு ஏனையவைகளைப் பிறமொழிச் சொற்களென ஒதுக்கி வருகின்றனர். மேல்நாட்டு மொழிகளில் எழுதப்படும் நூல்களில் ஒவ்வொரு கலைக்கும் உரிய தனிச் சொற்கள் (கலைச்சொற்கள்) ஆளப்பட்டுள்ளன. இம்முறை எல்லா மொழியினருக்கும் பொது. யாப்பருங் கலவிருத்தியில், ஆடைநூல் அணிகலநூல் என, எத்தனையோ துறைகளைத் தனித்தனி விரித்துக் கூறும் பல நூல்கள் தமிழில் நிலவின என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. ஒவ்வோர் துறைகளையும் விளக்க எழுந்த தனி நூல்களில் அவ்வத்துறைகளுக்குரிய தமிழ்ச்சொற்கள் (கலைச்சொற்கள்) ஆளப்பட்டன என்று கூறுதல் கற்பனை எனல் சாலாது. பற்பல காரணச் செறிவால் பழந்தமிழ் இலக்கியங்கள், சில நீங்கலாக ஏனைய மாண்டொழிந்தன வென்பதும் கற்பனையன்று. இப்பொழுது பழந்தமிழ் நூல்களிற் காணப்படுவன பெரும்பாலன இலக்கியச் சொற்களே. இவ்விலக்கியச் சொற்களை மாத்திரம் பழந்தமிழ்ச் சொற்கள் எனக்கொண்டு அவையல்லாத பிறவற்றைப் பிறமொழிச் சொற்கள் என ஒதுக்கிவிடுதல்

நியாயமன்று. இன்றும்; ஓடஞ் செய்வோர், ஆடை நெய்வோர், சிற்பவேலை புரிவோர், பானை சட்டிவனைவோர் போன்று ஒவ்வொரு தொழில் புரிபவர்களிடையே அவ்வத்தொழில்களுக்குரியனவும் யாம் அறியாதனவுமாகிய பல தமிழ்ச்சொற்கள் வழங்குதலைக் காணலாம். யோவுடுபிறியில் (Jouveau Dubreuil) என்னும் பிரான்சியர் எழுதிய தென்னிந்திய கட்டிடக் கலை என்னும் நூலில் கட்டிட உறுப்புகளை உணர்த்தும் பல தமிழ்ச்சொற்கள் காணப்படுகின்றன. அவை நமக்குப் புதியனவாகத் தோன்றுகின்றன. ஒரு கலை எந்த மக்களிடத்தில், ஆதியிற் றோன்றி வளர்ச்சியடைகின்றதோ அம் மக்களின் மொழியில் அதற்குரிய கலைச்சொற்கள் பல தோன்றிவழங்கும். அக்கலை இன்னொரு நாட்டுக்குக் கொண்டு செல்லப்பட்டு அது அங்கு வளர்ச்சியடையுங்கால் அக் கலைச் சொற்கள் அயல் மொழிகளில் கருத்திற்கேற்ப மொழிபெயர்த்து அல்லது, அம்மொழிகளுக்கேற்ற உச்சரிப்பு முறையில் திரித்து வழங்கப்படுதல் இயல்பு. முற்காலத்து இந்தியாவினின்றும் எகிப்து, கிரீசு, பபிலோன், பலஸ்தின் முதலிய நாடுகளுக்குக் கொண்டு செல்லப்பட்ட குரங்கு, மயில், அரிசி, இஞ்சி, கறுவா, தந்தம், திப்பிலி, ஆடை முதலியவைகளின் பெயர்கள் அந்நாட்டு மொழிகளில் திரித்து வழங்கப்பட்டமையே[1] இதற்கு எடுத்துக்காட்டு ஆகும்.

ஆரியமக்கள் இந்தியாவுக்கு வெளியேயுள்ள நாடுகளினின்றும் வந்தோர். இவர்களது மொழியும் பழக்க வழக்கங்களும் கிரேக்க, உரோம, தியுதோனிய, சிலாவிய மக்களின் மொழிக்கும் பழக்க வழக்கங்களுக்கும் இனமுடையன. மக்கள் தம்மைச் சூழ்ந்துள்ள பிறமக்களின் சேர்க்கைக் கேற்பப்

1. கவ. துகிம், ஒறிசா இஞ்சிபெர், கபிறேன், இபிம், பிப்பிலி, சிந்து.

பழக்கவழக்கம், மொழி, குணம் ஆதியவற்றால் மாறுபடும் இயல்பினர்; "நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு-இனத்தியல்ப தாகு மறிவு" (குறள்). இந்து ஐரோப்பிய மக்களுக்குப் பொதுவாகிய சொற்களும் பழக்கவழக்கங்களும் பலவுண்டு. புதிதாக வந்த ஆரியமக்கள் புதிதாகக் கையாண்ட பழக்கவழக்கங்களையும் புதிய சொற்களையும் அறிந்து கொள்ளவேண்டுமானால் இந்து ஐரோப்பிய மக்களுக்கு மாத்திரம் பொதுவாயுள்ள அவைகளை இந்து ஆரிய மக்களிடையே காணப்படுவனவற்றிலிருந்து கழித்துப் பார்த்தல்வேண்டும். இந்து ஐரோப்பிய மக்களுக்குப் பொது அல்லாதனவெல்லாம் இந்திய ஆரியமக்களுக்கு, இந்திய பூர்வமக்களிடமிருந்து கிடைத்தனவே. ஆரிய மக்களுக்குள்ளவற்றை ஆரியருக்கு இல்லாதவற்றினின்று பிரித்தறிய வேண்டுமாயின் இம்முறையைக் கையாள வேண்டுமென ஆராய்ச்சி நுண்ணுணர்வு படைத்தார் நுவல்கின்றனர். 1

---

1. There are in all Indo-aryan languages, a considerable number of words which cannot apparently be identified in other Indo-European languages. This is specially the case in modern vernaculars and the old opinion was that such words had, generally speaking been borrowed from the language of the tribes which inhabited India before the Aryan invation. The steady progress of philological studies in later years has enabled us to trace an everincreasing portion of such words to Sanskrit, and many scholars now hold that there have hardly been any loan at all. It has however been overlooked that it is sufficient to show that a word is found in Sanskrit or in vedic dialects, in order to, prove that it belonged to the original language of the Aryan. The foreign element must reach into the oldest times, and it would be necessary to trace dubeous words not only in sanskrit, but also in other languages of the Indo-European family. That is exactly what philology has, in many Cases failed to do. There are, *i.g.* a number of verbal roots in sanskrit which do not occur in other

ஆரியர் முன் வாழ்ந்த நாடு மிக்க குளிர் உடையது. அவர்கள் புதிதாகவந்தடைந்த மத்திய வெப்பதட்ப நிலையுடையநாட்டில் தாம் முன் அறிந்திருந்த குளிர்தேசத் தாவரங்களையும் பறவைகளையும் விலங்குகளையும் பிறவற்றையும் காணமுடியாது. அவர்கள் இந்தியநாட்டை அடைந்தபின் தாம் புதிதாக அறிந்த பொருள்களுக்கு, ஆதிமக்களின் மொழிகளில் வழங்கிய பெயர்களையே இட்டு வழங்கினர்கள் என்பதில் ஒரு புதுமையும் இல்லை. இவ்வாறு கொல் (Kol) மொழியினின்றும் வேதமொழியிற்சென்று ஏறியுள்ள பல சொற்களைப் பிறிஸ்லுஸ்கி என்பார்; 'ஆரியருக்கும் தமிழருக்கும் முற்பட்ட இந்தியா' என்னும் நூலில் நன்கு ஆராய்ந்து காட்டியுள்ளார். கொண்டர், முண்டர் சாந்தால் எனப்படும் மக்கள் தமிழரின் பிரிவினரேயென்றும், அவர்கள் மொழியிலுள்ள சொற்கள் வழக்கு நின்றுபோன பழந்தமிழ்ச் சொற்களென்றும் ஆராய்ச்சியாளர் கண்டுள்ளார்கள். இதனை முண்டர் என்னும் தலைப்பின்கீழ் விளக்குதும். சத்தேசி என்பார் இருக்கு வேதத்திற் காணப்படும், அணு, அரணி, கபி, கருமாரா, காலம், கானம், நாஞ (பல) நீலம், புட்பம், பூசான, பல (பழம்), பிசம், மயூரம், இராத்திரி, உருவம் முதலிய பல தமிழ்ச்சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார். 1 தமிழ்ச் சொற்கள் வடமொழியிற் சென்றபோது, முத்தா (முத்தா) மீஞ

---

Indo-Euronean forms of speech. The same is the case with a considerable portion of vocabulary. There is how-ever every possibility for the supposition that at least a corsiderable portion of such words and bases has been borrowed from the Dravidian- Linguistic survey of India - vol. IV pp 278-9 Grierson. (1) At a time when characteristic Hindu idea did not develop among them, the Dravidian cults and Dravidian lunguage began to influence their religion and that speech - The Origin and Development of the Bengalı language.-P. 42-S. K. Chatterji.]

(மீன்) என்பனபோலச் சிறிது வேறுபாடுகளை அடைந்தன இவ்வாறு கலந்த பல சொற்கள் மேலும்மேலும் திரிந்து உருத்தெரியாவகை கரந்தனவாயினும், மொழி ஆராய்ச்சியில் அச் சொல்மூலங்கள் தமிழே என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்வகைச் சொன்மூலங்கள் பலவற்றை யாழ்ப்பாணம், வண. சுவாமி ஞானப் பிரகாசர் வெளியிட்டுவரும் தமிழ் ஒப்பியல் அகராதியிற் காணலாகும்.

ஐரோப்பிய ஆரியர் இந்து ஆரியர்களின் சமயங்கள் ஒரே வகையினவல்ல. இப்போதைய அல்லது வேதகால ஆரிய மதத்திலிருந்து இந்து ஐரோப்பியருக்குப் பொதுவான சமயக் கொள்கைகளைக் கழித்துப் பார்ப்பின் எஞ்சி நிற்பன தமிழர்களுடையனவே. இம்முறையைக்கொண்டு வேதகாலத்திலேயே தமிழர் சமயக்கொள்கைகள் ஆரியமதத்தைத் தன் வண்ணமாகத் திரிக்கத்தலைப்பட்டு விட்டனவென்பது தெளிதல்கூடும். மொகஞ்சொதரோ காலத்தில் தமிழருக்கு ஆலயங்களும் ஆலயக் கிரியைகளும் இருந்தன. ஆலயம்கட்டும் விதிகளையும் ஆலய வழிபாட்டையும் பற்றிக் (கிரியைகள்) கூறும் நூல்கள் ஆகமம் எனப்பட்டன. வேதங்களுள் ஆகமக் கொள்கைகள் (கிரியை முறைகள்) கலந்துள்ளனவென்று ஆராய்ச்சியாளர் கண்டுள்ளார்கள். ஆகமக் கொள்கைகள் வேதங்களில் முகிழ்த்து ஆரணியகங்கள் காலத்தில் அரும்பி மொட்டாகிப் பிராமண காலத்தில் முறுக்கவிழலாயின. 1 பிராமணக் கிரியைகள் ஆகமங்களைப் பின்பற்றினவையே. ஆரணியகங்கள் காலத்து ஆகமங்களைப்பற்றிய புகழ் இருந்

---

1. The living Hindu religions of to-day from Cape Comorin to the remote corners of Tibet is essentially Tantric. Even the few genuine Vedic rites that are preserved and are supposed to be derived straight from the Vedas *e.g.* Samdhya, have been

தது.[1] தமிழர் உள்ளத்திற்ரேன்றிமலர்ந்த ஆகமக்கொள்கை கள், உபநிடத ஞானங்கள் என்பனவற்ருேடு தொடர்புடைய தமிழ்ச்சொற்கள் இருந்தனவென்பது நன்கு உய்த்தறிதும். 'பண்டை இந்தியாவில் மக்கள் வாழ்க்கை' என்னும் நூல் எழுதிய பி. தி. சீனிவாச ஐயங்கார் அவர்கள், "தமிழர் களின் தொழில், கலை தொடர்பாக வழங்கும் சொற்கள் எல் லாம், தமிழ், சமக்கிருதத்தினின்று இரவல் பெற்றனவல்ல. இவ்வாராய்ச்சி நன்ருக ஆராயப்பட்டு முடிவு பெறவில்லை, ஆராய்ச்சியில் இது உண்மையாக முடிதல் கூடுமானது. கலைத் தொடர்பாக வடமொழியில் வழங்கும் சொற்கள் திராவிட மொழியினின்று கடன்பெற்றவை என்று திரும்பலாம்"[2] எனக் கூறியுள்ளார்.

---

modified by the addition of Tantric practices - Outline on Philosophy - P. 130 - P. T. S. Aiyengar.

We might see that it would be more correct to describe Indian religion as Dravidian religion stimulated and modified by the ideas of Aryan invaders. For the great deities of Hinduism Siva, Krishna, Rama, Durga and some of its most essential doctrines such as metempsychosis and divine incarnations are either totally unknown to the Veda or obscurely adumbrated in it. The chief characteristics of mature Indian religion are characteristics of an area not of a race, and they are not the characteristics of religion of Persia, Greece or other Aryan lands-Hinduism and Buddhism - p. XV - Sir charles Elliot.

1. The antiquity of the Agamas goes back to the period of Aranyaka based on the earliest references to the Agamic literature on the Maitre upanishad. - History and the Philosophy of Lingayat Religion p. 303 - M. R. Sakhare. M. A. T. D.

2. The Dravidian names of things and operations connected with all these arts of peace are native and not foreign (i.e., borrowed from Sanskrit). The question has not yet been investigated, but on enquiry it will most probably turn out that many Sanskrit words connected with these arts were borrowed from the Dravidian. - Life in Ancient India - P. T. S. Iyengar.

The language of the Rig Veda is as yet purely Aryan or Indo-European in its form, structure and spirit, but its phonetics

திருமூலர் அருளிய திருமந்திரத்தில் சமயத்தொடர்பான சொற்கள் நிரம்பக் காணப்படுகின்றன. தாம் கூறும் ஞானங்கள் இத்தமிழ் உலகில் முன்னமே உள்ளன என்பதைத் "தமிழ்மண் டலமைந்தும் தாவிய ஞானம்" "செந்தமி ழாதி, தெளிந்து வழிபடு-நந்தியிதனை நவமுரைத்தானே" எனப்பலவிடங்களிற் குறிப்பிட்டுள்ளார். திருமூலர் நூலில் வேதமென வருவது ஆரியமக்களின் பாடல்களெனத் தெரியவில்லை. வேதம் சனகாதி முனிவருக்கு இறைவனாற் கல்லால நீழலின் கீழிருந்து அறிவுறுத்தப் பட்டதென்பது, பண்டு தொட்டுள்ள தமிழ்மக்களின் ஐதீகம். இறைவன் மௌனமா யிருந்தே வேதத்தை அறிவுறுத்தார் என்பதனால் தமிழர் கூறும் மறை, பாடல்களும் பாடற் றொகுப்புகளுமன்று; தாயுமான அடிகளுக்கு மௌனதேசிகர் அருளியதுபோன்ற உபதேசம். தமிழரின் பண்டைச் சமயஞானங்களைக் கூறும் திருமந்திரத்தில் வந்துள்ள சமயச்சொற்கள் தமிழ் எனக் கொள்ளலாமெனத் தெரிகின்றது. சைவசித்தாந்தமென்பது தமிழரின் சொந்த உடைமை. சித்தாந்தப்பொருள்களை உணர்த்த வழங்கும் சொற்கள் ஆராய்ச்சியின் றிப் பிறமொழிச் சொற்களென விலக்கற்பாலனவல்ல. தமிழ்ச்சொற்கள் வடமொழியிற் றிரித்து வழங்கப்பட்டு, அவை மறுபடியும் தமிழில் வேறு உருவத்துடன் புகுந்திருத்தல்கூடும். இதற்கு உதாரணம் சென்னையிலுள்ள அம்பட்டன் பாலமே. ஆதியில் ஹமில்டன் பாலமெனப்பட்ட இப்பாலம் உச்சரிப்போராது சோர்வி

---

is already affected by the Dravidian and it has already begun to borrow words from Dravidian and Kol. Among words of probable Dravida origin in the Rig, Veda, the following may be noted- *anu*-particle; *arani*-rubbing wood for fire; *kapi*-monkey; *Karmara*-smith; *Kala*-time, *Kunda*-Hole; *Gana*-Band; *nana*-several; *nila*-blue; *pushpa* - flower; *Pujana* - worship ; *phala* - fruit; *Bija* - seed; Mayura-peafoul; *ratri* - night; *rupa* - form - Ibid P. 42.

ளல் அம்பட்டன் பாலமாக நிலவுகின்றது, ஆங்கிலமொழியில் அது "பார்பேர்ஸ் பிரிட்ஜ்" என வழங்கும். "ஹமில்டன்" "பார்பர்" (அப்பட்டன்) ஆனதுபோலப் பல தமிழ்ச் சொற்கள் வடமொழியிற் புகுந்து தமது உருவத்தை மாற்றிக்கொண்டு மீண்டும் தமிழுக்கு வந்திருக்கின்றன என்று யாம் கருதுகின்றோம்.

"ஆரியமக்கள் இந்தியநாட்டை அடைவதன்முன் தமிழருக்கு, நாகரிகமில்லை, சமயமில்லை, கலைகளில்லை. ஆரியர் வந்தபின்புதான் தமிழர் ஆரியரைப் பார்த்து மெல்லமெல்ல நாகரிகமடைந்து மிருக நிலையினின்று மேல்நோக்கி வந்தார்கள்" என்னும் பொல்லாத கொள்கை பழைய வரலாற்றாசிரியரிடத்திற் குடிகொண்டிருந்தமையால் அவர்கள் தமிழர்களிடத்துக் காணப்படும் உயர்வுகளெல்லாம் ஆரியமக்களின் சேர்க்கையால் நேர்ந்தனவென்று குருட்டுத்தனமாக குறிப்பிட்டனர். சேர்யோன் மார்சல் என்பவரே (மொகஞ்சொதரோ அழிபாட்டு ஆராய்ச்சிக்கு) ஒரு கணத்துக்குமுன் தமிழர்கள் ஒரு காலத்தில் நாகரிகமடைந்திருந்தார்களென்று இவ்வுலகம் அறியவில்லை" என வியப்புற்றுக் கூறியுள்ளார். 1

வடஇந்திய மக்கள் தனி ஆரியரே என்று கருதிவிடுதல் கூடாது. அவர்களிடையே நெருங்கிய திராவிடக் கலப்பு உண்டு. இதனால் அவர்களின் மொழியும் பழக்கவழக்கங்களும் மாறுபட்டன 2.

---

1. Never for a moment, it was supposed that five thousand years ago, before ever the Aryans were heard of, the Punjab and Sind, if not other parts of India as well were, enjoying an advanced and singularly uniform civilization of their own, clearly akin, but in some respects even superior to that of contemporary Mesopotamia and Egypt. - Sir John Marshall.

2. The Aryan population of north India is not therefore a pure race, but contains among others a strong Dravidian element. - Linguistic Survey of India Vol. IV, P. 278.

"As for the causes of the changes that may be styled Prakritic economy of effort, progressive refinement, specially

# மொகஞ்சொதரோத் தமிழரின் சமயம்

ஹெரஸ்பாதிரியார் மொகஞ்சொதரோவிற் காணப்பட்ட ஆயிரத்தெண்ணூறு பட்டையங்களை நன்கு ஆராய்ந்தும், அவைகளில் எழுதப்பட்டவற்றை ஒலிமுறையில் வாசித்தும் அறிந்த உண்மைகள் சிலவற்றைமாதவெளியீடுகள் வாயிலாகப் புலப்படுத்தியுள்ளார். அவற்றின் சுருக்கமோ விரிவோ இதுகாறும் தமிழில் வெளிவந்தில. பம்பாய்ப் பல்கலைக்கழக வெளியீட்டில் (யூலாய்-1936) அவர் வெளியிட்டுள்ள கட்டுரை ஒன்றைச் சுருக்கி ஈண்டுத் தருகின்றோம்.

ஒரு பட்டையத்தில் "இறுவன் கொம் மின்னிர்" எனப் பொறிக்கப்பட்டிருக்கின்றது. (கடவுளின்) கொம்புவாத்திய மூதும் மீனவர் என்பது இதன்பொருள். இன்னொரு பட்டையத்தில் "கோயில் எல்லாக் கடவுள் ஆண்" எனக் காணப்படுகின்றது. ஆலயத்திலுள்ள எல்லாக் கடவுளுக்கும் தலைவர் என்பது இதன்பொருள்.

இன்னொரு பட்டையத்தில் நாலூரியிருக்கும் கடவுள் "விடுகண்" எனக் காணப்படுகின்றது. விடுகண் என்பது திறந்தகண். கடவுள் இமையாதவர் ("இமையா நாட்டம்" உடையவர்) இக்காலத் தமிழர் ஐதீகத்தோடு இது ஒத்துள்ளது. கடவுள் மக்களுக்கு எல்லா உதவியும் அளிப்பவர் எனவும் அக்காலத்தவர் நம்பினர். இது, "இது உதவு மின் அடு ஆண்" எனப் பொறிக்கப்பட்ட பட்டையத்தால் விளங்குகின்றது. (கடவுள்) உதவி செய்கின்ற மீனவரின் கடவுள் என்பது இதன்பொருள்.

---

in courts and cities, softening influence of a semitropical climate, influence of speech and habits of Non-Aryan peoples who adopted the Aryan speech all these have been at work. - Introduction to Prakrit: Prof Woolner.

ஒரு முத்திரையில் மூன்று முகமும் யோகத்தில் வீற்றிருக்கும் கோலமுமுடைய ஒருவடிவம் காணப்படுகின்றது. இவ்வடிவைச் சுற்றிப் பல விலங்குகள் இருக்கின்றன. இது, கடவுள் பசுபதி என்னும் கருத்தை விளக்க அமைக்கப்பட்ட வடிவம் எனக் கருதப்படுகின்றது. பல தலக் குறிகளை (Totem) யுடைய நாட்டுமக்கள் எல்லாரும் வழிபடும் கடவுள் என்பதை விளக்க இது கற்சிற்பியால் வெட்டப்பட்டதாகலாம்.

ஓரிடத்தில் கடவுளின் பெயராக எண்மை என்னும் சொற் காணப்படுகின்றது. இன்னொரு முத்திரை கடவுள் எட்டாக இருக்கிறார் எனக் கூறுகின்றது. கடவுள் மீன் வடிவில் நாட்டில் பல பகுதிகளில் வழிபடப்பட்டார். தலையிலே சூலம் உடைய கடவுள் வடிவங்கள் முத்திரைகளிற் காணப்படுகின்றன. கடவுள் மூன்று கண்ணுடையவரென்று முத்திரைகள் தெளிவாகக் கூறுகின்றன. ஒவ்வொரு கண்ணும் தனித்தனி வழிபடப்பட்டது. பட்டையங்களில் மூன்றுகண் என்பது "மூன்கண்" எனக் கூறப்பட்டுள்ளது. மூன்றுகண்ணுடைய பெரியமீன் என ஒரு பட்டையத்திற் காணப்படுகின்றது. தாய்க்கடவுள் மீன்கண்ணி எனப்படுகின்றார். மீன்கண்ணியே மீனாட்சி என இக்காலத்து மருவி வழங்குகின்றதுபோலும்.

விடுகண், எண்மை, ஆண், கடவுள், பேர்ஆண், தாண்டவன் என்பன கடவுளின் பெயர்களாக மொகஞ்சொதரோ மக்களால் ஆளப்பட்டன. நாலு மரங்களின் இடையிலுள்ள தாண்டவன் என ஒரு பட்டையங் கூறுகின்றது.

மொகஞ்சொதரோ மக்கள் இலிங்கத்தை வழிபட்டார்கள் என்பது ஐயமின்றி விளங்குகின்றது. மொகஞ்சொதரோ

அரப்பா என்னுமிடங்களில் இவ்வகைக் கற்கள் பல கண்டெடுக்கப்பட்டன. மீனவர் இவ்வழிபாட்டை ஆரம்பத்தில் எதிர்த்தார்களெனத் தெரிகின்றது. மீனவர் பிற்காலத்தில் மச்சயர் எனப்பட்டனர். இலிங்கங்களாகிய கடவுளருக்கு வீடுகள் முதலிய மானியங்கள் விடப்பட்டிருந்தன.

சுமேரிய மக்களின் மும்மூர்த்திகள் ஆண் அம்மா என்லில் என்பன தமிழரின் மும்மூர்த்திகள் ஆண், அம்மன், முருகன். அம்மன் மீன்கண்ணி எனப் பட்டையங்களிற் கூறப்பட்டுள்ளார். பாகம் பெண்ணுயுள்ள வடிவம் (அர்த்தநாரீசுர வடிவம்) காணப்படுகின்றது. இவ்வடிவம் சுமேரியாவிலுமுண்டு. கழனிகளின் கடவுள், இடிக்கடவுள், சாக்கடவுள் (யமன்), மீன் கடவுள் என்பன அக்கால மக்களால் வழிபடப்பட்டன. சூலங்கள் ஆலயங்களிலும் வீடுகளிலும் வைத்து வழிபடப்பட்டன ஒரு பட்டையத்தில் பாம்பு மூன்று கண்ணுடையதாகக் கூறப்படுகின்றது. சூலத்துக்குப் பதில் கோடரியும் நட்டு வழிபடப்பட்டது.

சில பட்டையங்களில் மக்கள் கடவுளின் மூன்று கண்களேயும் தியானித்தார்கள் எனக் கூறப்படுகின்றது. புனிதமுடைய கடவுள் திரு உருவங்கள்மீது தண்ணீர் அல்லது பால் தெளிக்கப்பட்டது. (அவ்வழக்கு இன்றும் காணப்படுகிறது). துதிபாடுதல் கடவுளின் பெயரை உச்சரித்தல் (செபித்தல்) நேர்த்திக்கடன் செய்தல்போன்ற வணக்கங்களும் இருந்தன. அரசன் உழவன் எனப்பட்டான். அரசனே ஆலயங்களில் ஐயராகவிருந்தான்.

விருந்தே அக்கால விழாவாகத் தெரிகிறது. (பொங்கல், குருபூஜை, சங்காபிடேகம், விழாக்கள் என்பவைகளில் இன்றும் மக்களுக்கு உணவு அளிக்கப்படுகின்றது.) ஒவ்

வொரு கிராமத்திலும் வைத்து வழிபடப்பட்ட சூலம் அல்லது சூலத்தைத்தலையிலுடைய கடவுள் அடுத்த கிராமத்துக்குக் கொண்டுபோகப்பட்டது. அக்காலம் பெரிய விழாக்கள் கொண்டாடப்பட்டன. நகரத்தில் வீதிகள் சந்திக்குமிடத்தில் ஆலயங்கள் கட்டப்பட்டன. தென்னந்தோப்புகளின் மத்தியில் இலிங்கங்கள் வைத்து வழிபடப்பட்டன. வீடுகளிலும் சிறிய கோயில்கள் இருந்தன.

இறந்தவர்களைச் சுடுதலும் புதைத்தலும் அக்கால வழக்கு. இறந்தபின் நியாயத் தீர்ப்பு நடப்பதாக மக்கள் நம்பினர்கள். ஞாயத்தீர்ப்பு என்பதற்குத் "தீர்ப்பு" என்னும் சொல் முத்திரைகளில் ஆளப்பட்டிருத்தல் நோக்கத்தக்கது.

## இயல்—அ

## இந்தியாவும் மேற்கு உலகமும்

நோவா பேழை கட்டுதற்கு முன்பு எகிப்தியர் தமிழ் நாட்டுக்கு மரக்கலங்களிற் பயணஞ்செய்த வரலாறு அவர்களின் ஓவிய எழுத்து நூல்களிற் காணப்படுகின்றது. பண்டு நாட்டுக்குப் பயணஞ்செய்த கன்னு என்னும் மாலுமி கூறியிருப்பதன் விபரம் வருமாறு: "நான் சேபா என்னும் துறைமுகத்தை அடைந்தேன். யான் கொண்டுவரவேண்டிய பண்டங்கள் எல்லாம் கப்பலில் ஏற்றப்பட்டன. யான் எருதுகளையும் பசுக்களையும் ஆடுகளையும் பலி கொடுத்தேன். யான் பண்டு என்னும் பரிசுத்த நாட்டிலிருந்து அரசனுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களையும் கொண்டுவந்தேன்."

கி. மு. 1600-ல் பண்டு தேசத்துக்குச் சென்ற இன்னெரு பயணத்தின் முழு விபரமும் ஓவிய எழுத்து நூல்க




பாதலத்தில் தொடங்கி மெம்பிஸில் முடிவடையுங் கோடு மொகஞ்சொதரோ காலத்துக்கு முன் தொடங்கி இருந்த வணிகப் பெருந் தரைப் பாதையைக் குறிப்பது. முசிரியில் தொடங்கி உரோமையில் முடிவடையும் பாதை உரோமர் காலத்திய வணிகக் கடல் வழி

—பக்கம் 214

ளிற் காணப்படுகின்றது. அப்பொழுது இஸ்ரவேலர் எகிப்தில் மறியற்படுத்தப்பட்டிருந்தார்கள். அதன் விபரம் வருமாறு. "பதினேரு கப்பல்களில் பண்டுதேசத்தின் வியப்பு மிக்க பொருள்கள் ஏற்றப்பட்டன. அவை விலேஉயர்ந்தமரங்கள் குங்குலியம்போன்ற மணப்பொருள்கள், மணமரங்கள், அமு என்னும் நாட்டிற் கிடைக்கும் பொன்னழுத்திய யானைத்தந்தம், கண்ணுக்குத் தீட்டும் மை, நாய்த்தலைக்குரங்கு, வேட்டைநாய், புலித்தோல், அந்நாட்டு மக்கள் குழந்தைகள் என்பன."

எகிப்திய மொழியில் குரங்கையும் யானைத் தந்தத்தையும் குறிக்க கவு, எப் என்னும் சொற்கள் வழங்கின. இவை முறையே கவி இபம் என்னும் சொற்களின் திரிபு. 1

வரலாற்றுக் காலத்திற்கு முன் தொட்டு இந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்குமிடையில் மூன்று வணிகப் பெரும் பாதைகள் இருந்தன. இவற்றுள் மிக இலகுவானது சிந்து நதி முகத்துவாரத்திலிருந்து அராபியக் குடாக்கடல் வழியாக யூபிராதஸ் முகத்துவாரத்தை அடையும் கடற்பாதை. இன்னென்று பாரசிகத்தினூடாகத் தரைவழியே செல்வது. செங்கடல் வழியாகச் செல்வது மற்றென்று.

சிந்துநதி முகத்துவாரத்துக்கும் யூபிராதஸ் பள்ளத்தாக்குகளுக்கும் இடையிலுள்ள வாணிகம் மிகத்தொன்மை

---

1. The Egyptian word *eb* for the elephant must however, also be compared with the Hebrew Habim. It is curious that the ape is called *Kafi* in Egyptian *Kapi* in Sanskrit, *Kuf* in Hebrew and *Cepus* in Latin the Greek *Kepos*. - The Egyptians seem in these cases to have used Aryan names for both apes and Elephants. - Syrian Stone Lore. P 180. The trade terms such as the names used in the time of Solomon for ivory apes and peacocks are Tamil; in other words they come from the Dravidian not a Sanskrit tongue, - Natives of Northern India P. 29. W. Crooke.

யுடையது. இவ்வாணிகத்தைக் குறித்தசெய்தி மித்தனி (Mitanni) நாட்டையாண்ட கிதைதி அரசனின் பட்டையங்களிற் காணப்படுகின்றது. இப்பட்டையங்கள் கி.மு. 14-ம் நூற்றாண்டிற் பொறிக்கப்பட்டவை. அசுர்பாணிப்பாலின் (Assurbanipal) புத்தக நிலையத்தில் (கி. மு. 668-626) காணப்பட்ட சிந்து [1] என்னுஞ்சொல் இந்தியபஞ்சு என்னும் பொருளில் வழங்கப்பட்டுள்ளது. இச்சொல் மிகப் பழமையுடையது. இச்சொல் அக்கேடிய மொழியில் தாவர ஆடை என்னும் பொருளில் வழங்கிற்று. அசுர்பாணிப்பால் என்னும் அரசன் பெரும்பயிர்த்தொழில் புரிவோனாயிருந்தான். அவன் இந்தியாவினின்றும் 'கம்பளி காய்க்கும் மரங்களை'ப் பெற்றான். மேற்கு ஆசியாவில் நடைபெற்ற பஞ்சு வியாபாரம் மிகப் பழமையுடையது. கிரேக்கர் முதல்முதல் இந்தியரைப் பற்றி அறியவந்தபோது அவர்கள் 'மரத்திற் காய்க்கும் கம்பளியை' உடுத்திருந்தார்கள். இருக்கு வேதத்தில் இரவும் பகலும் இரண்டு நெசவு செய்யும் பெண்களாக உவமிக்கப்பட்டுள்ளன. [2] முகயரிலே (Mugheir-*ur* of Chaldees) திங்

---

1. Prof. A. H. Sayce in his Hibbert lectures (1887 pp. 137-188) observes that in an ancient list of Babylonian clothing sindu is mentioned as a name of muslin, or woven cloth and that it corresponds *Sadin* of the Old testament and the......of Greeks. The learned Prof. has further stated that this muslin or woven cloth must have been called sindhu by the Accadians (Chaldians) because it was exported from the banks of Indus (sindhu) to Chaldia in those days (*cf.* the word calico from Calicut). He has further noted that this inter course between the two countries must have been by sea, for the word has passed by land *i.e.*, through Persia the initial of the word would have become *h* in Persian mouths. - Commemorative essays presented to Sir R. G. Bhandarkar, 1917.

2. Dravidian speaking races of India traded with the ancient Chaldians before the Vadic language found its way into India.

கட் கடவுளின் ஆலயத்திலும் நேபுசண் நிசரின் (கி. மு. 6-ம் நூற்றாண்டு) அரண்மனையிலும் இந்தியத் தேக்கமரத் துண்டுகள் கண்டு எடுக்கப்பட்டன. தேக்கு கருங்காலி சந்தனம் முதலிய மரங்கள் பரகாசா (Bargaza) புறாச் எனப்பட்ட இந்தியாவின் மேற்குக்கரையிலுள்ள துறைமுகத்திலிருந்து தைகிரசுக்கு அனுப்பப்பட்டன. இவ்வாணிகம் கி. பி. 2-ம் நூற்றாண்டு வரையில் நடைபெற்றது.

சலமன் நேசரின் (Salamanesar iii. கி. மு. 860) தூணில் குரங்கு, இந்திய யானை, பக்திரிய (பாசிக) ஒட்டகம் முதலிய விலங்குகளின் உருவங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. பவேரு சாதகம் (கி. மு. 500) இந்திய வணிகர் பவேருவுக்கு (பபிலோன்) கடல் வழியாகச் சென்ற வரலாற்றைக் கூறுகின்றது. அங்குப் பறவைகள் அருமை. இந்திய வணிகர் முதன்முறை ஒரு காகத்தைக் கொண்டு சென்றனர். அந்நாட்டு மக்கள் அதன் அழகைப் பார்த்து அதிகம் வியந்தார்கள். அடுத்த பயணத்தில் அவ்வணிகர் நன்

---

Indian teak was found in the ruins of ur (now Mugheir) and must have reached from India in the 4th millennium B. C. when it was the seaport of Babylon and the Capital of Sumerian kings (sayce Hib. Lect. P. 137). The gold and spices mentioned in Assynan inscriptions of the XIV Cen. B. C. were probably exported from India, the only Country so far as we know they were produced. - Life in an Ancient India - P. T. S. Aiyengar.

With regard - to trade of these times it must be noted that the early children inscriptions speak of ships of *ur*, the capital city; and that from at least the 14th century B. C. Gold, silks, pearls etc. had been passing from India to Assyrian monarchy carried on both by caravans on land and by the coasting trade by sea. There was also active trade with China, on the obelisk of Salamanezar are represented Indian Elephants and apes. - Historical Inscriptions of South India, Madras University.

ருக ஆடும் மயில் ஒன்றைக்கொண்டு சென்றனர். மயிலின் அழகாற் கவரப்பட்ட அந்நாட்டுமக்கள் காக்கையின் அழகைக் கொண்டாடினார்களல்லர்.

பண்டைக்காலத்தில் இந்தியர் அனுபவம் வாய்ந்த கடலோடிகளாக விருந்தனர். பழைய இந்திய இலக்கியங்கள் இந்தியரின் துணிகரமான கப்பற் பயணங்களைப்பற்றிக் கூறுகின்றன. பிற்காலங்களில் மத்திய தரைகளில் ஓடிய கப்பல்களைவிடப் பெரிய கப்பல்களை இந்தியர் கட்டினர். கி. மு. 6-ம் நூற்றாண்டில் கலிங்க நாட்டினின்றும் இலங்கைக்குச் சென்ற விசய இராசனின் கப்பல் 700 மக்களை ஏற்றிச் சென்றது. சாதகக் கதைகள் முந்நூறு முதல் எழுநூறு பேரை ஏற்றிச் செல்லக்கூடிய மாக்கலங்களைப்பற்றிக் கூறுகின்றன. கிழக்குக் கரையிலுள்ள பெரிய துறைமுகங்கள் சம்பா, தாமிரலிப்தி என்பன; மேற்கிலுள்ளன பறுகாசா சுப்பிரா என்பன. விநோதமான பறவைகள், சிந்துக்குதிரைகள், தந்தம், ஆடைகள், அணிகலன்கள், பொன், வெள்ளி முதலியன இத்துறைமுகங்களினின்றும் வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டன. அக்கால மக்கள் கடல்வழியாக அயல் நாடுகளுக்குச் செல்வது சாதாரண நிகழ்ச்சி. கெவெட்டு சூத்த (Keveddhusutta) என்னும் நூலில் கரை தெரியாத கடலில் கரையைக் காட்டும் பறவைகளுடன் வணிகர் பயணம் செய்த வரலாறு கூறப்பட்டுள்ளது. பறவைகள் எப்பொழுதும் கரையிருக்கும் திசையைநோக்கிப் பறக்கும் இயல்புடையன. கரையை அறிவதற்கு நோவா பறவைகளைத் திறந்துவிட்ட வரலாறு கிறித்துவமறையிற் காணப்படுகின்றது. பிளினி, கொஸ்மஸ் என்போர் கரையை அறிவதற்குக் குருவிகளைப் பயன்படுத்தும் வழக்கம் சிங்கள மக்களிடையே உண்டு என எழுதியுள்ளார்கள்.

பரசிகக் குடாக்கடல் வியாபாரம் ஆரம்பத்தில் சாலடியர் வசம் இருந்தது. இவர்கள் கடற்கொள்ளைக்காரரா யிருந்தனர். கி. மு. 694-ல் இக்கடற்கொள்ளைக்காரர் சென்னு செரிப் (Sennacherib) என்னும் சாலடிய அரசனுல் ஒழிக் கப்பட்டார்கள். இவ்வாணிகம் பின்பு பொனீசியர் கைக்கு மாறிற்று. பரசிகக் குடாவிலுள்ள பகேரின் (Bahrein) தீவுகளில் இவர்கள் வாணிகம் நடத்தியதைக் குறிப்பிடும் பழைய புதைபொருள்கள் கிடைத்துள்ளன.

கி. மு. 606-ல் பபிலோனியர் அசிரியரை வென்றனர். அப்பொழுது நினேவா கிழக்குத் தேசங்களின் பெரிய சந்தை யாக விளங்கிற்று. அங்கு, பொனீசியர், யூதஅடிமைகள், அயோனியர், இந்தியர் முதலியோர் தமது வியாபாரப் பண் டங்களை விற்கும் பொருட்டுக் கூடினுர்கள். அக்காலத்தில் பபிலோனியர் இந்தியக்கரைகளிற் குடியேறியிருந்திருந்தார்க ளாதல்கூடும். அலக்சாந்தர் இந்தியாவை அடைந்தபோது பபி லோனில் நடத்தப்படுவதுபோன்ற விவாகச் சந்தைகள் 1 அங்கு நடத்தப்பட்டன என்று ஸ்ராபோ கூறியுள்ளார்.

---

1. இதைக்குறித்துக் கெரதோதசு ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். ஆண்டின் ஒருமுறை பபிலோனியாவில் விவாகச்சந்தை கூடும். இங்கு மணப்பருவம் அடைந்த பெண்கள் எல்லோரும் வந்து கூடுவார்கள். மணம்முடிக்க விரும்பிய இளைஞரும் திரளுவார்கள். அப்பொழுது விலைகூறுவோன் மிகவும் அழகுள்ள பெண்ணிலிருந்து ஆரம்பித்து ஒவ்வொருவராக விலைகூறுவான். கூடியதொகை அளிப்பவன் கூறப் படும், பெண்ணை வாங்கி மணம் முடித்துக்கொள்ளுகிறுன். இறுதி யில் அழகில்லாதவர்களும் அங்கப் பழுதுடையவர்களுமாகிய பெண் கள் விலை கூறப்படுவார்கள். இவர்களை வாங்குபவர்களுக்கு அழகிய பெண்களின் விலையாகக் கிடைத்த பணத்தில் ஒரு பகுதி கொடுக்கப் படுகின்றது. பெண்களை வாங்குபவர்கள் அவர்களைச் சட்டப்படி மணந்துகொள்ளுதல் வேண்டுமெனத் தக்க உறுதி அளித்துச் செல்லு தல் வேண்டும்.

இந்தியாவுக்கும் செமத்திய மக்களுக்குமிடையிலுள்ள வணிகம் பெரும்பாலும் கடல்வழியாக நடைபெற்றது.

பழையஆசிய நாகரிகம் இந்தியா, சீனு, இலங்கை, மத்திய தரைநாடுகள் வரையில் பரந்து காணப்பட்டது. இவ்விடங்களிற் கிடைத்த பழைய மண்டபங்கள், உலோகப்பொருள்கள், நெசவுப்பொருள்கள் என்பன ஒரேவகையின. கிழக்கு மத்தியதரை, நாகரிக உலகின் மேற்கு எல்லையாக ஒருபோது இருந்தது.

கழுதை ஒட்டகம் பொதிமாடு என்பவைகளில் பண்டங்களை ஏற்றிச்செல்லும் வணிகர் கூட்டத்தினர், மிகமுற்காலந் தொட்டு இந்தியா, சீனு, மேற்கு ஆசியா என்பவைகளைத் தொடுத்திருந்த பெரும்பாதையாற் பிரயாணஞ் செய்தனர். ஒக்சஸ் (Oxus) ஆற்றிலிருந்து கஸ்பியன் வரையில் பண்டங்கள் கட்டுமரங்கள் வாயிலாகக் கொண்டுபோகப்பட்டன.

இந்தியத் துறைமுகங்களினின்றும் சரக்குகள் ஏடின் துறைமுகத்துக்குச் சென்றன. சலமன் அரசன் பொனீசிய அரசனின் நட்பைப்பெற்றுப் பொனீசிய மாலுமிகளின் உதவியால் பொன் வெள்ளி யானைத்தந்தம் வாலில்லாக் குரங்கு மயில் அகில் இரத்தினக் கற்கள் முதலியவைகளை இந்தியாவினின்றும் பெற்றான். ஒபிர் பொன்னுக்குப் பேர்போனது; ஆகவே எபிரேயத்தில் 'ஒபிர்ப்பொன்' என்னும் முதுமொழி உண்டாயிற்று. ஒபிர் என்பது இந்தியாவிலுள்ளதென்பது உடனே தெளிவாகின்றது. யூதர் நூல்களில இந்தியமொழிச் சொற்கள் பல காணப்படுகின்றன.

பண்டைக் கிரேக்கப் புலவராகிய ஹோமர் ஆபிரிக்க எதியோப்பியர், கிழக்கு எதியோப்பியர் என்னும் இருமக்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். அவர் கூறிய கிழக்கு எதியோப்பியர் என்பது திராவிடரைக் குறிக்கும். ஹோமர்

காலத்தில் இந்தியாவும் ஆபிரிக்காவும் ஒன்றாக இணைக்கப்பட்டிருந்தனவென்றும், இந்துமாக்கடல், மத்தியதரைக்கடல் இருப்பதுபோல முன்பு இடையில் இருந்ததென்றும் நம்பப்பட்டது. எபிரேயத்திலும் சமக்கிருதத்திலும் கிரேக்கரைக் குறிக்க வழங்கியசொல் யவன என்பது.

கெரதோதசு கி. மு. 484-ல் பிறந்தார். இவர் தனது நூலில் இந்தியரைப்பற்றிக் கூறியுள்ளார். அவர் கூறுவது "இந்திய மக்கள் வெவ்வேறு மொழிகளை வழங்கும் பல சாதியினராக வாழ்கின்றனர். தெற்கேயிருப்போர் எதியோப்பியரைப்போன்றோர். அங்கு ஓர் உயிரையுங் கொல்லாத ஒரு கூட்டத்தினரும் காணப்படுகின்றனர். அவர்கள் தானியங்களையும் தாவரங்களைம் உணவாகக் கொள்வர்."

"இந்தியாவில் ஒருவகை எறும்புகள் உண்டு. இவை புற்றெடுக்கும்போது வெளியே தள்ளும் மணலோடு பொன் தூளும் வெளியே வருகின்றது. அவ்வெறும்புகள் நாயிற் சிறியனவும் நரியிற் பெரியனவுமாய் இருக்கும். அவை பொன்னைக் காவல்காத்துக் கொண்டிருக்கின்றன. நடுப்பகலில் அவை புற்றுக்குள் இறங்கிச்சென்று நித்திரை கொள்ளுகின்றன. இந்தியர் பெண் ஒட்டகங்களில் சென்று பொன் தூள்களைச் சாக்குகளில் கட்டிக்கொண்டு விரைந்து செல்கின்றனர். அவ்வெறும்புகளிற் சிலவற்றைப் பாரசிக அரசன் பிடித்து வைத்திருக்கின்றான்."

இக்கதை, சமக்கிருதத்திலுள்ள பப்பிலிக்கா (Paippilika) என்னும் எறும்புத்தங்கம் என்னும் பொருள்தரும் சொல்லினின்றும் முளைத்ததாயிருக்கலாம். அக்காலத்தில் ததிஸ்தான் (Dardistan) என்னுமிடத்தில் தங்கம் அரிக்கப்பட்டது. கெரதோதசு, இந்தியபஞ்சு, கம்பளியிலும் நயு

மானது என்றும், இந்தியமக்கள் அதனால் ஆடை செய்தார்கள் என்றும் கூறியுள்ளார்.

கெரதோதசுவுக்குப்பின் இந்தியாவைப்பற்றிக் கூறியவர் கெற்சியஸ் (Ktesias) என்னும் கிரேக்கர் (கி. மு. 416) இவர் இந்தியாவைப்பற்றிப் பிறர் வாயிலாக அறிந்தவைகளைத் திரட்டி இந்திக்கா (Indika) என்னும் நூல் செய்துள்ளார். இவர் கூறியிருப்பன பெரும்பாலும் கட்டுக்கதை போல்வன. இவர் கருவாப்பட்டையைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கின்றார். இவர் அதனைக் 'காருப்பு' (Karuppu) எனக் கூறியுள்ளார். இந்தியாவில் நஞ்சை அறியும் புறாவும் காயத்தை ஆற்றும் கல்லும் இருந்தனவென்றும், அங்கு ஒற்றைக்கொம்பு முளைத்த கழுதைகளும் குதிரைகளும் உண்டு என்றும், அக்கொம்புகளிற் செய்த சிமிழ்களிற் பானஞ்செய்யின் விடத்தின் வலிமை தலைகாட்ட முடியாதென்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். (காக்கை நஞ்சை அறியும் இயல்பினதென்றும், காண்டாமிருகத்தின் கொம்பில் ஊற்றி உண்ணும் பானங்களில் நஞ்சு கலந்திருப்பினும் தீமை நேராதென்றும் இன்றும் இந்தியமக்கள் நம்பி வருகின்றனர்.)

பாணினி முனிவர் பெண்பால் போன்ற யவனி என்னும் சொல்லைக் குறிப்பிட்டுள்ளார். இதற்கு உரையெழுதிய கார்த்தியாயனர் அது யவன லிபியைக் குறிக்குமென வரைந்துள்ளார்.

அலக்சாந்தர் கி.மு. 329-ல் இந்தியா மீது படை எடுத்து வந்தார். கி. மு. 315-ல் பஞ்சாப்பில் கிரேக்க ஆட்சி ஒழிந்தது. அதன்மேலும் கிரேக்க இந்தியர் கலப்பிற் றோன்றிய மக்கள் பலர் பஞ்சாப்பிற் காணப்பட்டார்கள். இவர்கள் காலத்தில் அங்குள்ள மக்களோடு கலந்து மறைந்துவிட்

டனர். சந்திரகுப்த அரசனே கிரேக்கப் பெண்ணை மணந்திருந்தான். வட இந்தியாவில் சகர் எனப்படும் ஸ்கித்தியர் ஆட்சி கி. மு. 93-ல் தொடங்கியது.

[1] தாலமி பிளாபிபஸ் (கி. மு. 321) காலத்தில் இந்திய வேட்டை நாய்களும், இந்தியப் பசுமாடுகளும் எகிப்தில் காணப்பட்டன. இந்தியப் பெண்களும் அங்குக் காணப்பட்டனர். இந்திய மணப் பண்டங்கள் ஒட்டகங்களிலேற்றிக் கொண்டு போகப்பட்டன.

பெரிபுளூஸ் என்னும் நூல் (கி. பி. 60) இந்தியாவுக்கும் எகிப்துக்கும் வாணிகம் நேராக நடக்கவில்லையென்றும் அக்கால வணிகர் இந்தியாவுக்கு நேரே பயணஞ்செய்யத் துணியாமையால் எயுடாமன் (Eudaemon) என்னுமிடத்திற் சந்தித்தார்களென்றும், அலக்சாந்திரியாவைப்போல எயுடாமன் அக்கால வாணிப நடு இடமாயிருந்ததென்றும் கூறியுள்ளார்.

சீனவிலிருந்து பட்டும், இந்தியத் துறைமுகங்களிலிருந்து நல்ல மசிலின் ஆடையும், அணிகலன்களும், மரகதம், முத்து, மணச்சரக்கு முதலியனவும் உரோமுக்குச் சென்றன. மருத்துச் சரக்கும் மணப்பொருள்களும் நல்ல விலைக்கு விற்கப்பட்டன. மிளகுக்கு மானம் இருந்தது. பிளினி காலத்தில் உரோமில் ஒரு ராத்தல் மிளகின் விலை 15 டினரி (Denari). நடுக்காலம் வரையில் மிளகு மேல்நாடுகளில் உயர்ந்த வாழ்க்கைப் பொருள்களில் ஒன்றாக இருந்து வந்தது. 15-ம் நூற்றாண்டில் ஒரு இராத்தல் மிளகின் விலை

---

1. Pliny published his geography in A. D. 77. Periplus of Erythean sea was written in the 1st century A. D. probably A. D. 60, but not later than 80 A. D. Ptolemy wrote his geography about A. D. 150. The Peutingorian Tables were composed in A. D.222. - Beginnings of South IndianHistory.

இரண்டு 'கிலின்'. அலாரிக் (Alaric) என்னும் கிரேக்கன் உரோம்நகர்மீது தான் இட்ட முற்றுகையை எடுப்பதற்குக் கேட்ட பொருள்களுள் 3000 இராத்தல் மிளகும் ஒன்று எனக் கிபன் (Gibbon) என்பார் கூறியுள்ளார்.

பிளினி என்பார் உரோமரின் ஆடம்பர வாழ்க்கையால் இந்தியாவுக்கு மிகுதியாகப் பணம் செல்வதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இந்தியாவில் நாணயப் புழக்கம் குறைவு. முதல் ஐந்து 'உரோமைச் சக்கரவர்த்திகள்' கால நாணயங்கள் ஏராளமாக இந்தியாவில் எடுக்கப்பட்டுள்ளன. நிரோ (Niro) காலத்தில் இந்தியாவினின்றும் உரோமுக்குச் சென்ற உயர்தர வாழ்க்கைப் பொருள்களின் அளவு உச்சநிலை அடைந்தது. இதற்குப்பின் அங்கு நேர்ந்த உள்நாட்டுக் குழப்பங்களால் அவ்வாணிகம் குறைந்துவிட்டது. உரோமை அரசரின் 612 பொன் நாணயங்களும் 1187 வெள்ளி நாணயங்களும் இந்தியாவில் நிலத்தின்கீழ் இருந்து கிண்டி எடுக்கப்பட்டன. இவை பானை நிரம்பிய, ஆட்சுமையுள்ள என்று குறிக்கப்பட்ட நாணயங்களைவிட வேறானவை. இவைகளுட் பெரும்பாலன ஆகஸ்தஸ் காலத்தன. திபேரியஸ் பிளினி(Tiberious-Pliny) என்பார், இந்தியா சீனு அராபியா முதலிய நாடுகள் ஓர் ஆண்டில் நூறுகோடி 'செஸ்ரர்செஸ்' தங்கத்தைக் கவர்ந்துகொள்கின்றன எனக் கூறியுள்ளார். இத்தொகை 11,00,000 தங்க நாணயங்களுக்குச் சரிஎனக் கணக்கிடப்படுகின்றது. இதிற்பாதி இந்தியாவை அடைந்தது. அக்கால உரோமர் இறந்தவரின் உடல்மீது ஏராளமான மணச் சரக்குகளைக் கொட்டி எரித்தார்கள். நிரோ அரசன் (கி. பி. 66) பொபோகா (Popoka) வின் உடல்மீது கொட்டி எரித்த மணச்சரக்கு அராபியாவிற் கிடைக்கும் ஓராண்டு விளைவுக்கு நேர் என்று கணக்கிடப்பட்டது. இவ்வீண் ஆடம்பரம்

இந்தியா அராபியா ஏடின் முதலிய நாடுகளுக்கு அதிக வருவாயைக் கொடுத்தது.

ஸ்ராபோ என்பவர் ஆகஸ்தஸ் காலத்தவர். இவர் ஆசிய கிரேக்கர். "மெஒஸ் கோமாஸ்" (Myos Homas) என்னும் மத்தியதரைத் தீவுகளுக்கு அருகாமையில் இந்தியாவுக்குப் பயணப்பட்டுச் செல்லும் 120 கப்பல்களை யான் பார்த்தேன்" என அவர் குறிப்பிட்டுள்ளார்.

குளோடியஸ் அரசன் காலத்தில் இலங்கைக்கு அருகே குதிரை முனைக்கு அணித்தில் கிரேக்க கப்பல் ஒன்று உடைந்துபோயிற்று. அதினின்று தப்பி மீண்டவர்களிடம் கேட்டறிந்தவற்றை ஆதாரமாகக்கொண்டு பிளினி இலங்கைப் படம் வரைந்தார். அவர் இந்தியநாட்டின் படமொன்றும் வரைந்துள்ளார். அவர் கி. பி. 150 வரையில் வாழ்ந்தார்.

பாண்டிய அரசன் ஒருவன் ஆகஸ்தஸ் அரசனிடம் தூதனுப்பினன்; (கி.மு. 21) இலங்கை அரசனும் தூதனுப்பியிருந்தான். கிப்பாலுஸ் (Hippalus) என்பார் கப்பல்கள் இந்தியாவுக்குப் பாயெடுத்துச் செல்வதற்கேற்ற பருவக் காற்றைக் கண்டுபிடித்தார். முசிறியில் கடற்கொள்ளைக்காரர் [1]

---

1. The following accounts from Marco Polo of this coast is worth noticing! "There go forth every year more than a hundred corsair vessels or cruise. These pirates take with them their wives and children and stay out the whole summer. Their method is to go in fleets of twenty or thirty of these pirate vessels to-gether, and then they form what they call a sea cordon, that is that they drop off till there is an interval of five to six miles between ship and ship, so that they cover something like a hundred miles of sea and no merchant ship can escape them. For when any one corsair sights a vessel a

மிகுதியாக இருந்தமையின் முசிறியில் இறங்குவதிலும் பறக்கை (Barake) யில் இறங்குவதை வணிகர் விரும்பினார்கள் எனப் பிளினி கூறியுள்ளார். பறக்கை மிளகு வர்த்தகத்துக்குப் பேர்போனது. மிளகு விளையும் நாடுகளின் நடுவிலுள்ளது தெல்லிச்சேரி. பரகாசாவிலிருந்து சந்தனக்கட்டை தேக்கு கருங்காலி முதலிய இந்திய மரங்கள் அனுப்பப்பட்டன என்று பெரிபுளூஸ் என்னும் நூல் கூறுகின்றது. சிந்து நதி முகத்துவாரத்திலிருந்து இலேசியம் என்னும் ஒருவகை வாசனைச்சரக்கு, இரத்தினக்கல், நீலக்கல், தோல், சீனப்பட்டு முதலியன ஏற்றுமதியாயின. பிற்காலங்களில் பட்டு தரை வழியாக உரோமுக்குக் கொண்டுபோகப்பட்டது. உரோமர் ஆரம்பத்தில் பட்டு எப்படி யுண்டாகின்றதென்று அறியாதிருந்தார்கள். அவர்கள் அது மரத்தில் காய்ப்பது என நம்பி வந்தனர். பர்காசா என்பது இக்காலம் புறாச் (Brooch) என அறியப்படும். தமிழகம் உரோமை ஆசிரியர்களால் தமிறிகே (Damirike) என வழங்கப்பட்டது. தென்னிந்திய துறைமுகங்களுட் சிறந்தது முசிறி. இது இப்பொழுது கரங்கனூர் என வழங்கும். முசிறியில் அகஸ்தஸ் அரசனுக்கு ஆலயம் ஒன்று இருந்ததெனப் பெதுருங்கேரியர் அட்டவணை (கி. பி. 222) கூறுகின்றது. யவன வணிகர் ஆடி மாதத்தில் வந்து மார்கழி மாதத்திற் புறப்பட்டார்கள். குமரி முனையில் குமரித் தெய்வத்தின் ஆலயம் இருந்தமையைப் பெதுருங்கேரியரின் அட்டவணை குறிப்பிட்டுள்ளது.

---

signal is made by fire or smoke. and then the whole of them make for this and seize the merchants and plunder them...But now the merchants are aware of this and go so well manned and armed, and with such great ships and they do not fear the corsairs. Still mishaps do befall them at times-"The Beginnings of South Indian History.

கிறிஸ்ரோஸ்ரம் (Dio-Chrisrostam கி. பி. 117) என்பார் இந்திய வணிகரைத்தாம் அலக்சாந்திரியாவிற் சந்தித்தமையைக் குறிப்பிட்டுள்ளார். 1

பரகாசாத் துறைமுகத்திலே(புறாச்)அடிக்கடி கிரேக்கப் பெண்கள் இறக்குமதி செய்யப்பட்டார்கள். இந்திய அரசரின் அரண்மனைகளில் யவனப்பெண்கள் இருந்தார்கள்; சகுந்தலை நாடகத்தில் இவ்வாறு காணப்படுகின்றது. தென்னிந்தியாவிலே அரசனின் மெய்காப்பாளர் ஊமராகிய மிலேச்சராயிருந்தனர்.

பரதர் செய்த நாட்டிய சாத்திரத்தில் அரங்கில் ஒரே முறையில் தோற்றக்கூடிய நடிகரின் கூடிய எண் ஐந்து என வரையறுக்கப்பட்டுள்ளது. கிரேக்க நாடகங்களிற்போல இந்திய நாடகங்களிலும் பயங்கரமான அல்லது பார்ப்பதற்கு இன்பம் அளியாத காட்சிகள் தவிர்க்கப்பட்டுள்ளன. இந்திய நாடகங்களில் யவனிகா என்னும் திரைச்சீலை பயன்படுத்தப்பட்டது. யவனி என்னும் கிரேக்க பெண்கள் அரசர் அல்லது அரச குடும்பத்தினரின் பரிவாரங்களாகவிருந்தனர். திரைச்சீலை கிரேக்கரைப் பார்த்துச் செய்யப்பட்டதன்று. கிரேக்கர் திரைச்சீலையைப் பயன்படுத்தவில்லை.

சாதகக் கதைகள் எழுதப்பட்ட காலம் முதல் இந்திய நாட்டுக் கதைகள் மேல் நாடுகளுக்குச் சென்று வழங்கியமைக்குச் சான்றுகளுண்டு.

---

1. The greatest achievement of Dravidians was the art of navigation. The Indian ship was very like Egyptian as we see in a fifth dynasty painting, a long and wall sided vessel with the stem and stern highly raised, and had oars arranged in banks. The Dravidian paddle was round not spade like in form as in ancient China, or very long as in ancient Egypt. There are native words in the Dravidian languages for the oar, sail, mast and anchor-Indian culture through ages-S. V. Venkateswara,

உரோமன் வர்த்தகப் பாதுகாப்பின்பொருட்டு இரண்டு உரோமைப் பட்டாளங்கள் முசிறியில் நிறுத்தப்பட்டிருந்தனவென்று பெதுருங்கேரியரின் அட்டவணை என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது. பிளினி என்பவர் உரோமை அணங்குகளின் ஆடம்பர வாழ்க்கையைப்பற்றி எழுதியிருப்பது பின்வருமாறு:

[1] எங்கள் நாட்டுப்பெண்கள் கைவிரல்களில் அல்லது காதில் இரண்டு அல்லது மூன்று முத்துக்களை கட்டித் தொங்கவிடுகிறார்கள். அவை ஒன்றோடு ஒன்று முட்டி அசைவதைக் கண்டு அவர்கள் மகிழ்கின்றனர். வறியவர்கள் தாமும் முத்துக்களை அணிகின்றனர்! செருப்புகளும் அதன் வார்களும் முத்துக்களால் அலங்கரிக்கப்படுகின்றன. முத்தை அணிவது மாத்திரமல்லாமல் அவர்கள் முத்தின்மீது மிதித்தும் நடக்கிறார்கள். ஒருபோது யான் கயஸ் (Caius) சக்கரவர்த்தியின் மனைவியைப் பார்த்தேன். யான் பார்த்த நேரம் விழாக்காலம் அல்லது பரிசுத்தமான கிரியைகளைப் புரியும் நேரமன்று. அவள் அணிந்திருந்த முத்துக்களும் இரத்தினக் கற்களும் அவள் தலைமீது பந்தி பந்தியாகக் கிடந்து ஒளிவிட்டன. கூந்தல் மீதும், சூடியிருந்த பூமாலைகளிலும், காதுகளிலும், கழுத்திலும், கழுத்து மாலைகளிலும் கைவிரல்களிலும அவள் அணிந்திருந்த முத்து பவளம் என்பவைகளின் பெறுமதி 40,000,000 செஸ்ரர்செஸ் (Sesterces). அவைகளின் பெறுமதி அத்தொகை என்று

1. Pliny says, Our ladies glory in hanging pearls suspended from their fingers, two or three of them dangling from their ears, delighted even with the rattling of the pearls as they knock against each other; and now at the present time the poor classes are even affecting them. They put them on their feet and that not only on the laces of their sandals but all over the shoes.-Beginnings of South Indian History.

உறுதிப்படுத்துவதற்குள்ள பத்திரங்கள் அவளிடம் இருந்தன. அவை பிறரால் வெகுமதி அளிக்கப்பட்டனவல்ல; ஆனால் நாட்டு மக்களின் பணத்தைக்கொண்டு வாங்கித் தலைமுறை தலைமுறையாக அணியப்பட்டு வருவன. மக்களைக் கொள்ளையிடும் முறை இவ்வாறிருக்கின்றது. லலியா போலினு என்பவளை மூடியிருந்த நான்கு கோடி செஸ்ரர்செஸ் பெறுமதியுள்ள அணிகலன்களின் வெளிச்சத்தில் அவள் பேர்த்தியைப் பார்க்கக் கூடியதாகவிருந்தது.

ஆண்டில் 55,000,000 செஸ்ரர்செஸ்சை (486,979 தங்க நாணயம்) இந்தியா கவர்ந்துகொள்ளுகின்றதென்றும் இந்தியாவினின்றும் வாங்கப்பட்ட பொருள்கள் உரோமில் நூறு மடங்கு அதிக விலைக்கு விற்கப்பட்டனவென்றும் அவர் கூறியுள்ளார்.

யூலியர் சீசர், புறுத்தசின் (Brutus) தாயாகிய சேவிலியா (Servilia) என்பவளுக்கு ஒரு முத்தை வெகுமதியாக அளித்தார். அதன் பெறுமதி 47,457 தங்கநாணயம் (பவுன்). கிளியபத்திரா என்னும் எகிப்திய இராணி காதில் அணிந்திருந்த முத்துக் கடுக்கன்களின் விலை 151,450 தங்க நாணயம்.

பெரிப்புளுஸ் என்னும் நூல் இந்திய மேல்நாட்டு வாணிகத்தைப்பற்றிக் கூறுவது பின்வருமாறு :

இந்தியாவில் மிளகும் முத்தும் அதிகம் வாங்கப்படுகின்றன. தந்தமும், 'சிலந்திவலை' 1 என உரோமரால் வாங்கப்பட்ட

2. Apart from the compliants of Petronius that fashionable Roman ladies exposed their charms much too immodestly by clothing in the "web of woven wind," as he called the muslins imported from India. Pliny says that India drained the Roman empire annually to the extent of 55,000,000 *Sesterces*, equal to £ 486, 979 sending in return goods which sold at hundred times their value in India. He also says in another place, "This is the price we pay for our luxuries and our Women".-Ibid.

பட்டும், ஸ்பைக்நாட் (Spikenard) எனப்பட்ட மணப்பொருளும், கங்கை முகத்துவாரத்தில் விலைக்குக்கிடைத்தன. மலைப் பாத்திரம் (Malabathram) இதற்குக் கிழக்கேயுள்ள நாடுகளிற் கிடைத்தது. எல்லாவகைப் பளிங்குக் கற்களும், இரத்தினக் கற்களும், பவளங்களும் ஆமையோடும் தமிழகத்துக்கு அப்பாலுள்ள இலங்கைத் தீவினின்றும் வாங்கப் பட்டன.

முசிறித் துறைமுகத்தில் மலைப்பாத்திரம் மிளகு என்பவைகளை வாங்கி அனுப்புவதற்கேற்ற வசதிகள் உண்டு. வணிகர் இவைகளையும் பிற மணப்பொருள்களையும் இங்குக் கொண்டுவருகின்றனர். இன்னும் இங்கு இறக்குமதியாகும் பொருள்கள் நிறக்கற்கள், பவளம், படிகம், பித்தளை, ஈயம், மது (Wine), சாதிலிங்கம், ஆடை, பாஷாணம் (Arsenic) முதலியன. முத்துக்குளிப்பைப் பற்றிக் கூறுமிடத்துக் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டவர்களே முத்துக்குளிப்பிற் பயன்படுத்தப்படுகின்றனர் என அவர் குறிப்பிட்டுள்ளார்.

அக்காலத்தே வியாபாரத்தின்பொருட்டு வந்த கிரேக்கரும் பிறநாட்டு மக்களும் மதுரை, புகார் போன்ற நகர்களிற் றங்கி வாழ்ந்தார்கள். இவர்கள் வாழும் வீதிகளைப்பற்றிச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.

* "இந்தியாவுக்கு அனுப்பப்படும் பண்டங்கள் அலக்சாந்திரியாவிலிருந்து இரண்டு மைல் தூரத்திலுள்ள யூலியோபொலிஸ் (Juliopolis) என்னும் இடத்தில் இறக்கப்பட்டன; பின்பு அவை நீலநதி வழியாக கொப்தஸ் (Coptus) என்னும் பட்டினத்துக்குக் கொண்டுபோகப்பட்டன. யூலியோபொலி

* Disquisition concerning the knowledge which the ancients had of India. - William Robertson

சுக்கும் கொப்தசுக்கும் இடையே உள்ள தூரம் 303 மைல். இத்தூரம் 12 நாளிற் கடக்கப்பட்டது. கொப்தசிலிருந்து பெர்ணிஸ் (Bernes) என்னும் அராபியக் குடாக்கடலிலுள்ள பட்டினத்துக்கு மறுபடியும் அச்சரக்குகள் கொண்டுபோகப் பட்டன. இவ்விரண்டு பட்டினங்களுக்கு மிடையிலுள்ள தூரம் 258 மைல். சூடு மிகுதியால் வியாபாரக் கூட்டங்கள் இரவில் மாத்திரம் பிரயாணஞ் செய்தன. இத்தூரத்தைக் கடக்க 12 நாள் பிடித்தன. பெர்ணிஸ் என்னும் துறை முகத்திலிருந்து மறுபடியும் சரக்குகள் அராபியக் குடாக் கடலிலுள்ள கேனி (Cane) என்னும் துறைமுகத்துக்குக் கொண்டுபோகப்பட்டன. அங்கு நின்றும் கப்பல்கள் முசிறித் துறைமுகத்தை நாற்பது நாட்களில் அடைந்தன. பின்பு மார்கழி மாதத்திற் கப்பல்கள் திரும்பின. இவ்வாறு கப்பல் கள் போய்த் திரும்ப ஒரு வருடம் பிடித்தது.

அக்காலத்தில் உரோமாபுரி ஆலயங்களில் அதிக சாம் பிராணி எரிக்கப்பட்டது. உரோமர் விலை உயர்ந்த வாசனைப் பொருள்களால் இறந்தவர்களை மூடி எரித்தார்கள். சிசிலியா என்பவளின் சவத்தின்மீது 210 மூடை மணப்பொருள்கள் கொட்டி எரிக்கப்பட்டன. நிரோ (மரணம் கி. பி. 68) என் பவர் பப்போயி (Pappoe) என்பவரின் சவத்தின்மீது ஒரு நாட்டில் ஓராண்டில் விளைவாகும் மணப்பொருள் அவ்வளவு கொட்டி எரித்தார். இறந்தவர்கள் மீது கொட்டி எரிக் கப்படும் மணப்பொருள்களையும், தெய்வங்களுக்கு எரிக்கப் படும் அவ்வகைப் பொருளையும் ஒப்பிடுமிடத்துத் தெய்வங் களுக்கு எரிக்கப்படுவது தானிய நிறை தானும் இல்லை எனப் பிளினி என்பவர் கூறியுள்ளார்.

அயுரேலியன் (Aurelian) காலம் முதல் பட்டாடைகள் உரோமில் பொன்னுக்குச் சரியாக நிறுத்து விற்கப்பட்டன.

## இந்திய மிளகு வாணிகம்

தொன்மைதொட்டு இந்தியாவினின்றும் மிளகு வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டது. கி. பி. 47 வரையில் இவ் வாணிகம் மும்முரமாக நடைபெற்றது. அக்காலத்துச் செங் கடல் வழியாக இந்தியாவுக்கும் அலக்சாந்திரியாவுக்குமிடை யில் மரக்கலப் போக்கு வரத்து இருந்தது. இந்திய அராபிய வியாபாரிகள் பருவக்காற்றுக் காலங்களை நன்கு அறிந்து கப் பற் பயணஞ்செய்தனர். செங்கடல் முகத்துவாரத்திலுள்ள ஒசிலிஸ் (Ocelis) என்னும் பட்டினத்திலிருந்து பாயெடுத்த கப்பல்கள் துடுப்புகளால் ஓட்டப்பட்டு முசிறிப்பட்டினத்தை நாற்பது நாட்களில் அடைந்தன. இவ்வாறு அலக்சாந்திரியா வழியாக இந்தியாவுக்கும் உரோமைக்குமிடையில் கி. பி. 215 வரையும் இவ்வாணிகம் மும்முரமாக நடைபெற்றது. கிழக்கிலிருந்து உரோமுக்குச் சென்ற பொருள்களுள் முக் காற்பகுதி மிளகு. அக்கால வாணிபத்திற்குத்தேவைப்பட்ட மிளகு முழுமையும் மலையாளக் கரையிலிருந்து சென்றது. மிகப் பழங்காலந்தொட்டு மிளகு ஐரோப்பிய நாடுகளில் இறைச்சியைப் பழுதுபடாமற் பாதுகாக்கவும், உணவுகளுக் குச் சேர்க்கவும் பயன்படுத்தப்பட்டது. கிரேக்கர் மருந்து முறையில் இதனை மிகுதியாகப் பயன்படுத்தினர். இப்போக் கிரேற்சு (Hippocrates) என்பவர் இதனை இந்திய மருந்து எனக் குறிப்பிட்டுள்ளார். ஆகஸ்தஸ் காலத்தில் மிளகு உரோமில் மிக மதிப்புள்ள சரக்காகக் கருதப்பட்டது. அக் காலத்து ஓர் இராத்தல் மிளகின் விலை எழு ரூபாய்; இந்தி யாவில் அதன் விலை இதன்பாதி அளவுதானும் இல்லை. பருவ காலத்தை அறிந்து கப்பல்கள் மிகுதியாக இந்தியாவுக்கு ஓடத்தொடங்கிய காலத்தில் மிளகின் விலை குறைந்துவிட் டது. அது மாவாக இடித்துப் பொட்டணங்களாக விற்கப்

பட்டது. அலாறிக் என்னும் கொதியன் உரோமை முற்று கை இட்டபோது, முற்றுகையை விடுவதற்கு, அவன் ஏனைய பொருள்களோடு 3,000 இராத்தல் மிளகையும் கேட்டான். உரோமிலிருந்து இந்தியாவுக்கு அனுப்பப்பட்டபொருள்கள் மிகக்குறைவு; ஆகவே உரோமிலிருந்து ஏராளமான செல்வம் இந்தியாவை அடைந்தது. உரோமிலிருந்து ஏராளமான தங்க, வெள்ளிநாணயங்கள் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டன. இந்தியாவிற் காணப்பட்ட பல்லாயிரக் கணக்கான உரோமன் நாணயங்களுட் பெரும்பாலன மலையாளக்கரையிலும் அதனை யடுத்த கோயமுத்தூர்க் கோட்டம் மதுரை என்னும் இடங் களிலும் காணப்பட்டன. இந்நாணயங்களிற் பெரும்பாலன திபேரியஸ், குளோடியஸ் கேயஸ் (Tiberius, Gaius and Claudius) காலத்தன.

"யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்'

என அகநானூற்றிற் கூறப்பட்டுள்ளது.

முசிறி மலையாளக்கரையிலே பேர் ஆற்று முகத்துவா ரத்திலுள்ளது. தமிழ் நூல்கள் இதனைப் பெரிய துறைமு கப்பட்டினமாகக் கூறுகின்றன. பொனீசியரும் அராபிய ரும் இத்துறைமுகத்தில் வியாபாரம் நடத்தினர். உரோமிலி ருந்து பாவை, அன்ன விளக்குகள், நகைப்பேழைகள், மண முள்ள மது என்பன இறக்குமதியாயின. அரசரும் செல்வ ரும் இம்மதுவினை உண்டனர். பெதுருங்கேரியரின் அட்ட வணையின்படி முசிறியில் ஆகுஸ்தஸின் கோயில் ஒன்றிருந்தது. தமிழ் அரசரின் பண்டசாலைகளை யவன வீரர் காவல் புரிந்த னர். முசிறியில் யூதர் அராபியர் பாசிகர் குடியேறி யிருந்தனர். அவர்கள் தனித்தனி வீதிகளில் வாழ்ந்தனர்.

தோமஸ் ஞானியார் (Apostle Thomas) முசிறிக்கு அயலி லுள்ள மல்லன்காராவில் கி. பி. 50-ல் வந்து இறங்கினரெனச் சிரிய கிறித்தவர்கள் நம்பி வருகின்றனர்.

கி. பி. 215-க்குப்பின் இவ்வாணிகம் விழுந்துவிட்டது; பாசிகக் குடாக்கடல் வழியாகவும் தரை மார்க்கமாகவும் ஓரளவு நடைபெற்றது. சினர் தமது மரக்கலங்களில் சீன வுக்கு மிளகு கொண்டு சென்றனர்.

இடைக்காலத்தில் கோயில்களுக்கு மிளகு காணிக்கை யாகக் கொடுக்கப்பட்டது. அக்காலத்தில் ஓர் இராத்தல் மிளகின் விலை நாலு சிவின். அது தச்சு வேலை செய்பவன் ஒருவனின் நாலு நாட் கூலி. இவ்வாணிகம் வெனிஸ் செனோ வா (Genoa) வியாபாரிகளின் கையில் இருந்தது. அவர்கள் இதனை அராபியரிடமிருந்து வாங்கினர். இவ்வியாபாரிகள் பணஞ் சம்பாதிப்பதை அறிந்த மேற்கு ஐரோப்பிய மக்கள் கிளர்ச்சிகொண்டனர். அதனால் அவர்கள் இந்தியாவுக்குச் செல்லும் கிட்டிய பாதையை அறிய முயன்றனர். இதனால் கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டுபிடித்தான். வாஸ்கோடி காமா என்னும் போர்த்துக்கேயன் கள்ளிக்கோட்டையை 1498-ம் ஆண்டு அடைந்தான். 16-ம் நூற்றாண்டளவில் டச்சுக்காரர் ஐரோப்பாவில் மிளகு வியாபாரத்தைக் கைப் பற்றினர். அக்காலத்தில் ஓர் இராத்தல் மிளகின் விலை மூன்று 'சிவின்'; முன் ஆறு 'சிவின்' வரையிலிருந்தது. இதனால் இலண்டன் வியாபாரிகள் கிளர்ச்சி கொண்டார்கள். சிலர் எலிசபெத் இராணியிடம் உத்தரவு பெற்றுக் கிழக்கு நாடுகளுடன் வியாபாரஞ் செய்யப் புறப்பட்டனர். அவர்கள் கிழக்கே அரசுகளைக் கோலினர்.

## இயல் கூ.

### மொழி.

மக்கள் தம் எண்ணங்களைப் பிறர்க்குணர்த்த விழைகின்றனர். அப்பொழுது மொழி உண்டாகின்றது. ஆதியில் மக்கள் ஊமரும் செவிடரும் பேசுவதுபோலச் சாடைகளாலும் சைகைகளாலும் முகக்குறிகளாலும் பேசினர். இது நடிப்பு முறையில் உள்ள பேச்சு. இம்முறையிலிருந்தே நாடகத் தமிழ் வளர்ச்சியுற்றது. மக்களைச் சூழ்ந்து பலவகை இயற்கைப்பொருள்களும் குருவிகள் விலங்குகளும் இருந்தன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஒலியை எழுப்பின. இது ஆதிமக்களின் கவனத்துக்கு வந்தது. அவர்கள் இவ்வொலிகளை உற்றுக்கேட்டு அவ்வொலிக்குறிகளை அவ்வப்பொருள்களைக் குறிக்க வழங்கினர். கா கா எனக் கத்தும் பறவையைக் காகம் என்றும், கூ கூ எனக் கூவும் குருவியைக் குயிலென்றும், மா என்று அழும் விலங்கை மாடு என்றும் வழங்குதல் இதற்கு எடுத்துக்காட்டு. இப்பொழுது நடிப்போடு ஒலிக்குறிகளும் கலந்த மொழி உண்டாயிற்று. அதன்பின்பு அவர்கள் தம்மைச் சூழ்ந்திருந்த எல்லாப்பொருள்களையும், குணங்களையும், செயல்களையும் குறிக்க ஒவ்வோர் ஒலிக்குறிகளை அமைத்து ஒலிமுறையான மொழியை ஆக்கிக்கொண்டனர். இன்றும் பேச்சாளர் மேடைகளில் நின்றுபேசும்போது பேச்சுக்கேற்ற பல அபிநயங்களைக்காட்டுகின்றனர். இவை பழைய பேச்சு வழக்கின் தேய்வுகளே. ஆதிமக்கள் சொற்களை ஆக்குவதற்குக் கைக்கொண்ட [1] காரணங்கள் (மொழிப்பொருட்

---

1 "மொழிப்பொருட்காரணம் விழிப்பத்தோன்றா." (தொல்-உரி. 96)
"எல்லாச்சொல்லும் பொருள் குறித்தனவே." (தொல் - பெயர். 1)

காரணம்) பெரும்பாலும் இன்று நம்மால் அறிந்து கூறமுடியாமல் இருக்கின்றன.

சொற்கள் தலைமுறை தலைமுறையாக நீண்ட காலம் தொடர்ந்துவருகின்றன. காலந்தோறும் புதிதாக அறியப்படும் பொருள்களையும் செயல்களையும் குறிக்கப் புதிய சொற்கள் தோன்றும். இவ்வாறு ஒருவகையில் மொழி வளர்ந்து கொண்டு செல்லும்போது பழைய சொற்கள் சில வழக்கொழியும்; அவற்றின் இடத்தைப் புதியசொற்கள் சில ஏற்கும். இதனால் மக்கள் வழங்கும் மொழியில் காலந்தோறும் வேறுபாடுகள் காணப்படும். முன்னோர் எவ்வாறு சொற்களை உச்சரித்தார்களோ அவ்வாறு அவைகளை உச்சரிக்க அறிதலும், அவைகளை அவர்கள் பயன்படுத்திய மரபில் பயன்படுத்துதலுமே திருந்திய மொழிப்பயிற்சியாகும். பரத நாட்டியம் போன்று நடிப்பு மாத்திரத்திலுள்ள கூத்தைத் தமிழர் நாடகத் தமிழ் என வழங்கினர். மக்களின் அக உணர்ச்சிகளுக்கேற்ப எழும் இயற்கை ஒலிகளைப் பின்பற்றி, மகிழ்ச்சி, வீரம், சோகம்போன்ற உணர்ச்சிகளை எழுப்புந் தொனியிற் பாடப்படும் பாடல்கள் 'இசைத்தமிழ்' எனப்பட்டன. இவைபோலல்லாத பாடல்களும், இலக்கணங்களும் 'இயற்றமிழ்' எனப்பட்டன.

ஆதிகாலத் தமிழுக்கும் பிற்காலத் தமிழுக்கும் சிறிது வேறுபாடு உண்டு. "மொழிகள் தற்காலம் தாங்கி நிற்கும், விகுதி, வேற்றுமை யுருபு முதலிய குறியீடுகள் யாவும், நாளடைவில் வந்து புகுந்தன. இது மொழியாராய்ச்சியாளர் கண்டு அறுதியிட்ட முடிவு. தனியே நின்று பொருள் பயவாக் குறியீடுகளாகிய இவ்வுருபுகள் யாவும் தனியே நின்று பொருள் தந்து உதவிய மொழிகளின் சிதைவில் வந்த மிச்சமெனவும் அவர்கள் துணிந்துள்ளார்கள். ஒரு காலத்தில்

திணை பால் இடம் சுட்டா வினைமுற்று ஆட்சி நடைபெற்றிருக்கலாம் என்றும் துணியலாம். மலையாளத்தில் திணை பால் இடம் சுட்டாது காலம் ஒன்றனையே சுட்டும் வினைமுற்று ஆட்சி காணப்படுகின்றது.''

மொழி, எழுத்துநிலை இலக்கியநிலை இலக்கணநிலை என்னும் நிலைகளை முறையே எய்துகிறது. உலகியல் மொழியின் தெளிவே செந்தமிழ்.

பேச்சுமொழி, எழுத்துநிலை அடையும்போது ஒரு சீர்திருத்தமும், எழுத்துநிலை கடந்து இலக்கியநிலை பெறும்போது ஒரு திருத்தமும், இலக்கிய நிலையில் நின்று இலக்கண நிலை அடையுமிடத்து இன்னொரு திருத்தமும் அடைகின்றது.

*கொடுந்தமிழென்பது மக்களிடையே எளிய வழக்கிலுள்ள தமிழ். கொடுமை - வளைவு "இயற்கைக்கலையின் திட்டத்தையும் மொழிவரலாற் றுண்மையையும் கைக்கொண்டு அவற்றின் வழி நோக்கின் திணை பால் இடம் விகுதிக் குறியீடனைத்தும் வினைமுற்றுச்சொற்களுக்குப் பிற்காலத்துத் தான் வந்தடைந்தனவென்பது போதரும். பன்னெறிப்பட்டு வரம்பு உணர்த்தற்கின்றிப் பேச்சுநிலையில் மாத்திரமிருந்த மொழியை இலக்கண வரம்பு கொடுத்துச் செந்தமிழாக்கின காலத்துக்குச் சிறிது முன்னர் இவை வழக்கிற் புகுந்திருக்கலாம்.

"இலக்கணநூல்கள் இயற்றப்பெற்ற காலத்தில் அந்நூல்கள் விதித்த வரம்புக்கு உட்படாதுநின்ற இயற்கைமொழி

---

* The copious-literature is written in some-what artificial dialect distinguished by the term perfect (sen) from the colloqual called rude, much in the same way as in Aryan India Sanskrit (the purified) is contrasted with prakrit (the vulgar). India's past, p. 214 A-A macdonell.

ஒன்று இருந்திருக்கவேண்டுமெனப் போதிய நியாயங்களால் ஊகிக்கலாம். அவ்வியற்கை மொழியில் திணை பால் இடஞ் சுட்டா வினைமுற்று வழக்குப் பிரயோகம் நடைபெற்றிருக்க வேண்டுமெனவுந் துணியலாம்.

"மொழியுற்பத்திக்காலத்தில் முதற்றோன்றியனவாகிய பொருட்குறிப்பும், இயக்கப்பண்புக்குறிப்பும், நிலைப்பண்புக்குறிப்பும்பற்றிய பெயர்ச்சொல் வினைச்சொல் உரிச்சொல் என்னும் மூன்றையும் நீக்கிய பிறசொற்களெல்லாம் இடைச்சொல் என்னும் ஒரு பெயருள் அடக்கப்பட்டுள்ளன." 1

அரப்பா மொகஞ்சோதரோப் புதைபொருள் ஆராய்ச்சியிற் கிடைத்த பட்டையங்கள் சிலவற்றை ஹெரஸ்பாதிரியார் வாசித்துள்ளார். இப்பட்டையங்களை ஒலிமுறையில் வாசிப்பதற்குக் கருவியாயிருந்தவை பழைய சுமேரிய எழுத்துக்களே யாகும். மொழிகளின் இயற்கை என்னும் நூலில் மாக்ஸ் மூலர் என்னும் பண்டிதர் சீர்திருந்திய மக்களின் மொழிகள் மாற்றமெய்தும் இயல்பையே இழந்துவிடுகின்றன எனப் புகன்றுள்ளார். இதற்குத் தமிழ்மொழி ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.[2]

இந்தியநாட்டுள் ஆரியர் பரசிகர், ஐரோப்பிய கிரேக்கர், ஸ்கிதியர், கன்ஸ் (Huns) அப்கானியர், தாத்தாரியர், மங்கோலியர், அராபியர் முதலிய பல இனமக்கள் புகுந்து இந்திய மக்களுடன் கலந்துள்ளார்கள். அதனால் புதிய மக்கட் கூட்டங்களும் புதிய மொழிகளும் எழுந்தன. 3 றைஸ்லி என்

---

1 புறநானூற்றின் பழமை—K. N. சிவராச பிள்ளை.

2. The languages of the highly civilised nations on the contrary become more and more stationary and sometimes seem almost to loose the power of change. - Science of language - 1864.

3. The people of India - S. H. Risely.

னும் ஆசிரியர் இந்தியமக்கள் என்னும் நூலிற் கூறியிருப்பது வருமாறு:

மேற்கு இந்தியாவில் வாழ்வோர் ஸ்கிதிய திராவிடர். இப்பிரிவில் மராட்டியப்பிராமணர் குன்பியர் (Kunbis) குறுக்கர் முதலியோரடங்குவர். இவர்கள் ஸ்கிதியர் திராவிடர் கலப்பிற்றோன்றினோர். பஞ்சாப், சிந்து, கூர்ச்சரம், இராசபுத்தானா, மத்திய இந்தியா முதலிய இடங்களில் ஸ்கிதியர் ஒருபோது காணப்பட்டனர். ஆரியத்திராவிடர் ஐக்கியமாகாணத்திலுள்ள அக்ரா, அயோத்தி, இராசபுத்தானா, பிகார் முதலிய இடங்களில் காணப்படுகின்றனர். மங்கோலிய திராவிடர் வங்காளத்தின் தென்பாகத்திலும், ஒரிசாவிலும் காணப்படுகின்றனர். நெபாளம், அசாம், பர்மா, இமய மலைப் பக்கங்களிலுள்ள தமிழ் மக்களின் கண்கள் மங்கோலிய மக்களின் கண்கள் போன்றன. பர்மியர், மங்கோலியருடன் கலந்த தமிழர். துருக்கிய இரானிய தமிழர் பலுச்கிஸ்தானத்திலும் மேற்கு எல்லைப்புறங்களிலும் காணப்படுகின்றனர். அராபிய அல்லது அப்கானிய கலப்புடைய தமிழர் தோற்றத்தில் ஸ்கிதியர் அல்லது துருக்கியரைப் போன்றோர். இவர்கள் பல இன மக்களின் கலப்பினால் தோன்றியவர்கள் ஆகலாம். திராவிடர் இலங்கைமுதல் கங்கை வெளிவரையிற் காணப்படுகின்றனர்.

## எழுத்து.

மக்கள் பேச்சினால் தமது எண்ணங்களை அண்மையிலுள்ளவர்களுக்கு விளக்கினார்கள். சேய்மையிலுள்ளவர்களுக்குத் தம் எண்ணங்களை விளக்குவதற்கு அது பயன் அளிக்கவில்லை. ஆகவே சேய்மைக்கண் உள்ளவர்களுக்கு தம் கருத்துக்களை உணர்த்தும் முகத்தான் எழுத்துக்கள்

தோன்றின. ஆதியில் மக்கள் தங்கருத்துக்களைச் சித்திரங்கள் வாயிலாக விளக்கினர். ஒருவன் மற்றொருவனை வாளினுற் கொன்முன் என்னும் கருத்தை வெளியிட வேண்டுமாயின், கீழே ஒருவன் உதிரம் நாற்புறமும் பரவும்படி படுத்துக்கிடப்பதுபோலவும், மற்றொருவன் கையில் வாளை வைத்துக்கொண்டு ஓங்கி வெட்டுவதுபோலவும் எழுதிக்காட்டுவது வழக்கம். இவ்வகைச் சித்திரங்களும், உருவக் காட்சிகளும் மனிதருடைய புறத்தூறுப்பைப்பற்றிய செயல்களைக் காட்டுவதற்காக மாத்திரம் பயன்பட்டு வந்தனவேயன்றி, மனத்தின் நிகழ்ச்சிகளாகிய கோபம், பொறுமை, துக்கம், மகிழ்வு, செருக்கு, வீரம், பயம் முதலிய தோற்றங்களைக் காட்டுவதற்குப் பயன்படவில்லை. ஆகவே மக்கள் இவ்வகை மனத்தோற்றங்களையும் மேற்படி உருவங்கள் மூலமாகத் தெரிவிக்கவெண்ணிப் பாடுபட்டு வந்தமையால், அவர்கள், சித்திரவேலையிலும் கல், மரம் முதலியவற்றால் உருவங்களைச் செதுக்குவதைப்பற்றிய வேலைகளிலும் திறமையடைந்தனர். எழுத்துக்கள் உண்டாயிராத காரணத்தினாலேயே ஆதியில் சித்திர வேலைகளும் உருவம் செதுக்கும் வேலைகளும் வளர்ச்சியடைந்திருந்தனவென்று கூறலாம்.

சித்திரங்கள் பெரும்பாலும் கட்புலனாகும்பொருள்களையன்றிக் கட்புலனாகாத மனவுணர்ச்சிகளையும் பிறபண்புகளையும் விளக்குவதற்குப் பயன்படாமலிருந்தன. ஆகவே மன உணர்ச்சிகளையும் பண்புகளையும் உணர்த்தும் சில குறியீடுகள் சித்திரங்களுடன் கலந்து எழுதப்பட்டன. இது அறிவைக் குறிக்கக் கண்ணையும், காலத்தைக் குறிக்க வட்டத்தையும், நன்றியின்மைக்கு விரியன் பாம்பையும், விடாமுயற்சிக்குத் தேனீயையும், வெற்றிக்குக் கருடனையும் எழுதிக்காட்டுதல்போன்றது. பேரு (தென் அமெரிக்கா) தேசமக்கள்

எழுத்துக்குப் பதில் கயிறுகளில் பலவாறு முடிச்சுகளிட்டு வழங்கினர்.[1]

இவ்வாறு எழுதுவதாலும் மக்கள் உச்சரிப்பு முறையான மொழியில் தம் எண்ணங்களைப் பிறர்க்கு உணர்த்த மாட்டாதவர்கள் ஆயினர். ஆகவே அவர்கள் சில சித்திரங்களை எழுதி அச்சித்திரங்கள் குறிக்கும் பொருள்களுக்குரிய பெயர்களின் முதல் அசைகளைச் சேர்த்து வாசிக்கக் கருதிய சொற்களின் உச்சரிப்பு வரும் முறையில் எழுத ஆரம்பித்தார்கள். இது கத்தரிக்காயையும் அதன் பக்கத்தே ஒரு கோலையும் எழுதிக் கத்தரிக்கோல்என வாசித்தல்போன்றது. இம்முறையில் எழுதுவதும் மிகக் கடினம் அளித்தமையின் ஒவ்வொரு சொல்லின் உச்சரிப்புக்கும் ஒவ்வொரு குறியீடு அமைக்கப்பட்டது. இந்நிலைமையிலுள்ளனவே சீன எழுத்துக்களும், மொகஞ்சொதரோ எழுத்துக்களுமாகும். பின்பு மொழியில் எத்தனை ஒலிகள் இருக்கின்றன என்று உச்சரித்து அறிந்து ஒவ்வொரு ஒலியையும் குறிக்க ஒவ்வோர் குறியீடு அமைக்கப்பட்டது. அக்குறியீடுகளாகிய எழுத்துக்களைச் சேர்த்துச் சொல்லை உச்சரிக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. எகிப்திய மொழியில் சித்திர எழுத்துக்கள் அடைந்த பலவகை மாற்றங்கள் அறியப்படுகின்றன. சித்திர எழுத்துக்கள் மண்தகடுகளில் சதுரமான நாணற்குச்சிகளால் எழு

---

1. The use of the knots in code for the purpose of reckoning and recording numbers seems to have been as universal as the figures of the cat's cradle in the practices of the premitive peoples. Both may be said to be indigenous to all lands in which the arts of spinning, weaving and dyeing have been cultivated. In two note-worthy cases tradition makes the knotted *Kude* serve as letters. In China knot records are said to have preceded the knowledge of writing. -The Ancient *Quipu* - L. Leland Locke.

தப்பட்டபோது கிறுகளாக அமைந்தன. அவ்வகை எழுத்துக்கள் ஆப்பெழுத்துக்கள் எனப்பட்டன.

தமிழ் எழுத்துக்கள் சித்திர எழுத்தில் ஆரம்பித்துப் படிப்படியான பல மாற்றங்கள் அடைந்துள்ளன. தமிழர் பயன்படுத்திய அவ்வகை எழுத்துக்கள் ஒன்றேனும் நமக்குக் கிடைத்தில; சின எழுத்துக்கள் போன்ற அரப்பா மொகஞ்சொதரோ எழுத்துக்களே கிடைத்துள்ளன. சித்திர எழுத்துக்கள் தமிழில் வழங்கின என்பதற்குரிய பிரமாணங்கள் யாப்பருங்கலவிருத்தி மேற்கோள், திவாகரம் முதலிய நூல்களிற் காணப்படுகின்றன.

"காணப்பட்ட வுருவமெல்லாம்
மாணக்காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப்படுவ துருவெழுத் தாகும்." (யாப்பருங்கலவிருத்தி-மேற்கோள்)

"உருவே யுணர்வே யொலியே தன்மை
எனவீ ரெழுத்து மீரிருபகுதிய." (இலக்கணக் கொத்து மேற்கோள்)

மொகஞ்சொதரோ எழுத்தினின்றும் பிராமி எழுத்துத் தோன்றிற்று. இது அசோகன் காலத்தும் அதற்கு முன்பும் வட பிராமி தென் பிராமி என இரு வகையாக நடைபெற்றது. பிராமி எழுத்துக்கள் கி. மு. 9-ம் நூற்றாண்டுக்கு முன்பு உள்ளதென்பதற்கு ஆதாரமுண்டு. இவ்வகை எழுத்துப் பொனிசியாவிலே மோப்நகரின் (Moab) அரசனது (கி. மு. 850) பட்டையத்திற் காணப்படுகின்றது. இக்காரணத்தினல் பொனிசிய வியாபாரிகளிடமிருந்து இந்தியமக்கள் எழுத்தெழுதும் முறையை அறிந்தார்கள் என்று வரலாற்று

நூலார் எல்லோருந் துணியலாயினர்.[1] ஆனல், மொகஞ்சொதரோ எழுத்துக்கள் ஆராயப்பட்டபின் இம்முடிவு நேர்மாறுக மாறியுள்ளது.[2] பிராமி எழுத்துக்களினின்று பொனிசிய எழுத்துக்களும், பொனிசிய எழுத்துக்களினின்று கிரேக்க, உரோமை எழுத்துக்களும், இவைகளினின்றும் ஏனைய ஐரோப்பிய எழுத்துக்களும் தோன்றின. பிராமி எழுத்துக்களினின்றும் தமிழ் வட்டெழுத்துக்களும், வட்டெழுத்துக்களிலிருந்து இக்காலத் தமிழெழுத்துக்களும் வளர்ச்சியடைந்தன. வட்டெழுத்து அண்மைக்காலம் வரையில் மலையாளத்திலே கோலெழுத்து என்னும் பெயருடன் வழங்கிற்று.

## மத்தியதரை மக்கள் இனத்தினர் எல்லோருக்கும், மொழியும் எழுத்தும் ஒன்றே.

உலகில் மக்கட்குலம் எப்படி ஒன்றுயிருந்ததோ அப்படியே மொழியும் ஒன்றுயிருந்ததென்பது மொழிநூலார்

---

1. Brahmi has been traced back to the Phoenician type of writing represented in the inscription of Meshu king of Moab. (850 B.C). Dr. Scoff however in his remarkable commentary to the Pereplus of the Erthrean sea, claims a Phoenician origin for the Dravidian alphabet (p. 229)—G. Elliot Smith.

2. It is also shown that those scholars were not mistaken who connected Brahmi with the south Semitic and Phoenician scripts. For there is much evidence to show that they were also derived from the script of Harappa and Mohenjo-Daro.—G. R. Hunter.

The two Brahmi Scripts one of northern and the other of Southern India are developments of Mohenjo-Daro script, that of South India is the direct continuation and devolopment of Mohenjo-Daro script by Dravidian people of South India. Several signs of the Mohenjo-Daro script are found in the prehistoric pottery of Tinnevelly District in rock inscriptions of Nilgiris and tombs of Hyderabad States.—Rev. Fr. Heras.

நன்கு ஆராய்ந்து காட்டிய உண்மை. உலகில் மிகப் பழைய மக்கள் மத்தியதரை முதல் கிழக்கிந்தியத் தீவுகள் வரையில் வாழ்ந்தோராவர்.[1] இந்நாடுகளில் வழங்கிய முதியமொழிகள் ஓர் அடிமரத்தினின்றும் கவர் விட்ட கொம்பர்கள் போன்றன என்று ஆராய்ச்சி வீரர் நிலைநாட்டியுள்ளனர். இதனால், தமிழ், ஆதி மொழிக்கு மிக அண்மையிலுள்ளதெனத் தோன்றுகின்றது. சிந்துநதிப்பள்ளத்தாக்கிற் கிடைத்த முத்திரைகளிற் காணப்பட்ட எழுத்துக்களோடு உலகின் பல பாகங்களில் வழங்கிய எழுத்துக்களையும் ஒப்புநோக்கிய கெரஸ் பாதிரியார் கூறியிருப்பது வருமாறு:

"மொகஞ்சொதரோ எழுத்துக்களைப்போன்றன இலிபிய வனாந்தரத்தை அடுத்த செலிமா என்னுமிடத்திற் காணப்படுகின்றன. இதனைப் பேராசிரியர் இலாங்கடன் என்பவரும் குறிப்பிட்டுள்ளார்.

"மொகஞ்சொதரோ எழுத்துக்குறிகள் போன்ற (ஸ்பானிய எழுத்துக் குறிகளையும் அவைபோன்ற உச்சரிப்பு ஒலிகளையும் ஐபீரிய) மொழியிற் காணலாம். (இம்மொழி பாஸ்கு எனவும் வழங்கும்.)

---

1. It is clearly the long headed Mediterranean who have the strongest claim to a connection by blood with the Dravidians and are most likely to have used a Dravidic speech. May it be that these same Mediterranean - who are traceable across the whole south of the Africian belt - spoke agglutinative languages and that they, perhaps more than any others, were the race of the back of this far flung civilization of the chalcolithic age? - Mohenjo-Daro and Indus Civilization p. 42.

Sir John Evans in his Presidential Address to the British Association says: "Southern India was probably the cradle of human race". Investigation to relation to race show it to be possible that Southern India was once the passage ground by which the ancient progenitors of northern and Mediterranean races proceeded to the parts of the globe which they inhabit. - Cultural Heritage of India Vol. III, p. 677.

"எதிருஸ்கிய (பழைய இத்தாலிய) மொழி எழுத்துக்கள் இலிபிப மொழி இனத்தைச் சார்ந்தன. இம்மொழியில் மொகஞ்சொதரோ எழுத்துக் குறியீடுகளையும் உச்சரிப்பு ஒலிகளையும் காண்பது வில்லங்கமன்று.

"பிந்திய இலிபிய மொழி எழுத்துக்களும் நுமிதியபேபெரிய (Numidic and Berberic) எழுத்துக்களும் முன் குறிப்பிட்ட இயல்பினவே.

"மினோவ (Crete) எழுத்துக்கள் மிகப் பழையன. இவை மொகஞ்சொதரோ எழுத்துக்களோடு கிட்டிய ஒற்றுமையுடையன. சைபிரஸ் எழுத்து மினோவ எழுத்தின் ஒரு பிரிவினதே.

"சில மொழிகள் எழுத்துக்கள் இல்லாமல் இருந்தன. அம் மொழிகளுக்குரியோர் திராவிட மக்களோடு ஊடாடிய பின் மொகஞ் சொதரோ எழுத்துக்களைக் கையாண்டனர். பின்பு அவர்கள் அவ் வெழுத்துக்களைத் தாமே வளர்ச்சி செய்தனர்.

"சுமேரிய மொழிக்கும் மொகஞ்சொதரோ மொழிக்கும் நெருங்கிய உறவு உண்டு. இக்கொள்கையைப் பேராசிரியர் இலாங்டன் தமது விரிவுரைகளில் நன்கு வலியுறுத்தியுள்ளார்.

"ஆப்பெழுத்துக்கள் சுமேரிய எழுத்துக்களினின்றும் பிற் காலங்களில் வளர்ச்சியடைந்தன.

"பழைய எல்லம் மொழி எழுத்துக்கள் இன்னும் வாசிக்கப் படாமல் இருக்கின்றன.

"பழைய சீன எழுத்துக்கும் மொகஞ்சொதரோ எழுத்துக்கும் நெருங்கிய தொடர்புண்டு. இது இவ்வளவு காலமும் ஒருவர் கருத்தி லும் படவில்லை. மொகஞ்சொதரோ எழுத்துக்களும் பழைய சீன எழுத்துக்களும் ஒரு தாய் வயிற்றிற் பிறந்த இரண்டு பிள்ளைகள் என்று கூறலாம். கோயங் (Hoang கி. மு. 2500) கூற்றால் இது வலியுறுகின்றது.

"சாபிய அல்லது தென் அராபிய எழுத்துக்கள், இன்னும் மொகஞ்சொதரோ எழுத்துக்குறிகள் சிலவற்றைக் காப்பாற்றி வைத்திருக்கின்றன. கிழக்குத்தீவுகளில் எழுத்துக்கள் பெரும்பாலும் மொகஞ்சொதரோ எழுத்துக்களைப்போலவே யிருக்கின்றன; சில ஒன்றாகவே காணப்படுகின்றன."1

பேராசிரியர் சி. ஆர். கன்ரர் கூறியிருப்பது வருமாறு:

"துளையிட்ட பழைய இந்திய நாணயங்களிற் காணப்படும் அடையாளங்களும் மொகஞ்சொதரோ எழுத்துக்களைப் பின்பற்றியனவே. மொகஞ்சொதரோ எழுத்துக்களிலிருந்து பிராமி எழுத்து மாத்திரமன்று தென் அராபிய, மினேவ எழுத்துக்களும் பிறந்தன. மொகஞ்சொதரோ எழுத்துக்கள் தெற்கு ஆசியா வழியாக வந்து பொனீசிய கிரேக்க உரோமை எழுத்துக்களைப் பிறப்பித்திருக்கின்றன".2

"சுமேரியம் எல்லம் முதலிய மொழிகள் திராவிட மொழிகளோடு ஒலி முறையில் ஒற்றுமையுடையன. ஆகவே டாக்டர் சர் தேசி என்பவர் கிரேத்தா, இலிசிய, சுமேரிய, எல்லம் மொழிகள் ஒரே தொடர்புடையனவென்றும், ஐசியன் தீவுகள் சின்ன ஆசியா மெசபெதேமியா முதலிய நாடுகள் ஒரே நாகரிக இணைப்புடையனவாயிருந்தனவென்றுங் கூறுவர்." ("திராவிட இந்தியா" பக்கம் 41-42.)

எப்படி மத்தியதரை மக்களும் திராவிடமக்களும் ஒரே இனத்தவர்களாகக் காணப்படுகின்றார்களோ அப்படியே

---

1. Light of Mohenjo-Daro. - Fr. Heras - New Review - 1936. "Their underlying principles are the same, and there is very likelyhood that they all derived from one common origin went back to neolithic times. - Mohenjo-Daro and Indus Civilization - p. 41, Sir John Marshall.

2. Riddles of Mohenjo-Daro. - G. R. Hunter - New Review Vol. 3-p 314. There can be no doubt concerning the Idenitity of the Indus and the Easter Island scripts. - This same script has been found in seals precisely similar to Indian seals in various parts of ancient Sumer, at Susa and the border islands east of Tigris. - Prof. S. Langdon.

அவர்களது மொழியும் ஒரே இனத்தைச் சார்ந்தன என இக்கால மொழி நூலார் ஆராய்ந்து கூறியுள்ளனர். மொழி நூலார் கூறிய முடிவுகளை எல்லாம் ஒருங்கு வைத்து ஒப்பு நோக்கிய வெல்சு என்னும் ஆசிரியர் மத்தியதரை நாடுகளில் ஆதியில் வழங்கிய ஆரியமல்லாததும் சமத்தியம் அல்லாதது மாகிய மொழி, டாஸ்க்கு(Basque)எனப்படும் என்றும், அது திராவிட மொழிக்கு நெருங்கிய உறவுள்ளதென்றும் குறிப் பிட்டுள்ளார். அதன் சுருக்கம் வருமாறு:

பாஸ்கு மொழி, காக்கேசிய மலைப்பக்கங்களிற் பேசப் படும் மொழிக்கு இனமுடையது; ஒருகாலத்து அது மிக வும் பரவலை அடைந்திருந்தது; முந்திய சமத்திய மொழிக் கூட்டங்களாகப் பரந்து மத்தியதரை மக்களாற் பேசப்பட் டது; தெற்கு ஐரோப்பாவிலும் மேற்கு ஆசியாவிலும் வழங் கியது; இந்தியாவிலுள்ள திராவிட மொழிக்கு நெருங்கிய தொடர்புடையது.

மேற்குத், தெற்கு ஐரோப்பாவில் பத்தாயிரம் ஆண்டுக ளின் முன் மொழிக்கூட்டங்கள் தோன்றியிருந்தன. ஆரியம் வருதலும், அவை மறைந்தன. பழைய மொழியைச் சார்ந் தவை [1]கிரேத்தா இலிதிய மொழிகள், இவை [2]பாஸ்க்கு மொழியைச் சேர்ந்தவை ஆகலாம்.

மங்கோலியம், பாஸ்க்கு, காக்கேசியம் முதலிய மொழி களை இணைக்கும் மொழி சுமேரியமாக விருக்கலாம். இது மெய்யாகவிருந்தால், பாஸ்க்கு, காக்கேசியம், திராவிடம், மங் கோலியம் முதலிய மொழிகள் இன்னும் மிகப் பழைய மொழிகளாகும். ஆரியம் செமித்தியம் சமித்தியம் முதலிய

---

1. Crete 2. காக்கேசியம், திராவிடம், சுமேரியம், எல்லம் முதலிய மொழிக்குலங்கள்.

மொழிகளைத் தொடுக்கும் மொழி ஒன்று கண்டுபிடிக்கப் படாமலிருக்கலாம். குட்டி யீனும் விலங்குகள் எப்படிப் பல்வேறு முன்னவையிலிருந்து (ancestors) வளர்ச்சி யடைந்து பல்வேறு இனமாயிருக்கின்றனவோ அதுபோன்ற இனமே அம்மொழிகளுக்கும் இம்மொழிக்கும் இருக்கலாம்."[3]

## மொகஞ்சொதரோ எழுத்துக்கள்.

இவ்வெழுத்துக்களைப்பற்றிக் கொஸ் பாதிரியார் வெளியிட்டுள்ள சில உண்மைகளை ஈண்டுத் தருதும். "இவ்வெழுத்துக்கள் ஓவிய எழுத்துக்கள் தொடர்பானவை. இவை கிழக்குத் தீவுகள் முதல் ஸ்பெயின் தேசம் வரையில் வழங்கின. இவை ஓவிய எழுத்துக்களுக்கும் ஒலிமுறையில் எழுதப்படும் எழுத்துக்களுக்கும் இடைப்பட்டன; இந்திய நாட்டுக்கு அயலில் வழங்கிய எழுத்துக்களுக்கும் சின சுமேரிய எகிப்திய எழுத்துக்களுக்கும் இனமுடையன. மனிதன், மீன், பறவை, மரம், நாற்காலி, மேல், கீழ் என்பவற்றை அடையாளங்களாற் குறிப்பிட்டுக் காட்டுவது எளிது.

மொகஞ்சொதரோவில் வழங்கிய சொற்களிற் பல திராவிட மொழிகளிற் காணப்படுகின்றன. ஆகவே திராவிட மொழிக

---

3. Outline of History p. 85. - H. G. Wells.

They (philologists) find Basque more akin to certain similarly stranded vestiges of speech found in Caucasian mountains and they are disposed to regard it as a last surviving member, much checked and specialized, of a race very widely extended group of Pre-Hamitic languages, otherwise extinct, spoken chiefly by peoples of that brunet Mediterranean race which once occupied most of western and southern Europe and western Asia. They think it may have, been closely related to the Dravidian of India and the peoples of the heliolithic culture who spread eastward through East Indies to Polynesia and beyond. - Ibid P. 88.

ளுக்குத் தாய் மொகஞ்சொதரோ மொழி எனக் கூறலாம். திராவிட மொழிகளிற் காணப்படும் மொகஞ்சொதரோ மொழிச்சொற்களிற் பல தமிழிற் காணப்படுகின்றன. ஆகவே தமிழ் மற்றைய திராவிட மொழிகளிலும் மூப்பு உடையது என்று கருதப்படுகின்றது. மற்றைய திராவிட மொழிகளில் சில சொற்கள் காணப்படுகின்றன. துன்பத்தில் ஆழ்ந்திருத்தல் என்னும் பொருள்தரும் பகில் (Pagil) என்னும் சொல் கன்னடத்தில் உள்ளது. முதலிலும் கடையிலும் என்பதைக் குறிக்கும் கடிதல கொடிதல என்னும் சொல் துளு மொழியில் காணப்படுகின்றது. பழைய திராவிடச்சொற்கள் பிராகூய் மொழியிற் காணப்படலாம். கண் கல் என்னும் சொற்கள் க்கண் (Khan) க்கல் (Khal) என அம்மொழியில் வழங்குகின்றன.

"யான் மொகஞ்சொதரோப் பட்டையங்களிற் காணப்பட்டவற்றை ஒலிமுறையில் எழுதி வைத்திருந்து அவைகளை யாழ்ப்பாணம் சுவாமி ஞானப்பிரகாசருக்கு வாசித்துக் காட்டினேன். அவர் அவைகளின் இடையே இருபத்தைந்துசெய்யுட்களின் பகுதிகள் இருப்பதைக் கண்டுபிடித்தார். அப்பாட்டுக்கள் பலவகைப் பா இனங்களில் எழுதப்பட்டுள்ளன. அவற்றுள் ஐந்து, குறள்வெண்பாக்கள். படிப்பவர்கள் அதில் ஒன்றைக் கேட்க விரும்பலாம். ஆகவே அவற்றுள் ஒன்றை ஈண்டுத் தருகின்றேன்.

நண்றுறுறு தாக்குஅடு கார்முகில்ஊர் வேலிஒரூர்
எடுஎட்டு று உயர்எல் இர்ஆர்இரி பேர்கடவுள்

ஓர் ஊர் என்னும் ஆண்டை அடைகின்ற சத்தமிடும் உயரச்செல்லும் ஞாயிற்றின் இரண்டு வழிகளையுடைய பசு

சைக் (பயிர் ?) கடவுள் மலைமுகில்களும் இடியுமுடைய நாட்டுக்கு வெளியே உள்ளது.[1]

இன்னொரு பட்டையத்திற் காண்பது,

"கல்லர் மீனவர் காண் கடஎர் வல்விடடு
கல்குறவ வல் குரங்கர் நால்" என்பது.

கலந்த (உறவுகொண்ட) நாடுகளின் மக்களிடையே நாலு வலிய குரங்கர் தோன்றும் (அம்மக்களின்) கோட்டை வலிய காலுள்ள மீனவராற் பிடிக்கப்பட்டது என்பது இதன்பொருள்.

நல் நா விட்டில் என்பதற்கு விளங்குகின்ற வீடு என்று பொருள். நல் விளங்குதலைக் குறிக்கும். முகில் என்பது மழையில்லாத முகிலையும், கருமுகில் என்பது மழை முகிலையும் குறிக்க வழங்கப்பட்டுள்ளன.

கல்பேட் என்னும் ஆசிரியர் கோரியா மொழி இலக்கணம் திராவிட மொழிகளின் இலக்கணத்தை ஒத்திருப்பதை ஆராய்ந்து காட்டியுள்ளார்.[2]

## இடப்பெயரும் மக்கட்பெயரும்.

முற்காலத்தே ஊர்கள் பெரும்பாலும் கோயிலைச் சுற்றி எழுந்தன. அவ்வாறு எழுந்த இடங்கள் கோயிலின் பெயர்களால் அறியப்பட்டன.[3] மேற்கு ஆசியாவிலே அசுர் என்

---

1 இச்செய்யுளிலுள்ள சொற்கள் சில நமக்கு விளங்கக்கூடவில்லையாயினும் அவற்றுட் பல விளங்கக்கூடியனவாயிருக்கின்றன.

2. H.B. Halbert has issued a comparative grammar of Korian and certain of Dravidian languages of India to demonstrate the close affinity he finds between them. - Ibid - p. 45.

3. The names of towns have continually been derived from those of gods there worshipped as has been pointed out by several archaeologists. - The Syrian stone lore, p. 18.

னும் கடவுளின் கோயில் எழுந்த இடம் அசிரியா எனவும், பேபெல் என்னும் கோயில் தோன்றிய இடம் பபிலோன் எனவும், நினேவ் என்னும் ஆற்றுத் தெய்வம் கோயில் கொண்ட இடம் நினேவா எனவும் பெயர் பெற்றன. சிறிய ஊர்கள் பல சேர்ந்தது ஒரு நாடாகும். சிறிய ஊர்களில் வாழும் மக்கள் சிறப்பாக நாட்டின் பெயரால் அறியப்பட்டனர். ஒரு நாட்டு மக்கள் இன்னொரு நாட்டிற் சென்று குடியேறினால் அந்நாடு குடியேறிய மக்களின் பெயரை ஏற்றலும் இயல்பு. இது பிரித்தனில் அங்கிளர் குடியேறினமையின் அது அங்கிள்லாந்து (இங்கிலாந்து) எனப்பட்டது போன்ற வழக்கு. ஆதியில் ஆண்ட அரசனின் பெயர்களைக்கொண்டு இடங்களுக்குப் பெயர் உண்டாவதுமுண்டு [1].

## மக்கட் பெயரிலிருந்து மொழிப்பெயர்.

மக்கள் எப்பெயரால் அறியப்படுகிறார்களோ அப்பெயரிலிருந்தே மொழிப்பெயர் தோன்றுதல் இயல்பு. சேர்மனி, சேர்மனியர், சேர்மனியம், கிரீஸ், கிரேக்கர், கிரேக்கம்; மலையாளம், மலையாளர், மலையாளம்; தெலுங்கானம், தெலுங்கர், தெலுங்கு போன்றன இதற்கு எடுத்துக்காட்டு.

---

1. We read in Mahabharata, that through the grace of Deerghatamuni, Sudeshna wife of Bali bore him five sons, Anga, Vanga, Kalinga Pundra and Sumha respectively, and the provinces ruled over by them were called after them. We find this story narrated also in the Brahmapurana. Kalinga is mentioned in the sutras of Panini. - Orissa and her remains. - Ancient and Modern. p. 7. - Mana Mohan Ganguly.

கந்தபுராணத்திலே அண்டகோசப்படலத்தில் நவகண்டங்களுக்குப் பெயர் வந்தது அந்நாடுகளை ஆண்ட அரசர்களின் பெயரால் எனக் கூறப்பட்டுள்ளதும் ஈண்டு கருத்திற்கொள்ளத்தக்கது.

தமிழ்ச்சொல் தோற்றமும் இவ்வகையினதே.

தமிழ் ஆதியில் மொழிக்கு உண்டான பெயரென்றும், அப்பெயரினின்றும் மக்களுக்கும் நாட்டுக்கும் பெயருண்டா யிற்றென்றும், அண்மைக் காலத்து ஆசிரியர்கள் பிறழ உணர்ந்தமையால் தமிழின் தோற்றத்தைப்பற்றிப் பலவாறு கூறியிருக்கின்றனர். மக்கட் பெயரிலிருந்தே மொழிப்பெயர் உண்டாதல் விதி என்பதை விளக்கி ஆசிரியர் சிவராசபிள்ளை அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய கட்டுரையின் பகுதி வருமாறு :

"அதனை (மொழியைப்) பேசும் மக்களிலிருந்து மொழி பெயர் பெற்றதெனக் கொள்வதே தகுதி. மொழிப்பெயரி லிருந்து மக்களின் பெயர் தோன்றிற்றென்பது ஏற்புடைத் தன்று. சங்ககாலப் புலவர்களின் சொல்லாட்சியிலிருந்து தமிழ் என்பது மொழிப்பெயரிலும் பார்க்கச் சாதிப்பெய ரளவில் மிகப்பழமையுடையதெனத் தெரிகின்றது. இது உலகின் மற்றப் பாகங்களிலுள்ள மக்கள் வரலாற்றோடும் ஒத்திருக்கின்றது. ஆகவே இதுகாறும் தமிழ்ச்சொல் தோற்றத் தைப்பற்றிக் கூறப்பட்டன அடியோடு மாறி விடுகின்றன. தமிழின் தோற்றத்தைக் கூறவந்த எல்லோரும் அது சாதி யையன்றி மொழியையே குறித்ததெனக்கொண்டனர். உண் மை இதற்கு எதிர்மறை. இச்சொல்லின் தோற்றம் குலத் தொடர்பாகவன்றி மொழித்தொடர்பாக இருத்தல் முடி யாது. அநேக சாதிகளின் பெயர்களைப்போலக் குலத்துக் குரிய இப்பெயரும் விளக்கப்படுத்தக்கூடாமல் இருக்கின்றது. இச்சொல்லின் தோற்றத்திற்குரிய காலம் எல்லா வரலாற் றுக் காலத்தையும் துளைத்துச்சென்று, நம்மை இவ்வுலகம் முழுமையிலும் வாழும் மக்கட்குலங்கள் எல்லாவற்றின்

பிறப்பையும், அவை பரவுவதையும் கண்ட ஓர் உலகத்துக்குக் கொண்டு செல்கின்றது. அது எல்லா வரலாற்றையுங் கடந்து சென்று மனிதப்பழமையின் ஆழத்திலுள்ள வரலாற்றுக்கு அப்பாற்பட்ட காலம் ஒன்றைக் காட்டுகின்றது. அக்காலத்தைப்பற்றி மக்கட் குல ஆராய்ச்சி, கனவு காண்கின்றதேயன்றி அதைப்பற்றிய முடிவு ஒன்றும் கூறவில்லை. அவ்வகையான திரையின்பின் இச்சொல்லும் இருக்கின்றது. இம்மொழி உலகிலுள்ள எல்லா மொழிகளிலும் பழமையுடையது."[1]

## தமிழ்.

தமிழ் என்னும் சொல் மொழிக்குப் பெயர் மட்டுமல்லாமல் இனிமை நீர்மை என்னும் பொருள்களையும் உணர்த்தும்.[2] இலக்கியங்களில் 'தேனுறை தமிழ்'[3] 'தமிழ் தழீஇய சாயல்"[4] எனத் தமிழ் இனிமை என்னும் பொருளில் ஆளப்பட்டுள்ளது. இச்சொல் இனிமையை உணர்த்தற்குரிய காரணம், அதன் மூலம் முதலியன அறிய முடியாதன. சிவன், ஞாயிறு, முருகன் முதலிய கடவுளர்களோடும் தமிழர் மதத்தோடும் தமிழ் தொடர்புடையதென்பது தமிழ் நாட்டில் வழங்கும் பழைய ஐதீகம். இவ்வைதீகம் பற்றியே, "தென்மொழியை உலகமெலாந் தொழுதேத்தும் குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" "செந்தமிழ்ப் பரமாசிரியனாகிய முருகக்கடவுள் அகத்தியருக்குத் தமிழ் அறிவுறுத்தினர்" என்பன போன்ற வாக்கியங்கள் எழுந்தன.

---

1. Dr. Krishnaswamy Iyengar's commemoration volume p. 346 - The derivation of the word. Tamil- K. N. Sivaraja Pillai.

2. இனிமையு நீர்மையுந் தமிழெனலாகும் (பிங்கலம்) 3. கல்லாடம் 4. சிந்தாமணி.

"சந்தனமும் புழுகுந் தண்பனி நீருடனே
கொந்தலர் சண்பகமுங் கொண்டு வணங்கினேன்
வந்திடும் வல்வினைநோய் மாற்றுவ துன்பதமே
செந்தமி ழாகரனே சிவசிவ சூரியனே,"[1] (பழையபாடல்)

"அசலே சுரர்பத் திரனே குணதிக்
கருணோ தயமுத் தமிழோனே" (திருப்புகழ்)

"சுள்ளொன் றெரிக்குஞ் சுடரோன்பால் தோன்றியுயிர்
உள்ளத் தலக்கி யுலாவலின்—தெள்ளுபுகழ்ப்
பண்டைப் பெரியார்தாம் பைந்தமிழை ஒண்டமிழ்
ஒண்டமி ழென்மனார் போந்து"[1]

இச்செய்யுட்கள் ஞாயிற்றினின்றும் தமிழ் பிறந்ததென்னும் வழக்குண்மையை விளக்குவன. சிவன், முருகன் என்னும் பெயர்கள் ஆதியில் ஞாயிற்றைக் குறிக்க வழங்கின. ஆகவே தமிழ் என்னும் பெயர் ஞாயிற்றைக் குறிக்க வழங்கிய யாதோ பழைய சொல் ஒன்றினின்றும் பிறந்ததெனவைகித்தல் பிழையாகாது. இது ஒருபோது எல் என்னும் சொல்லினின்றும் பிறந்திருக்கலாமென்பதைப் பண்டைத் தமிழர் என்னும் எமது நூலிற் காட்டியுள்ளேம்.

## "தமிழ்ப்" பெயர்க்காரணம்.

தமிழ் என்னும் சொற்பிறப்பைப்பற்றி யாம் எமது கருத்தை வெளியிடுகின்றேம். இது முடிவானதன்று; ஏனையோர் கூறியவைகளோடு ஒப்பிட்டு ஆராயத்தக்கது. இவ்வுலக மத்தியில் பெரிய பூகண்டம் (நாவலந்தீவு) ஒன்று

1. மாகறல் கார்த்திகேய முதலியார் மொழிநூலிற் கண்டது. இவர் தாமம் என்னும் ஞாயிற்றைக் குறிக்கும் சொல்லினின்றும் தமிழ் தோன்றிற்றென்பர்.

இருந்ததென்றும் அதன் மத்தியில் மேருவும் அதனைச் சூழ்ந்து இளாவிருதமும் உள்ளதென்றும், இலங்கைத் தீவு மேரு மலையின் ஒரு கொடுமுடி என்றும் புராணங்கள் கூறு கின்றன. இளாவிருதம் என்பதில் விருதம் நாட்டைக் குறிக் கும். இளா என்பது எல் என்பதன் திரிபு. இளா விருதத்தின் பகுதியாகிய இலங்கை ஈழமென வழங்குகின்றது. ஈழம் என் பதன் அடி எல் என்றே தமிழ் ஒப்பியல் அகராதியில் நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் அவர்கள் காட்டியுள்ளார்கள். எல் லம் என்பது இலங்கையின் பழைய பெயர். இலங்கை என் னும் சொல்லின் அடியும் எல். இலங்கை மக்களின் பழைய மொழி எலு என வழங்கிற்று. இதனாலும் இலங்கையின் பழைய பெயர் எல் அல்லது எல்லம் என நன்கு துணிதும். இலங்கையை ஆண்ட முதல்அரசன் சிங்கமரபினன். ஆகவே எல்லம் சிங்கஎல்லம் எனப் பெயர் பெற்றது. மக்கள் சிங்க எல்லர் என்று அறியப்பட்டனர். எல்லம் ஈழமானபோது சிங்கஎல்லம் சிங்களமாயிற்று. ழகாம் ளகரமாதலன்றி ளக ரம் ழகரமாதலில்லை எனச் சிலர் கூறுவர். சோளர் என்றி ருக்கவேண்டியது சோழர் என வழங்குவதை நோக்குக. ளகரம் ழகரமாக உச்சரிக்கப்படும் சொற்கள் பல மொழி யாராய்ச்சியால் அறியப்படுகின்றன.

மெகஸ்தினஸ் காலத்தில் இந்தியாவையும் இலங்கையை யும் ஒரு சிறிய ஆறுபோன்ற கடல் பிரித்தது. ஆகவே ஒரு காலத்தில் தென்னிந்தியாவும் இலங்கையும் ஒன்றுபட்டு இருந்தன எனக்கொள்ளுதல் பிழையாகாது. ஒருகாலத்தில் தாமிரவர்ணி ஆறு இலங்கைவரையிற் சென்றதெனக் கருதப் படுகின்றது. தாபிரபேன் என்னும் இலங்கையின் பெயர் தாமிரவர்ணி என்பதன் திரிபு என வரலாற்று ஆசிரியர்கள் சிலர் எழுதியுள்ளார்கள். இவைபோன்ற சான்றுகளால் இங்

தியா இலங்கை என்னும் இரு நாடுகளும் ஒன்றுசேர்ந் திருந் தனவென்று துணிதும். தென் இந்தியாவும் இலங்கையும் சேர்ந்த நாவலந்தீவின் பகுதி: முன்பு எல்லம் என்றே வழங்கி யிருத்தல் கூடும். சுமேரிய மக்கள் தென்னிந்தியா அல்லது இலங்கையிலிருந்து சென்றவர்கள் என்பது துணிவு.[1]

தமிழ் நாட்டினின்றும் சென்ற சுமேரியர் தமது நாட்டி லுள்ள இடம் ஒன்றுக்கும் மலை ஒன்றுக்கும் எல்லம் என்னும் பெயர் கொடுத்துள்ளார்கள். ஒரு நாட்டினின்றும் சென்று இன்னொரு நாட்டிற் குடியேறும் மக்கள் தம் நாட்டு இடப் பெயர்கள் சிலவற்றைத் தாம் குடியேறிய நாட்டின் இடங்க ளுக்கும் இட்டு வழங்குதல் இயல்பு. இதற்கு எடுத்துக்காட் டுகள் வேண்டா. இதனாலும் கிழக்கில் ஓர் எல்லம் இருந்த தென்பது தெற்றெனப் புலப்படும். முற்காலத்து இடப் பெயர்கள் பெரும்பாலும் வழிபடு கடவுளர் தொடர்பாக உண்டாயின என்பது முன் காட்டப்பட்டது. மேற்கு ஆசி யாவில் எல் தொடர்புடைய நூற்றுக்கணக்கான பெயர்களைக் காணலாம். சுமேரியாவிற்போலவே கிழக்கிலும் எல்லம்மாத் திரமன்று எல்லம் மலையும் இருந்தது. அதற்குச் சிவனொளி மலை என்பதும் பழைய பெயர். இப்பெயர் புத்தர் காலத் துக்கு முற்பட்டது. மனுவின் பேழை தங்கியதாகப் புரா ணங்கூறும் வடமலை இதுவே யாதல் கூடும்.

சுமேரியர் வழிபட்ட ஞாயிற்றுக் கடவுள் தாமுஸ்[2] அல் லது தாம்சி எனப்பட்டார். இப்பெயருடன் இக்கடவுள்

---

1. The accounts given by Berosus in the 3rd or 4th century B.C. appears to suggest that the early settlers of Sumer arrived by sea bringing with them a fully developed civilization. This civilization may possibly have arisen in the submerged Tamil lands that extended to the south of Kumari. - Cultural Heritage of India Vol. III, p. 677.

2 இலங்கையில் தாமு தாமன் என்னும் பெயர்கள் மக்கட்கு வழங்கப்படுகின்றன.

பொனிசியாவிலும் மற்றும் நாடுகளிலும் வழிபடப் பட்டார். தமிழ் என்னும் சொல் இருசொற்களின் மரூஉ என்பது நன்கு அறியக் கிடக்கின்றது. அதன் இறுதி, எல் என்பதன் திரிபாகிய இல். இல்லே பின் இழ் ஆயிற்று.

தமிழ், ஞாயிற்றினின்றும் பிறந்ததென்னும் வழக்குண்மையும், எல்லம் என்பது ஞாயிற்றுக் கடவுளை வழிபட்ட மக்களின் நாட்டைக் குறித்தலும், மாகறல் கார்த்திகேய முதலியார் தமிழ் ஞாயிற்றைக் குறிக்கும் ஒரு சொல்லினின் றும் பிறந்ததெனக் கூறுதலும் மிக ஒத்துள்ளன. உண்மை இவைகளுக்கு அண்மையில் கிடக்கின்றது. கார்த்திகேய முதலியார், தமிழ், தாமம் என்னும் சொல்லினின்றும் பிறந்த தென்கின்றார். இதிலும் பெரிய உண்மையிருக்கின்றது. தாமம் என்னும் சொல் மலையையும் ஞாயிற்றையும் இன்னும் பல பொருள்களையும் குறிக்கும். ஒரு சொல்லுக்குப் பல பொருள்கள் உண்டாயின் அது மிகப் பழைய சொல் எனக் கொள்ளுதல் வேண்டும். வெவ்வேறு அடியாகப் பிறந்து வெவ்வேறு பொருள்களை உணர்த்திய சொற்கள் பல, காலத் தில் திரிந்து மருவி உச்சரிப்பில் ஒரு சொல்லாக வருத லுண்டு. இவ்வுண்மை மொழியாராய்ச்சியால் நன்கு அறி யப்படும். தாமம் என்னும் சொல் மிகப் பழையதாயிருத்த லாலும், தமிழ் நாட்டினின்றும் சென்ற சுமேரியர் ஞாயிற் றுக் கடவுளைத் தாமுஸ் என வழங்கியமையாலும் இலங்கையி லுள்ள ஞாயிற்றுமலை 'தாமம்' எனவும் அம்மலையையுடைய நாடு தாமம் எல்லம் எனவும் வழங்கியிருக்கலாமோ என்பன சிந்திக்கத் தக்கன. அவ்வாறாயின் தாமம் தாம் என மருவித் தாமெல்லமாகி, எல்லம் ஈழமானபோது தாமீழமாய்ப் பின் தமிழம், தமிழாயிற்றெனக் கொள்ளலாம். சிவன் என்பது ஞாயிற்றின் பழைய பெயரென்பது முன் விளக்கப்பட்டது.

இவ்வாறு கொள்ளின் தமிழ், ஞாயிற்றினின்றும் பிறந்தது, அது சிவன் முருகன் முதலிய கடவுளர்களோடும் சைவசித்தாந்தத்தோடும் தொடர்புடையது என்று வரும் பழைய வழக்குண்மைகளுக்கு ஒருவாறு விளக்கம் உண்டாகின்றது. இவ்வாறு கூறுதல் தமிழை இலங்கையோடு தொடர்புபடுத்து தற்குரியசூழ்ச்சி எனச் சிலர் கருதலாம். ஒருகாலத்தில் தமிழரின் இருப்பிடம் [1]தெற்கிலேயே இருந்ததென்றும் இலங்கையும் தென்னிந்தியாவும் அக்காலத்து வெவ்வேறாக இருக்கவில்லையென்றும் இன்னும் ஒருமுறை நினைவுறுத்துகின்றேம்.

## வடக்கே வழங்கிய மொழியின் வரலாறு

ஆரியர் இந்தியாவை அடைவதன்முன் இந்தியா முழுமையும் தமிழ் வழங்கிற்று. ஆரியர்களுடைய வேதபாடல்கள் பிராகிருத மொழியில் செய்யப்பட்டன. பிராகிருதம் இலக்கண வரம்பில்லாத மொழி. பிராகிருதத்தின் திருத்தமே சமஸ்கிருதம் எனப் பெயர்பெற்றது. ஆரிய மக்கள் பிராகிருத மொழியைப் பேசினர்கள். வேதபாடல்களில் பல திராவிடச் சொற்கள் காணப்படுகின்றன. அவர்கள் பிராகிருதத்தோடு திராவிடச் சொற்களையும் கலந்து பேசினர்கள். உற்பத்தியில் வடமொழியைச் சார்ந்தன எனப்படும் வட இந்தியமொழிகளின் அமைப்புத் தமிழை ஒத்

---

1. Hence we shall not be far wrong if we infer that South India gave a refuge to the survivors of the deluge, that the culture developed in Lemuria was carried in South India after this submergence and that South India after its submergence was probably the cradle of the post deluvian human race. As the centre of gravity of the Dravidian people as determined by the density of population lies somewhere about Mysore, south of India must be considered as the home of the people, where they might have spread to the north. - Indian Antiquary 1911, p. 118.

திருத்தலின் நாளடைவில் அவ்வாரியமக்கள் தமிழையே பேசத் தொடங்கினர்கள் என்றும், அவர்கள் வழங்கிய தமிழில் பிராகிருதச் சொற்கள் பெரிதும் காணப்பட்டன என்றும் கொள்ளுதல் அமையும். கி. மு. 6-ம் நூற்றாண்டில் விளங்கிய கௌதம புத்தர் தம் அருள்மொழிகளை மகத மொழியில் (பாளியில்) செய்தார்.[1] வடமொழியிலில்லாத எ. ஒ முதலிய குறில்கள் பாளியிற் காணப்படுகின்றமையால் பாளிமொழி வழங்கிய நாட்டில் முன்பு தமிழ் வழங்கியதென்பதும் பாளி மொழிக்குரியோர் தமிழரென்பதும் முன் ஓரிடத்திற் கூறப்பட்டுள்ளன. புத்தருடைய மதக்கொள்கைகள் சாங்கிய மதத்தைத் தழுவியவை.[2] சாங்கியமதம் வேத மதத்துக்கு மாறுபட்டது. கி. மு 5-ம், 4-ம் நூற்றாண்டுகளில் புத்த நூல்கள் பிராமி எழுத்தில் எழுதப்பட்டன. மரப்பட்டையை வார்ந்து எடுத்த மிருதுவான அதன் உட்பகுதியும் ஓலைகளும் எழுதப் பயன்படுத்தப் பட்டன. கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற் பொறிக்கப்பட்ட புத்த பட்டையங்களில் மசி என்னும் சொற் காணப்படுகின்றது. ஆகவே

1. The existence of the short *e* and *o* in the Pali and the predilection the people showed for them as well as the change of dentals to cerebrals without any influencing cause are to be attributed to the natural vocal tendencies of the people. These sounds must have existed and played an important part in the original language of the people ...If the original Pali speakers belonged to the same race as Dravidians of South India of present day, we have a reason to believe that their native tongue continued them; for they exist in the Dravidian language and are characteristic of them - Willson's philological lectures: - Dr. R. G. Bhandarkar-Collected works Vol. IV, p. 293.

2. It cannot be doubted that Buddha grew up in the atmosphere of sankya thought, for it is the essential basis of his world view. - India's Past p. 151-A. A. Macdonell.

அக்காலத்து எழுதுவதற்கு மசியும் பயன்படுத்தப் பட்ட தெனத் தெரிகின்றது.

அசோகர் காலத்தில் பாளி மொழி வழங்கிற்று. பாணி னியின் இலக்கணம் பிராமி எழுத்தில் எழுதப்பட்டது. அசோகரின் பட்டையங்கள் பிராகிருதத்தில் எழுதப்பட் டன. புத்தரும் சைனரும் சமஸ்கிருதத்தைப் பொருட் படுத்தவில்லை. அவர்கள் பிற்காலத்திலேயே சமஸ்கிருதம் பயின்றனர். அப்பொழுது பிராகிருதம் பாளிக்கும் சமஸ் கிருதத்துக்கும் இடையிலுள்ள ஒரு நிலையை அடைந்திருந் தது. அம்மொழி புத்தரின் வரலாற்றைக் கூறும் லலித விஸ்தரா என்னும் பாடலிற் காணப்படுகின்றது. இது கதா மொழி எனவும் பட்டது. கி. பி முதலாம் நூற்றாண்டில் வடக்கே உள்ள மதுரையில் பொறிக்கப்பட்ட சைன பட்டை யங்களில் பிராகிருதம் காணப்படுகின்றது. இதற்குப்பின் சமஸ்கிருதம் வழக்கில் இருந்தது. சமஸ்கிருத பட்டை யங்கள் கி. பி இரண்டாம் நூற்றாண்டில் ஆரம்பிக்கின்றன. கி. பி ஆறாம் நூற்றாண்டு முதல் சமஸ்கிருதம் பயன்படுத்தப் பட்டு வந்தது. ஆனல் சைனர் இதனைப் பயன்படுத்தவில்லை. ஆறாம் நூற்றாண்டில் புத்த நூல்கள் சமஸ்கிருதத்தில் எழு தப்பட்டன. கி. பி 7-ம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த தியான்சியாங் என்னும் சீனப்பிரயாணி புத்த சன்னியாசிகள் சாதாரண பேச்சிலும் சமஸ்கிருதத்தைப் பயன்படுத்தினர் என எழுதியுள்ளான். மகமதியர் காலம் வரையில் சமஸ் கிருதம் எழுத்து மொழியாக விருந்தது. பஞ்சாபி, இந்தி, குசராத்தி மராட்டி முதலியன பிராகிருதத்தினின்றும் பிறந் தனவாயினும் அமைப்பில் திராவிட மொழிகளை ஒத்தன.

சமஸ்கிருத நூல்கள் தேவநாகரியில் எழுதப்பட்டன. இந்தி, மராட்டிப் புத்தகங்கள் இவ்வெழுத்தில் அச்சிடப்பட்டிருக்கின்றன. இவ்வெழுத்தில் கி. பி 8-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பழைய பட்டையங்களும், கி. பி 12-ம் நூற்றாண்டில் எழுதப்பட்ட பழைய கையெழுத்து நூல்களும் காணப்படுகின்றன. ஆரிய வர்த்தம் அல்லது இந்து ஸ்தானம் எனப்பட்ட விந்தத்துக்கும் இமயத்துக்கும் இடைப்பட்ட நாட்டில் கி. மு. 200 வரையில் ஆரியம் வழங்கியதெனக் கூறலாம். சமஸ்கிருத நாடகங்களில் அரசரும் இருடிகளும் சமஸ்கிருதத்திலும், பெண்களும் பொதுமக்களும் பிராகிருதத்திலும் பேசுவதாக எழுதப்பட்டிருத்தல் காணப்படுகின்றது. ஆகவே பிராகிருதமே மக்கள் மொழியாயிருந்ததெனத் தெரிகின்றது. சமஸ்கிருதம் இலக்கிய மொழியாயிருந்ததன்றி ஒருபோதும் பேசப்படவில்லை. வடக்கே காணப்படும் மொழிகளுள் முக்கிய முடையன பின்வருவன: (1) மேற்கு இந்தி (2) கிழக்கு இந்தி (3) இராசஸ்தானி (4) குசராத்தி (5) பஞ்சாபி (6) காஸ்மீரி (7) லாகின்டா (Lahinda) (8) சிந்தி (9) மராட்டி (10) பீகாரி (11) ஒரியா (Orya) (12) வங்காளி (13) அசாமி (14) இந்து சீனம்.* [இந்தியாவின் தொலைவில் (Further India) வழங்குவது.]

## தமிழ்ச் சங்கம்

தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கமென மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினர் பாண்டியர்கள். இவருள் தலைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் திரிபுரமெரித்த விரி

* இப்பகுதி எ. எ. மாக்டனல் என்பவரின் சமஸ்கிருத இலக்கியங்களின் வரலாறு என்னும் நூலிற் காணப்பட்டவற்றைத் தழுவி எழுதப்பட்டது.

சடைக் கடவுளும், குன்றமெறிந்த குமரவேளும், முரஞ்சியூர் முடிநாக ராயரும் நிதியின் கிழவனுமென இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்றுநாற்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்ட நாலாயிரத்து நூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினரென்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும் முதுகுருகும் களரியா விரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்க மிருந்தாரென்ப. அவர்களைச் சங்க மிரீஇயினர் காய்சினவழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்ம ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரை யென்ப. அவர்க்கு நூல் அகத்தியம்.

இனி இடைச்சங்க மிருந்தார் அகத்தியனாரும் தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழியும், மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறு பாண்டரங்கனும், திரையன் மாறனும், துவரைக்கோனும் கீரந்தையுமென இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்ட மூவாயிரத் தெழுநூற்றுவர் பாடினரென்ப. அவர்களாற் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலையும், வியாழமாலை யகவலுமென இத்தொடக்கத்தனவென்ப, அவர்க்குநூல் அகத்தியமுந் தொல்காப்பியமும், மாபுராணமும், இசைநுணுக்கமும், பூதபுராணமென இவையென்ப. அவர் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவர்களைச் சங்க மிரீஇயினர் வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவருட் கவியரங்கேறினர் ஐவர் பாண்டியரென்ப. அவர்

சங்கமிருந்து தமிழாராய்ந்தது *கபாடபுரத்தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல்கொண்டது,

"இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம் பூதனாரும், அறிவுடை யரனாரும், பெருங் குன்றூர் கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிள நாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன. நெடுந்தொகை நானூறும் (அகநானூறு), குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமுமென்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது ஆயிரத் தெண்ணூற் றைம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்க மிரீஇயினார். கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியரென்ப." (இறையனார் களவியல் உரை.)

---

* "கவாடபுரம் இராமாயணத்திற் கூறப்பட்டுள்ளது. கௌடலியர் தாம்பிரபர்ணி ஆற்று முகத்துவாரத்திற் பாண்டியருக் குரியதாகிய கபாடம் என்னும் ஓர் இடத்தைக் குறித்துள்ளார். இது ஒருபோது முன். கடல்வாய்ப்பட்ட கபாடபுரத்தை அடுத்த இடமோ இன்றேல் அதன் பகுதியோ என்று கருத இடமுண்டு."

Kautalia speaks of pearls being found in the river Tambraparni river, on Pandian Kavataka and near the Mahendra mountains. - Lectures on the Ancient History of India - D. R. Bhandarkar.

இதன் சுருக்கம்:—தலைச்சங்கம் கடல்கொண்ட தென் மதுரையிற் கூடிற்று. இக்கழகத்துக்கு வரையறுக்கப்பட்ட உறுப்பினர் 549-பேர். இச்சங்கம் 89 பாண்டியரின் ஆட்சிக் காலத்தில் 4,440 ஆண்டு நடைபெற்றது. இச்சங்கத்தில் நூல்களையோ தனிப்பாடல்களையோ பாடிக் கொண்டுவந்து அரங்கேற்றிய புலவர் 4,449 பேர். இடைச்சங்கம், தென் மதுரையின் அழிவுக்குப்பின் கபாடபுரத்தில் நடைபெற்றது. இச்சங்க உறுப்பினர் 59-பேர். இச்சங்கம் 59 பாண்டியர் ஆட்சியில் 3,780 ஆண்டு நடைபெற்றது. இச்சபையில் பாடல்களை அரங்கேற்றிய புலவர் 3,700 பேர். இவர்களுள் ஐவர் பாண்டியமன்னர்.

கபாடபுரத்தைக் கடல் கொண்டபின் சங்கம் மதுரையிற் கூடிற்று. இச்சங்கம் 49 அரசர் காலத்தில் 1800 ஆண்டு நடைபெற்றது. இச் சங்கத்துப், புலமையில் அரங்கேறிய புலவரின் எண் 449. இவருள் மூவர் பாண்டியர். இச்சங்க உறுப்பினர் 49 பேர்.

இச்சங்கம் 197 அரசர் காலத்தில் 9,990 ஆண்டுகள் நடைபெற்றிருக்கின்றது.

## சங்க ஆராய்ச்சி

இறையனர் களவிய லுரைகாரர் இச் சங்க வரலாற்றை அக்கால நூல்களில் கண்டவற்றை ஆதாரமாகக்கொண்டே எழுதியுள்ளார் என உய்த்துணர்தல் வேண்டும். இவ்வகை வரலாறுகள் பல, ஆங்காங்கு அக்கால நூல்களிற் காணப்பட்டன என்பதற்கு, "சகரர் வேள்விக் குதிரை நாடித் தோட்ட கலகத்துட்பட்டுக் குமரியாறும் பனிநாட்டோடு கெடுவதற்கு முன்னும்" என்று பேராசிரியரும், கடல்கொண்ட

ஆறும் மலையும் நாடும் ஆகியவற்றை அடியார்க்கு நல்லாரும், "வடிவேலெறிந்த வான்பகை பொறாது பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள" என்று இளங்கோவடிகளும், "மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின், மெலிவின்று மேற்சென்று மேவார் நாடிடம்படப், புலியொடு வில்நீக்கிப் புகழ் பொறித்த கிளர்கெண்டை, வலியினால் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்" என நல்லந்துவனாரும் கூறுமாற்றான் நன்கு துணியப்படும். தமிழ் மக்கள் தம் வரலாறுகளை எழுதி வைப்பதில் கருத்துச் செலுத்திற்றிலர் எனக் கூறுவது தவறு. தமிழர் தம் பண்டை வரலாறுகளையும் அரசர்களையும் பற்றி எழுதி வைத்திருந்தார்கள் என்பது மகஸ்தீனஸ், பக்கஸ் முதல் அலக்சாந்தரின் படைஎடுப்பு வரையில் 154 பாண்டியர் ஆண்டார்கள் என்றும், அவர்களின் ஆட்சிக் காலம் 6431 ஆண்டு மூன்று திங்கள் என்றும் கூறியுள்ளமையால்[1] நன்கு துணிதலாகும். மேற்கு ஆசிய நாடுகளிலும் கோயிற் குருமாரே அரசர்களையும் அவர்காலத்து நிகழ்ச்சிகளையும் பற்றி எழுதிவைத்தார்கள். அக்காலங்களின் இன்ன அரசனின் ஆட்சியின் இத்தனையாவது ஆண்டு எனக் காலம் குறிக்கப்பட்டு வந்தமையின் அரசரைப்பற்றிய வரலாறுகள் எழுதப்படாமல் இருந்தன என்று கூறுதல் அமையாது. மேற்கு ஆசிய நாடுகளில் நூல்கள் களிமண் தட்டுகளில்

---

1 பாண்டியர்கள் தமது பரம்பரை சிவனினின்று தோன்றியதெனக் கொண்டார்களெனத் தெரிகின்றது. கிரேக்கர் சிவனையே பக்கஸ் எனக் கூறியுள்ளார்கள் எனச் சில வரலாற்றுக்காரர் கூறியுள்ளார்கள். எகிப்தியரும் தமது நாட்டை மிக முற்காலத்து ஆண்டவர்கள் கடவுளர் என நம்பினர். திருவிளையாடல் கூறும் பாண்டிய அரச பரம்பரையும் ஈண்டு நோக்கத்தக்கது.

எழுதிச் சூளையிலிட்டுக் காப்பாற்றப்பட்டன. ஆகவே அவை மண் செல் முதலியவைகளால் அழிக்கப்படாது பிழைத்தன; அவைகளால் அந்நாடுகளின் வரலாறுகள் ஓரளவு அறியக் கிடக்கின்றன. எகிப்தியரின் வரலாறுகள் பெரும்பாலும் சமாதிச் சுவர்களிலும் சமாதிகளுள் வைக்கப்பட்ட பைபிரஸ் நூல்களிலும் காணப்படுகின்றன. தமிழர் எழுதப் பயன்படுத்திய ஓலை சிறிது காலத்தில் ஒடிந்தும், செல், மண் முதலியவைகளால் உண்ணப்பட்டும், இராம பாணத்தால் துளைக்கப்பட்டும் அழிந்து போகத்தக்கன. மேற்கு ஆசியாவில் கி. மு. 7-ம் நூற்றாண்டுக்கு முன்னரே பெரிய நூல் நிலையங்கள் இருந்தன.[1] மொகஞ்சொதரோத் தமிழர் நாகரிகம் மேற்கு ஆசியமக்கள் நாகரிகத்தைவிட மேலானது என்று கருதப்படுகின்றது. உலக மக்களுக்கே நாகரிகத்தை நல்கியவர்கள் என்று சொல்லப்படும் மக்கள் தமது வரலாற்றை எழுதி வையாதிருந்தனர் எனக் கூறமுடியாது. நூல்களை எழுதிப் பாதுகாத்து வைக்கும் முறையும் ஒரு நடு இடத்தினின்றும் பரந்துசென்ற வழக்கமே யாதல்வேண்டும். வரலாறுகளை எழுதிக் காப்பாற்றும் பழைய வழக்கைப் பின்

1. ...(Asur Banipal 673 B.C.) adding more to the royal library than all the kings who had gone before him. His agents sought every where for inscribed tablets ransacking the library treasures of Babylone, Borsipa, Kootha, Akad, Ur, Erek, Larsa, Nipur and various other cities. - Early faiths of western Asia. - P. 42.

Berosus tells us, as a priest of the first temple of Kaldia, he should know that in Babylonia, there were records kept with the greatest care, comprehending a period of fifteen myraids of years, containing the histories of the heaven and of the sea, of birth of mankind, of kings and their memorable actions. Berosus is made to say that before the deluge, there were ten Chaldian monarchies perhaps meaning dynasties - which lasted 432,000 years and which Turanian measures of moon's would be 33,212 years, a not un-reasonable period for the creation of man.-Ibid 43.

பற்றியே இலங்கைப் புத்த குருமாரும் புத்தர் காலம் முதல் வரலாறுகளை எழுதிக் காப்பாற்றினர். அவைகளை ஆதாரமாகக் கொண்டே தீபவமிசம், மகாவமிசம் முதலிய வரலாறுகள் விரித்து எழுதப்பட்டன.[1]

புராணங்களில் உண்மை அணுவளவும் பொய் மலையளவும் காணப்படுவதை நோக்கிய சில ஆராய்ச்சியாளர் தமிழ்ப் புலவர்கள் கூறியுள்ள வரலாற்றுண்மைகளிலும் ஐயம் உறுகின்றனர். புராணங்களிலுள்ள கற்பனைக் கதைகளுக்குப் பொறுப்புப் பிராமணரேயன்றித் தமிழ்ப் புலவர்களல்லர் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் இம்மயக்கம் எழுவழியில்லை. தமிழ்ப் புலவர்கள் உள்ளவற்றைஉள்ளவாறே கூறும் இயல்பினரென்பது சங்கச் செய்யுட்களாற் றெளிதும். இராமர் 11 ஆயிரம் ஆண்டு அரசு புரிந்தார், தசரதன் அறுபதினாயிரம்ஆண்டு உயிர்வாழ்ந்தான்என இயற்கைக்குமாறான எதையும் இறையனார்களவியலுரைகூறாமை கருத்திற்பதிக்கத் தக்கது. கெரதோதசு ஆசிரியர் ஓர் அரசனுக்குள்ள சராசரி காலம் 33 ஆண்டுகள்எனக் கணக்குச் செய்துள்ளார். மூன்று சங்கங்களும் நடைபெற்ற காலத்தில் இருந்த அரசரின் எண் 197. இவ்வரசர் ஒவ்வொருவருக்கும் முப்பது ஆண்டுகள் ஈந்தால் 5970 ஆண்டுகளாகும். இவ்வாண்டுகள் சந்திர அளவின்படி கணக்குச் செய்து சூரிய ஆண்டாக்கின் 5470

1 The Attakatha which had been handed down by word of mouth to almost the end of the first century B. C. was set down in writing about 20 B.C. This and its continuation to about the middle of the third century A.D. formed basis of the Dipavamsa. The same matter received further and somewhat further treatment in Budhagosa's instruction to the Samantapasadika in the 5th century, and the epic elaboration Mahavamsa in the sixth century. - Ancient India and South Indian history and culture vol. 1, P. 449 - S. K. Aiyengar.

வரையிலாகும். இறையனர் களவியலுரையில் மூன்று சங்கங்களும் 9990 ஆண்டுகள் நடைபெற்றனவாகக் கூறப்பட்டுள்ளது. பழைய காலக்கணக்குகளில் இவ்வாறு சில பிழைகள் நேர்தல் இயல்பு. கெரதோதசு மூன்று எகிப்திய அரசர் தனித்தனி 300 ஆண்டுகள் ஆண்டனர் எனக் கூறியுள்ளார். இடையேசில அரசரின் எண் விடப்படுமாயின் அவர்களின் ஆட்சிக் காலம் நீண்டதெனக் கணக்கிடப்படுகின்றது. இலங்கை வரலாற்றில் இவ்வகைப் பிழை நேர்ந்தமையால் சில அரசர் நீண்டகாலம் ஆட்சி புரிந்தனர் எனக் கருதப்பட்டுப் பின்பு திருத்தப்பட்டது. கிறித்துவ மறையின் பழைய ஏற்பாடு மறைந்துபோகப் பின்பு அது கி.மு. 5-ம் நூற்றுண்டுக்கும் கி.மு. 3-ம் நூற்றுண்டுக்குமிடையில் எழுதப்பட்டது. அதில் சில அரசர் 800 அல்லது 900 ஆண்டுகள் உயிர் வாழ்ந்தவர்களாக கூறப்பட்டிருக்கின்றனர். அதனை நம்ப முடியாவிடினும் அதில் கூறப்படுவன வரலாற்று நூலாரால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. இவைகளை எல்லாம் வைத்து நோக்கி இறையனர் களவியலிற் கூறப்பட்ட காலக் கணக்கை ஆராய்தல் வேண்டும். காலக் கணக்கு மிகுதியாயிருப்பதால் சங்கம் நடைபெறவில்லையெனக் கொள்ளுதல் ஆகாது. எட்டுத்தொகை பத்துப் பாட்டு முதலிய நூல்களைப் பாடிய புலவர்கள் தமிழ் நாட்டின் பல கோணங்களில் பல்வேறு காலங்களில் வாழ்ந்தோர். அப்பாடல்கள், தொகுக்கப்படுதற்கு ஓரிடத்தில் எவ்வாறு கிடைத்தன என்பது ஆராயப்படுதல் வேண்டும். சங்கத்தே அரங்கேற்றப்பட்ட பாடல்கள் அங்கு படியெடுக்கப்பட்டுக் கிடந்தமையாலே அவைகள் ஓரிடத்திற் கிடைத்தனவென்பது நன்கு விளங்கும். சங்க வரலாறு கி.பி. 7-ம் நூற்றுண்டிலும் அதற்கு முன்னும் பழைய வரலா

ருக விருந்ததென்பது[1] "கூடலிலாய்ந்த ஒண் தீந்தமிழின் துறைவாய்ப் புக்கனேயோ" என்னும் மாணிக்க வாசகரின் திருவாக்கானும் "நன்பாட்டுப் புலவனைப் சங்கமேறி நற்கன கக்கிழி தருமிக் களித்தான்காண்" என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தானும் நன்கு விளங்கும். சங்கத்தின் இறுதிக் காலம் கி.பி. மூன்றும் நூற்றுண்டு வரையில் எனப் பெரும் பாலுங் கொள்ளப்படுகின்றது.[2]

இடைச்சங்கம் கபாடபுரத்தி லிருந்ததெனப்படுகின்றது. இது தாமிரபர்ணி ஆற்று முகத்துவாரத்திலுள்ளதென இராமாயணங் கூறுகின்றது. கபாடபுரத்தின் அழிவுக்குப் பின் பாண்டியரின் தலைநகரம் மணலூரிலிருந்தது. இது திருச்செந்தூருக்குப் பக்கத்தில் இருந்ததெனக் கருதப்படுகின்றது. மாபாரதம் பாண்டியரின் தலைநகரம் மணலூரிலிருந்ததாகவே கூறுகின்றது. அதன்பின்பே இப்பொழுதுள்ள மதுரை பாண்டியரின் தலைநகராயிற்று. இப்போதைய மதுரை முன் கடம்பவனமாயிருந்ததெனத் திருவிளையாடற் புராணங் கூறும். "கின்னரம்பயில் கடம்பமாவனத்தின் கிழ்சாரத், தென்னன் சேகரன் என்னுங் குலசேகரனும், மன்னர் சேகா னரசுசெய்திருப்பது மணவூர்" என்பது திருவிளையாடல். மெகஸ்தினசும் தொலமியரும் மதுரையைக் குறிப்பிட்டுள்ளார்கள். கடைச்சங்க காலத்தில் இருந்த அரசர் 49-பேர் என்று கூறப்படுகின்றனர். தற்கால முறையின்படி ஓர் அரசனுக்கு 20 ஆண்டு ஈயின் அவர்களின் மொத்த ஆட்

---

1. ................பாண்டியர் பாடு தமிழ் வளர்த்த கூடலின் வடாஅது (ஆசிரியமாலை—புறத்திரட்டு)

2. We may for the present hold as a safe hypothesis that the Sangam epoch covered the three centuries of the Christian era. - Chera Kings of Sangam Period - P. 121-K. G. Sesha aiyer.

சிக்காலம் 980 ஆண்டுகளாகும். அகவே கடைச்சங்கம் கி.மு. 7ம் நூற்றுண்டில் தொடங்கிற்று எனக் கூறுதல் தவறுகாது. முறைக்கு முறை நேர்ந்த கடல்கோட் குழப்பங்களால் அரசரால் திரட்டி வைக்கப்பட்ட தமிழ் நூல்கள் அழிவெய்தின வென்று உய்த்துணர்தல்கூடும். தலமிசோத்தர் என்பவரால் அலக்சாந்திரியாவில் தொகுத்து வைக்கப்பட்ட 700,000 நூல்கள் அழிந்துபோனமை இதனேடு ஒப்புநோக்கத்தக்கது. கடைச்சங்கம் குலைந்தபின் கி.பி 470-ல் வச்சிரநந்தி என்பவரின் தலைமையில் திகம்பரசைனரால் தமிழ்ச்சங்கம் தொடங்கி நடத்தப்பட்டது.

## அகத்தியர்

அகத்தியர் தலைச்சங்கத்தைத் தலைமை தாங்கி நடத்தியவர் என இறையனர் களவியல் உரை கூறுகின்றது. அகத்தியர் என்னும் விண்மீன் ஒன்றைப்பற்றிப் பரிபாடல் கூறுகின்றது. மணிமேகலையில் (கி.பி.200) அகத்தியர் அமரமுனிவர் எனச் சுட்டப்படுகின்றுர். "கஞ்ச வேட்கையிற் ககந்தன் வேண்ட, அமர முனிவ னகத்தியன்றனது, கரகம் கவிழ்ந்த காவிரிப்பாவை"

"கடவுட் கணிகை காதலஞ் சிறுவன் அந்தணரிருவரும்" என வரும் மணிமேகலை அடிகளுக்கு "திலோத்தமை பிள்ளைகளாகிய வதிஷ்டர் அகத்தியர்" எனப்பொருள் கூறி "வசிஷ்டனும் அகஸ்தியனும் பிரஹ்மா திலோத்தமையென்னும் அப்ஸரஸைக் கண்டகாலத்து ஜனித்தனர்." (நீல-சமயம்) என்னும் மேற்கோளையும் எடுத்துக் காட்டியுள்ளார் டாக்டர் சாமிநாதஐயரவர்கள். புராணங்கள் வதிஷ்டர், அகத்தியர், விசுவாமித்திரர் முதலியோரின் தந்தை மித்திராவரு

ணன் என்றும் கூறுகின்றன. 1 மித்திரவருணன் தமிழ் மரபி னரே என்பது ஆராய்ச்சியாளர் துணிபு.

திருமந்திரம் கி.பி. 5-ம் நூற்றாண்டு அளவிற் செய்யப் பட்டது. அதனகத்தே அகத்தியரைப்பற்றிக் கூறப்பட் டுள்ளது.

" நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன வீசன்
நடுவுள அங்கி அகத்திய நீ போய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே " (திருமந்திரம்).

புறப்பொருள் வெண்பா மாலைப் பாயிரத்தில்,

" மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவன் "

எனவரும் அடிகளும் ஷ கருத்தைத் தழுவிச் செய்யப் பட்டதாகும்.

இவ்வரலாறுகளால் கிறித்துவ ஆண்டின் தொடக்கத் துக்கு முன்னர் அகத்தியர் வரலாறு கற்பனைக் கதைகள் பல வற்றுடன் கலந்த பழங்கதையாக மாறியுள்ளதென்று விளங்கு கின்றது.

வேத பாடல்கள் சிலவற்றைச் செய்தவரும் உலோபா முத்திரையை மனைவியாகப் பெற்றவருமாகிய அகத்தியர் ஒரு வர் வேதகாலத்தில் விளங்கினர். இராமாயணத்தில் அகத்தி யர் ஆச்சிரமம் கோதாவரியாற்றுக்கு வடக்கே உள்ளதெனக்

1. God Varuna himself was an Asura (Dravidian)...Vedic kings and Rishis came to have Asura blood in them, as is indicated by the colour. Sages like Vashistha, Agastya and Visvamitra were given the same father Mitra-Varuṇa, - History of pre-Musalaman India-P. 172

கூறப்பட்டுள்ளது.[1] தென்னாட்டில் அகத்தீச்சுரம் அகத்தியான்பள்ளி முதலிய ஆலயங்கள் இருக்கின்றன.

அகத்தியர் தமிழுக்கு ஆதி [2] இலக்கணஞ் செய்தாரென்றும், அவரிடத்தில் அதங்கோட்டாசிரியன், தொல்காப்பியர், பனம்பாரனர், செம்பூட்சேய், வையாபிகர், அவிநயர், காக்கை பாடினியர், துராலிங்கர், வாய்ப்பியர், கழாரம்பர், நற்றத்தர், வாமனர் என்னும் பன்னிருவர் கல்வி பயின்றார்களென்றும் வரலாறுகள் வழங்குகின்றன. இவைகளுக்கு,

> " வீங்குகடல் உடுத்த வியன்கண் ஞாலத்துத்
> தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக் காகென
> வானோர் ஏத்தும் வாய்மொழிப் பல்புகழ்
> ஆனாப் பெருமை அகத்தியன் என்னும்
> அருந்தவ முனிவன் ஆக்கிய முதனூல்
> பொருந்தக் கற்றுப் புரைதப உணர்ந்தோர்
> நல்லிசை நிறுத்த தொல்காப் பியனும்"

என்னத் தொல்காப்பிய உரையிற் காணப்படும் பன்னிரு படலப் பாயிரம் என்னும் மேற்கோளையும்,

> "தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
> தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
> துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன் முதற்
> பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த"

என வரும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிர அடிகளையுமன்றி வேறு மேற்கோள்கள் காண்பதரிது.

---

1. *Agastya asrama*: Twenty four miles to the south east of Nasik now called Agastopuri; It was the hermitage of Rishi Agastya. - Geographical Dictionary of Ancient and mediaeval India - Nundo Laldey.

2 கானார்மலயத் தருந்தவன் சொன்ன கன்னித்தமிழ்-யாப்பருங்கலம்.

"தமிழ் நாட்டில் அகத்தியர்கள்" என்னும் ஆராய்ச்சி நூல் எழுதிய கே. என். சிவராசபிள்ளை அவர்கள் அகத்திய ரைப்பற்றிய கதைகள் கற்பனை எனக் கருதினர்கள். முற் காலங்களில் ஒவ்வோர் குடும்பத்தினரும் அவ்வக்குடும்பங் களின் ஆதி முதல்வர்கள் பெயர்களால் அறியப்பட்டார்கள். விசுவாமித்திரர், வதிட்டர், அகத்தியர் என்னும் பெயர் களும் அம்முறையில் வழங்கின. இவ்வாறு பல்வேறுகாலங் களில் வாழ்ந்த பல அகத்தியர்களின் கதைகள் எல்லாம் ஒருங்கு திரண்டு பல கட்டுக்கதைகளோடு பின்னி இன்றைய அகத்தியர் வரலாருக வழங்குகின்றதென்பது இற்றை ஞான்றை ஆராய்ச்சியாளரது துணிபாகும். இஞ்ஞான்று அகத்தியர் பெயருடன் வழங்கும் வைத்திய நூல்கள்போன் றனவே முற்கால அகத்தியங்களுமாயிருத்தல் கூடும்.

செங்கோன் தரைச்செலவில் ஏழ்தெங்கநாட்டு முத் தூர் அகத்தியன் என்னும் தமிழ்ப் புலவர் ஒருவரின் பெயர் காணப்படுகின்றது.

சுமத்திரா யாவா முதலிய நாடுகளில் அகத்திய விக்கிர கங்கள் மக்களால் வழிபடப்பட்டன. வாயுபுராணம், அகத்தி யர் போணியோ, குசத்தீபம், வராகதீபம், மலையத்தீபங்களுக் குச் சென்ருரென்று கூறுகின்றது. அவர் சுமத்திராவிலே உள்ள மலாயு என்னும் மலையில் இருந்தார் என்னும் வர லாறு அங்கு வழங்குகின்றது ஆதியில் சந்தன மரத்தினற் செய்யப்பட்ட அகத்தியர் விக்கிரகம் மலாயரால் வழிபடப் பட்டது. கி.பி. 7-ம் நூற்றுண்டில் கல்லாற் செய்யப்பட்ட அகத்தியர் உருவம் வழிபடப்பட்டது. அகத்தியர் சிலை சடா முடி கவசம் உருத்திராக்கம் முதலியவைகளுடன் காணப்படு

கின்றது.[1] அகத்தியர் மரபிலுள்ளோர் பலர் அரசராயிருந்தார்களெனத் தெரிகின்றது.

மத்திய யாவாவிலே சாண்டிபான் (Chandi Bann) என்னுமிடத்தில் உள்ள சிவன் கோயிலில் அழகிய அகத்திய விஷ்ணு விக்கிரகங்கள் காணப்படுகின்றன.

ஸ்கிதிய (Scythians) மக்களிடையும் அகத்திரிசிகள் என்னும் ஒரு கூட்டத்தினர் இருந்தார்கள் எனக் கெரதோதசு என்னும் ஆசிரியர் கூறியுள்ளார். பாதி பாம்பும் பாதி மனித வடிவுமுடைய தாயும், கெக்குலிஸ் என்னும் தந்தையும் அகத்திரிசிகளின் ஆதி முதல்வர் என அவர் குறிப்பிட்டுள்ளார். அகத்திரிசிகளிடையே காணப்பட்ட பல ஆடவர் ஒரு பெண்ணை மணக்கும் வழக்கம்போன்றது, மலையாளக் கரைகளிற் காணப்படுகின்றது.[2] மலையாளம் முற்காலத்தில் நாகநாடு எனப்பட்டது. சேர என்பதற்கு நாகம் என்றே சாயனர் பொருள் கூறியுள்ளார்.[3] ஒருகாலத்தில் மலையாளக்

---

1 சிதம்பர ஆலயத்தின் மேற்குக் கோபுரத்திலுள்ள அகத்தியர் வடிவம் "Cultural Heritage of India" என்னும் நூலில் காட்டப்பட்டுள்ளது. அவ்வடிவமும் இவ்வகையினதே.

அகத்தியர் குடகு மலையிலிருந்து பொதியமலைக்கு வந்தமையின் அவர் குடகுமுனி எனப்பட்டாரென்றும் பின் குடகு குடமாகி குடகு முனிவர் குடமுனிவரானாரென்றும் பண்டிதர் சவ்ரிராயனவர்கள் கூறுவர். குறுமுனி என்பது குறக்குமொழி தொடர்பு பெற்றிருக்கலாமென்பதும் அவர் கருத்து.

1. Sayana takes cera to mean snake-Sera kings of the Sangam Period - P. 132 K. G. Sesha Aiyer.

2. Agathirishis are a luxuaious people and wear profusion of gold. They have promisecous intercourse with women to the end that they may be brotheren one of another, and being all of one family may not entertain hatred towards each other - Herodotus 9, 10

கரைகளினின்றும் வெளிப்போந்த அகத்தியர் மரபினரே அகத்திரிசிகள் எனச் ஸ்கிதிய மக்களிடையும் காணப்பட்டார்களாகலாம். ஸ்கிதிய மக்களும் தமிழரை ஒப்பத் துரானியமக்களாவர் என மக்கட்குல நூலார் கூறுவர்.

## தொல்காப்பியர்

தொல்காப்பியர் என்பது தொல்காப்பியம் என்னும் நூலைச் செய்த ஆசிரியருக்கு அந்நூல் செய்தமை காரணமாக வழங்கப்பட்ட ஒரு காரணப்பெயர். இது நன்னூல் செய்தாரை நன்னூலார் எனக்கூறுதல் போன்றதோர் வழக்கு. இவரது இயற்பெயர் யாதெனத் தெரியவில்லை. ஆசிரியர் நச்சினார்க்கினியர் இவர் இயற்பெயர் திரண தூமாக்கினி என ஓரிடத்துக் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியரின் இயற்பெயர் புலத்தியன் (புலம்-அறிவு) என்றும், அப்பெயரை வடமொழிப்படுத்தியவர்கள் அதனைப் புல்+அகம்+தீயன் எனப் பிரித்துத் (திரணம்+தூமம்+அக்கினி) திரண தூமாக்கினி என மாற்றினரென்றும் அறிஞர் சிலர் கூறுவர். இது இக்காலம் வடமொழிப் பெயர்களைத் தமிழ்ப்படுத்தி வழங்குவதுபோன்றதோர் முற்கால வழக்கு. சூரிய நாராயண சாத்திரி என்பதைப் பரிதிமால் கலைஞன் என்று வழங்குவது இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். வடமொழியினைத் தெய்வமொழி என மக்கள் நம்பத் தலைப்பட்ட ஒருகாலத்தில் தென்னாட்டுத் திருக்கோயிற் பெயர்களும் மக்கட் பெயர்களும் வடமொழியிற் திருப்பப்பட்டு வழங்கலாயின. திருவிளையாடற் புராணத்திற் காணப்படும் பாண்டிய அரசர்கள் பெயர்களும் இவ்வாறு மாற்றப்பட்டிருத்தல் நோக்கத்தக்கது. தொல்காப்பியம் செய்யப்பட்டகாலத்தில் திரணதூமாக்கினி போன்ற

பெயர் தோன்றியிருத்தல் சாலாதென்பது வரலாற் ருசிரியர்களுக்கு நன்கு தெளிவாகும்.

தொல்காப்பியம் என்னும் நூலை நுணுகி ஆராயுமிடத்து அது பண்டைத் தமிழ் மரபுகளைப் பாதுகாத்தற்கு எழுந்த நூலென்பது தெள்ளிதிற் புலப்படும். இக்காரணம்பற்றியே தொல்காப்பியம் (தொல்+காப்பு+இயம்=பழமையைக் காப்பதாகிய நூல்) என்னும் பெயர் அந் நூலுக்கு இடப்பட்டது. காப்பியம் என்பது காவியம் என்பதன் திரிபு எனச் சிலர் வழக்கிடுவர். தொல்காப்பியத்தில் காவியத்துக்குரிய பொருள்கள் அமைந்திராமையின் அன்னோர் கூற்றுப் பொருளன்றென விடுக.

தொல்காப்பியம் கி. மு. 350க்குப் பிற்பட்ட நூலன்றென்பது வரலாற்ருசிரியர்கள் துணிபு. தொல்காப்பியத்தில் ஆளப்பட்டுள்ள ஓரை என்னும் சொல் கிரேக்கரின் "ஹோரா" என்னும் சொல்லின் திரிபென்றும், வராகமிகிரர் (கி.பி. 550) காலத்துக்குப் பின்பே இந்திய மக்கள் ஹோரா என்னுஞ் சொல்லை வழங்கினர்களென்றும், ஆகவே தொல்காப்பியம் கி.பி. 6-ம் நூற்ருண்டுக்குப் பிற்பட்டதென்றும் சிலர் கூறுவர். தொல்காப்பியத்திற் கூறப்படும் இலக்கணவிதிகளால் அது சிலப்பதிகாரத்துக்கு முற்பட்ட நூல் என நன்கு விளங்குகின்றது. கிரேக்கர் கி.மு. 5-ம் நூற்ருண்டுக்கு முன் வானநூலைப்பற்றி அறிந்திலர். அதற்குப் பல நூற்ருண்டுகளின் முன்னரே மேற்கு ஆசியமக்களும் தமிழரும் வானநூல், சோதிடநூல் என்பவைகளில் திறமைபெற்று விளங்கினர். ஆகவே கிரேக்கமக்கள் வான ஆராய்ச்சி, சோதிடம் என்பவைகளுக்குரிய சொற்களைப் பிற மக்களிடமிருந்து பெற்றிருப்பார்களேயன்றி அக் கலைகளைப் பழமையே அறிந்

திருந்த பிறர் கிரேக்கரிடமிருந்து பெற்றிருக்கமாட்டார்கள். உலக மொழிகளில் தமிழ்ச்சொல் மூலங்கள் சென்று வழங்கு வதை மொழி ஆராய்ச்சியாளர் கண்டு கூறுகின்றனர். கற்களை எண்ணிக் கணக்கிடுதல் என்னும் பொருளில், லத்தீன் மொழியில் வழங்கும் கல்குலஸ் (Calculus), ஆங்கில மொழியில் வழங்கும் கல்குலேட் (Calculute) முதலிய சொற்கள் கல் என்னும் தமிழ்ச்சொல்லினின்று பிறந்தனவாதலை நோக்கு வார்க்கு ஓரை என்னும் சொல்லே கிரேக்க மொழியில் சென்று ஹோரா என்று வழங்கிற்றெனக் கொள்ளுதல் இயை புடையதெனத் தோன்றும்.

தொல்காப்பியப் பாயிரத்தில் ஐந்திரம் நிறைந்த தொல் காப்பியன் எனக் கூறப்படுதலின் அவர் ஐந்திரமென்னும் வடமொழி இலக்கணத்தைக் கற்றிருந்தார் எனச் சிலர் கருதுவர். ஐந்திரம் என்னும் இலக்கண நூல் இப்பொழுது காணப் படவில்லை. பாணினிக்கு முன் ஐந்திரமென்னும் வடமொழி இலக்கணமொன்று இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. பாணினிக்குப்பின் ஐந்திரமென்னும் இலக்கணநூல் வழங்க வில்லை. பாயிரத்திற் கூறப்பட்ட ஐந்திரம் வடமொழி நூலாயின் தொல்காப்பியர் பாணினி முனிவருக்கு (கி.மு. 400) முந்தியவராவர். ஒருமொழிக்கு இலக்கணஞ் செய்யுமிடத்து மற்றொரு மொழிக்குரிய இலக்கணத்தையும் கற்று ஒப்பு நோக்கி ஒற்றுமை வேற்றுமை காணுதல் சிறந்த முறையாகும்.

இன்னொரு சாரார். ஐந்திரமென்பது சைன நூல்; ஆகவே தொல்காப்பியர் சைனர் எனக் கூறுவர். சிலப்பதிகாரத்தில், "கப்பத்திந்திரன் காட்டிய நூலின், மெய்ப்பாட் டியற்கை விளங்கக் காணு" "விண்ணவர் கோமான் விழுநூல்" என

1. கப்பம் என்பது கற்பம் என்பதன் திரிபு.

இந்திரனால் செய்யப்பட்ட ஒரு நூல் சுட்டப்படுகின்றது. அது மிகப் பழையகாலத்து (கற்பகாலத்தில்) இந்திரனாற் செய்யப்பட்டதெனப்படுகின்றது. இந்திரனது தலைநகராகிய அமராபதி கிருஷ்ணா நதி முகத்துவாரத்திலுள்ளமையும், இந்திரன் தென்னாட்டிலே சிவலிங்கம் வைத்துப் பூசித்தமையுமாகிய வரலாறுகள் ஆராயப்படல் வேண்டும்.

தொல்காப்பியத்திற் காணப்படும் சில அகச்சான்றுகளாலும் [1], அதன் பாயிரத்தாலும் தொல்காப்பியர்காலத்தில் தமிழ் நாட்டின் வடக்கெல்லை வேங்கடமென விளங்குகின்றது. அகநானூற்றில் வரும் மாமூலனார் பாடல்களின்,

"பனிபடு சோலை, வேங்கடத் தும்பர்
மொழிபெயர் தேயத்தர் என்ப"
"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிற் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ"
"கனைகுர லிசைக்கும் விரைசெலற் கடுங்கண்
முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு"

எனவரும் அடிகளால் மாமூலனார் காலத்துக்குமுன் வேங்கடத்துக்கு வடக்கே பிறமொழி வழங்கிற்றென்றும் மாமூல

---

1. வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின், நாற்பெயரெல்லை அகத்தவர் வழங்கும், யாப்பின் வழிய தென்மனார் புலவர்—தொல். செ. 79.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும், தங் குறிப்பினவே திசைச்சொற் கிளவி—தொல். எ. 4.

(செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நாடுகளும் சங்ககாலச் சேர சோழ பாண்டியர் நாடுகளின் எல்லைக்குட்பட்டனவாதலின் தொல்காப்பியர் காலத்துவேங்கடம் தமிழ்நாட்டு வடக்கெல்லை எனத் துணிதும்).

ஞர் கி. மு. 300 வரையில் வாழ்ந்தவராவர் என்றும் வரலாற்று ஆசிரியர்கள் ஆராய்ந்து கூறியுள்ளார்கள். ஆகவே கி. மு. மூன்றும் நூற்றுண்டுக்குமுன் தமிழ் நாட்டின் வடக்கு எல்லே வேங்கடமாக விருந்திருந்தது எனத் துணிதல் கூடும். கலிங்க இளவரசனுகிய விசயன் காலம் முதல் (கி. மு. 6-ம் நூற்றுண்டு) தோன்றி வளர ஆரம்பித்த சிங்கள மொழியில் இலக்கியம் முதன் முதல் கி. பி 10-ம் நூற்றுண்டில் எழுந்தது. ஆந்திர மொழியிலும் இலக்கியங்கள் கி. பி. 9-ம் நூற்றுண்டு முதல் எழ ஆரம்பித்தன. ஆகவே இரு மொழிகளின் காலமும் ஒன்று என (கி. மு. 6-ம் நூற்றுண்டு) உத்தேசமாகக் கூறலாம். அக்காலத்திலோ அதன் சிறிது பிந்தியோ தமிழ் நாட்டின் வடக்கெல்லே வேங்கடமாயிற்று.

“பரந்துபட்ட பொருண்மையவாகிய மாபுராணம், பூதபுராண மென்பன, சில் வாழ்நாட் சிற்றறிவின் மாக்கட்கு உபகாரப்படாமையின் தொகுத்துச் செய்யப்பட்ட வழக்கு நூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்றுகாறும் உளதாயிற்றென்க. கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள் கண்ட கணக்காயனர் மகனர் நக்கீரனர் இடைச் சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம் என்றூராகலானும் (பேராசிரியர் உரை. மர. 649).

“தொல்காப் பியப்புலவர் தோன்ற விரித்துரைத்தார்
பல்காய னர்வகுத்துப் பன்னினர்—நல்யாப்புக்
கற்றூர் மதிக்குங் கலேக்காக்கை பாடினியார்
சொற்றூர்தம் நூலிற்றெகுத்து.”

என வருவனவற்ருல் தொல்காப்பியர் முதல் பின்வந்த ஆசிரியர்கள் எல்லாம் முன் விரிந்து கிடந்த நூல்களைச் சுருக்கி நூல்கள் செய்தார்கள் என விளங்குகின்றது.

## தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம்

தொல்காப்பியத்துக்குப் பனம்பாரனுர் செய்த சிறப்புப் பாயிரமொன்று காணப்படுகின்றது. இப்பாயிரம் ஆராய்ச்சிக்குரியது. தொல்காப்பியத்தில் நூல்களுக்குப் பாயிரம் செய்தற்கு விதிகாணப்படவில்லை. சங்க நூல்களுக்கும் இறையனுர் களவியலுக்கும் பாயிரம் இல்லாமை கருத்திற் கொள்ளத்தக்கது. சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய நூல்களுக்குப் பொருளடக்கமே பாயிரமாக எழுதப்பட்டுள்ளது. வான்மீகர் இராமாயணத்தில் காணப்படும் பாயிரமும் இவ்வகையினதே. இதனல் சிலப்பதிகார காலத்தும் பிற்காலத்தும் வடமொழி நூல்களின் முறையைப் பின்பற்றிப் பாயிரஞ் செய்யப்படலாயிற்று எனக் கருத இடமுண்டு.

பாயிரம் நூலுக்கு இன்றியமையாததென இறையனுர் களவியல் உரை முதல் முதல் வலியுறுத்துகின்றது. இறையனுர் களவியலுரை நக்கீரனுராற் செய்யப்பட்டு நீண்ட காலம் செவிவழக்கில் வந்து கி. பி 7-ம் நூற்ருண்டளவில் எழுதி வைக்கப்பட்டது. இதனல் கி. பி 7-ம் நூற்ருண்டில் அல்லது அதற்குச் சிறிது முன் நூலுக்குப் பாயிரம் இன்றியமையாதது என்னும் கொள்கை வலுவடைந்திருத்தல் வேண்டும்.[1]

---

1. திருக்குறள் சங்கநூலாதலின் அதற்குப் பாயிரம் தோன்றியிருக்கமுடியாது, நூலுக்குப் பாயிரம் இன்றியமையாததென்னும் கொள்கை வலுப்பட்ட ஒரு காலத்தில் பிற்காலத்தார் ஒருவர் முன் நான்கு அதிகாரங்களையும் பாயிரவியல் என எழுதி வைத்தாராகலாம். உண்மையில் அவ்வதிகாரங்கள் பாயிரமாயின் அவை திருவள்ளுவர் செய்தனவாகா.

தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் மணிமேகலை, சிலப் பதிகாரம் முதலிய நூல்களுக்குள்ள பாயிரம் போலல்லாது, நூல், நுவல்வோன், நுவலுந்திறன் முதலியவற்றைக் கூறு வனவாயுமுள்ளது. இவைகளை எல்லாம் ஒருங்குவைத்து ஆராயுமிடத்துத் தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம், கி. பி. 5-ம் அல்லது 6-ம் நூற்றுண்டு வரையில் இருந்த பனம் பாரனுர் என்னும் புலவர் ஒருவரால், அக்காலம் தொல்காப் பியத்தைப்பற்றி வழங்கிய கன்னபரம்பரை வரலாறுகள் எல்லாவற்றையும் திரட்டிச் செய்யப்பட்டதெனத் தெரிகின் றது. பாயிரத்தில் தொல்காப்பியர் அகத்தியரின் மாணவ ரெனக் கூறப்படாமை நோக்கத்தக்கது.

## இலக்கணக் குறிப்புகள் சில

தொல்காப்பியர் வியங்கோள் வினை, தன்மை முன்னிலை என்னும் ஈரிடத்தும் வராதெனக் கூறுவர். "அவற்றுள்-முன் னிலை தன்மை யாயீரிடத்தோடு, மன்னு தாகும் வியங்கோட் கிளவி" (தொல். சொல். வினை.) புறநானூற்றின் இரண்டாம் பாட்டைச் செய்த முரஞ்சியூர் முடிநாகராயர், "வானவரம் பனை நீயோ பெரும" "நடுக்கின்றி நிலியரோ" என முன்னிலை யிடத்து வியங்கோள் வினையைப் பயன்படுத்தி யிருக்கின்றார். இதனால் முரஞ்சியூர் முடிநாகராயர் தொல்காப்பியர் காலத் துக்குப் பிற்பட்டவரென உய்த்தறியலாம். தொல்காப்பியர் காலத்தில் வியங்கோள்வினை படர்க்கை இடத்துமட்டும் பயன்படுத்தப்பட்டது, பிற்காலத்தில் அது முன்னிலை யிடத்தும் வழங்கிற்று. நன்னூலார் அதனை மூவிடத்தும் பயன்படுத்தினர். "கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள், இயலு மிடம்பா லெங்கு மென்ப" (நன்-338). இச்சூத்தி

ரத்தினல் நன்னூலாருக்கு முன்னும் வியங்கோள் தன்மை யிடத்தும் வழங்கிற்று எனத் தெரிகின்றது.

எட்டுத் தொகை பத்துப் பாட்டு முதலிய நூல்களில் உயர்திணைப் பெயர்கள் கள் விகுதி எற்கவில்லை. மணிமேகலை சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் உயர்திணைப் பெயர்கள் கள்விகுதி எற்கும் வழக்குக் காணப்படுகின்றது. "யாங்களும் நீணெறிப்படருதும்" (சிலப்.) எனவும், "நோன்பிகள் விழுமங் கொள்ளவும்" (மணி.) எனவும் வருதல் காண்க. பிற்காலங்களில் கள் விகுதி உயர்திணை அஃறிணைப் பெயர்களுடனும் இருதிணை வினைமுற்றுக்களுடனும் பயன்படுத்தப் பட்டன. தொல்காப்பியர் உயர் திணை என்று கொண்ட தன்மைப் பெயர்கள் நன்னூலார் காலம் முதல் விரவுதிணை (உயர்திணையும் அஃறிணையும்) எனக் கொள்ளப்பட்டன. "தன்மை நான்கும் முன்னிலை யைந்தும்......பொதுப்பெயர்" (நன். 282.)

செய்யும் என்னும் முற்று நிகழ்காலத்துக்குமாத்திரம் உரியதெனத் தொல்காப்பியங் கூறுகின்றது. "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மை, அவ்வயின் மூன்றும் நிகழும் காலத்து, செய்யுமென் னுங் கிளவியொடு கொள்ளா" (தொல். சொல். வினை.) நன்னூலாரின்படி அது வருங்காலத்துக்கு முரியதாகும். "செய்யு நிகழ் பெதிர்வும்" (நன். 145.)

நன்னூலார் நிகழ்கால வினைமுற்று செய்கிறேன், செய்கின்றேன், செய்யாநின்றேன் என வரும் எனக் கொள்வர். தேவாரத்துக்கும் நாலாயிரப் பிரபந்தத்துக்கும் முன் மேற்குறித்தவைகளில் ஒன்றேனும் ஆளப்படவில்லை. வீரசோழிய ஆசிரியர் செய்யாநின்றேன் என்பதைச் செய்யா-நின்றேன் என இரு சொற்களாகப் பிரிப்பர். ஆனல் நன்னூலார் இரு

சொற்களையும் ஒன்றாகக்கொண்டு ஆநின்று நிகழ்காலத்தினை உணர்த்துமென்றார்.

இவ்வாராய்ச்சியினால் தொல்காப்பியம் எல்லாத் தமிழ் இலக்கண நூல்களுக்கும் டார்க்க முற்பட்டதென்பதும், அது சிலப்பதிகார காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் முற்பட்டதென்பதும் நன்கு விளங்குகின்றன.

## உரை நடை வரலாறு

மொழி, வழக்கு செய்யுள் என இருதிறப்படும். மக்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடுங்கால் ஆளும் நடை வழக்கெனப்படும். வழக்கெனினும், வசன நடை, உரைநடை எனினும் ஒக்கும்.

உள்ளத்தெழும் உணர்ச்சிகளுக்கேற்ப மக்களாற் றோற்றுவிக்கப்படும் ஓசைகளின் வளர்ச்சியே பாடலின் தொடக்கமாகும். அவ்வோசை, அளந்து செய்யப்பட்டமையின் செய்யுள் எனப்பட்டது. செய்யுள் என்பதற்குச் செய்யப்பட்டதென்பது பொருள்; தூக்கு என்பது செய்யுளுக்கு மற்றொரு பெயர். தூக்கு என்பது அளவு என்னும் பொருட்டு. ஆகவே, தூக்கு, செய்யுள் என்னுஞ் சொற்கள் ஓரே பொருளனவாதல் காண்க. பா என்பதும் செய்யுளை உணர்த்தும். ஓசை தொடர்பாகச் செய்யுட்குப் 'பா' என்று பெயர் இடப்பட்டுள்ளது.

"பா என்பது சேட்புலத்திருந்த காலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லும் தெரியாமற் பாட மோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளை விகற்பித்து இன்ன செய்யுளென்று உணர்தற் கேதுவாகிய பரந்துபட்டுச் செல்வதோ

ரோசை" எனப் பேராசிரியர் பாவென்பதற்குப் பொருள் விரித்துரைத்தார்.

முற்கால மக்கள் உரையாடும்போதும் எழுதும் போதும் ஆண்ட நடைகள் வெவ்வேறு வகையின. பேச்சு நடை எப்பொழுதும் வசன நடையாக அமைவுற்றது. எழுதுங்கால் எப்பொழுதும் செய்யுள் நடையே கையாளப்பட்டது. இதற்குக் காரணம் பல ஆகலாம். செய்யுள் நடை மிகவுஞ் சுருக்கமானது; வசன நடையில் அதிகம் கூறவேண்டியவற்றைச் செய்யுள்முறையிற் சில வரிகளிற் கூறிவிடலாம். ஓலையில் எழுத்தாணியால் எழுதவேண்டி யிருந்தகாலத்தில் இச் சுருக்கு முறையை மக்கள் விரும்புதல் இயல்பாகும். அச்சுச்சாதனமில்லாத முற்காலத்தில் நூல்கள் எழுதப்படற்கும், படிஎடுத்தற்கும் செய்யுள்முறை வாய்ப்பளித்தது.

இக்காரணங்களினாலேயே முற்கால நூல்கள் எல்லாம் செய்யுள் வடிவிற் காணப்படுகின்றன.

காலத்துக்குக்காலம் மக்கள் ஆளும் சொற்கள் மாறுபடுகின்றன. ஒருகாலத்திற் பெரு வழக்கிலிருந்த சொற்கள் மறைந்துபோகப் புதிய சொற்கள் வழக்கில் வருகின்றன. புதிய சொற்கள் வழக்கில் வந்தகாலத்தில் எழுதப்படும் நூல்களில் பழைய சொற்களின் வழக்குப் பெரும்பாலும் நின்றுவிடுகின்றது. பிற்காலத்தவர்களுக்கு முற்காலத்தில் எழுப்பட்ட நூல்களைப் பயின்று பொருள் விளங்குவது கடுமையாகின்றது. இக்காரணத்தால் முற்கால நூல்களுக்கு வழக்கு (வசன) முறையில் பொருள் எழுதப்படுகின்றது. இவ்வாறு எழுதப்படும் பொருட்பகுதிகள் உரை என வழங்கும். உரை எழுதும் இம்முறையிலிருந்தே பிற்காலத்தில் வசன நூல்கள் எழுதப்படலாயின.

உரை நடைக்கு அடிவரையறை முதலியன இல்லை. முற்கால உரையாசிரியர்களின் உரைநடைகளின் பல பகுதிகள் செய்யுட்கள்போலவே செல்கின்றன. அக்கால மக்களின் வழக்கு எனப்பட்ட பேச்சுநடை, அவ்வாறு இருந்ததெனக் கூறுதல் அமையாது. அவ்வுரையைப் பார்த்து அக்கால உரைநடை எவ்வகையினதென ஒருவாறு சிந்தனைசெய்து அறிந்து கொள்ளலாம்.

தொல்காப்பியம் என்னும் பழைய தமிழ் இலக்கண நூல் கி.மு. 350-வரையிற் செய்யப்பட்டது. அந்நூல் உரை நூல்களைப்பற்றிச் சிறிது கூறுகின்றது. (சூ. 485) அவை பாட்டுக்களின் இடையிடையே உரைநடையினியன்ற பகுதிகள் வைத்துச் செய்யப்படுவன ; சூத்திரத்துக்குப் பொருள் எழுதுவன போல்வன; ஒழிந்துபோன பாடல்களுக்குப் பொருள் எழுதுதல் போல்வன ; செவி வழக்கில்வரும் கற்பனைக் கதைகள் போல்வன; பொய் எனப்படாது உலகியலோடியன்று நகை விளைக்கக்கூடிய கதைகள் போல்வன.

இவ்வகைய நூல்கள் ஒன்றேனும் இன்று காணப்படவில்லை. பற்பல காரணச் செறிவால் மாண்ட தமிழ் நூல்களோடு அவையுங்கூட மடிந்தனவாகலாம்.

கி.பி. இரண்டாம் நூற்றூண்டில் இளங்கோவடிகள் என்னும் அரசப் புலவர் பாடிய சிலப்பதிகாரத்தில் உரைப்பாட்டுக்கள் சில காணப்படுகின்றன. அவை அடிவயைறையின்றிப் பாட்டுநடையில் அமைந்துள்ளன. அவை பெரும்பாலும் ஆசிரியத்தை ஒத்துள்ளன. கி.பி. 1-ம் நூற்றூண்டளவில் செய்யப்பட்ட இறையனுர் களவியல் உரை, கி. பி. 7-ம் நூற்றூண்டளவில் எழுதி வைக்கப்பட்டது. அவ்வுரைநடையின் சில பகுதிகள் செய்யுள்நடைபோற் றேன்றினும்

பெரும்பகுதி சிறுசிறு வசனங்களாக அமைந்துள்ளது. பெருந்தேவனார் பாரதத்தின் இடையிடையே மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்ட வசன நடை இதன்பின் எழுந்தது. இவ்வசன நடை, பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனார் கி.பி. 9-ம் (நூற்றூண்டு) செய்ததாகாது. கி.பி. 12-ம் நூற்ருண்டுக்குப்பின் எழுந்த உரைநடைக்கு எடுத்துக்காட்டு அடியார்க்கு நல்லார், பேராசிரியர், இளம்பூரணர், நச்சினூர்க்கினியர், பரிமேலழகர் முதலானேர் உரைகளாகும். பிற்கால உரை நடைக்கு எடுத்துக்காட்டு மாதவச் சிவஞான யோகிகளின் சிவஞான போத பாபாடியமாகும்.

## தமிழ் உணர்ச்சிக்கு எதிர் உணர்ச்சி

வேதகாலத்தில் தாசுக்களுக்கும் ஆரியர்களுக்கும் மிகுந்த வயிரம் உண்டாயிருந்தது. அதனைத்தொடர்ந்து தமிழைஆரியத்திலும் தாழ்த்திக் கூறும் கட்சியொன்றும் தமிழ் நாட்டில் நீண்டநாள் தொடர்ந்து வராநின்றது. சமய குரவர் காலத்தும் இவ்வகை உணர்ச்சியிருந்தமையினுலேயே "ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்" எனத் தேவாரத்துட் கூறப்படலாயிற்று. இவ்வாறு கூறப்பட்டது இரு கட்சிகளையும் சந்து செய்தற் பொருட்டேயாகும்.

தமிழை இழிவுபடுத்தும் கொடுமை நாளுக்குநாள் வளர்வதாயிற்று. அதிற்பட்டு மயங்கிய மக்கள் தமிழின் உயர்வையும் அதன் இன்றியமையாமையையும் உணராது அதனை இகழ்வாராயினர். கல்வியிற் பெரிய கம்பனே 'தேவபாடையினிக் கதை செய்தவர்' என மொழிந்து வடமொழிக்குப் பணிவு காட்டுகின்றமை காண்க. பரஞ்சோதி முனிவர், சிவஞான முனிவர் குமரகுருபரர் முதலாயினேர் அம் மக்களின்

பேரறியாமைக் கிரங்கி அவர்கள் மனங்கொண்டு தமிழிற் பற்றடையுமாறு தமிழின் பெருமையைப் பல அரிய இனிய தெள்ளிய பாடல்களால் விளக்கிப் போந்தனர். பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் மனோன்மணீயத்திற் கூறிய தமிழ்த் தெய்வ வணக்கப் பாடல்களால் அக்காலத்துத் தமிழுக்கு எதிரான உணர்ச்சி எவ்வளவு முனைத்து நின்றதென்பது தெள்ளிதில் விளங்கும். இன்றும் அவ்வுணர்ச்சி சாம்பர் பூத்த நெருப்புப்போல பலர் உள்ளத்தே கரந்து கிடவாமல் இல்லை. தொல்காப்பியப் பொருளதிகார உரையில் (பொருள். 490) ஆரிய நன்று தமிழ் தீதென வுரைத்த, காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்-சீரிய, அந்தண் பொதியில் அகத்தியனா ராணை யால், செந்தமிழே தீர்க்க சுவாகா." எனக் காட்டப்பட் டுள்ள உதாரணச் செய்யுளாலும் இவ்வகை உணர்ச்சி தமிழ் நாட்டில் நீண்டகாலம் உள்ளதென்பதை நன்கு அறிக.

## தமிழின் பெருமையை விளக்கும் சில பாடல்கள்

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
உண்ட பாலனை யழைத்தது மெண்பு பெண்ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்தது கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்.

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொல்
மடம கட்கரங் கென்பது வழுதினா டன்றே.

—(பரஞ். திருவி.)

1 வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனிற்
கடல்வரைப்பி னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீயினர் என்றால்இவ்
விருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ.

கடுக்கவின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
அடுக்கவந் தாடுவா னுடலி னிளைப்பு
விடுக்கவாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்கவுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

—காஞ்சி புராணம்.

பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்துசங்கத்
திருப்பிலே யிருந்து வையை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்.

(வில்லி பாரதம்)

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்தவேணி
இறைவர்தம் பெயரைநாட்டி யிலக்கணஞ் செய்யப்பெற்றே
அறைகடல் வரைப்பிற் பாடை யனைத்தும்வென் றாரியத்தோ
டுறழ்தரு தமிழ்த் தெய்வத்தை யுண்ணினைந் தேத்தல்செய்வாம்.

—சீகாளத்தி புராணம்.

---

1 வரலாறு அறியப்படாத அக்காலத்தே புலவர்கள் தமிழ்மொழி வடமொழிக்கு இணையானது, அதனை ஒத்த பெருமையுடையது என நாட்டுவதற்குச் சில தெய்வீக நிகழ்ச்சிகளை ஆதாரமாகக் கையாண்டனர். வரலாற்றளவில் வடமொழி தமிழுக்கு அண்மையிலும் நிற்க முடியவில்லை.

தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள்
　　தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவுந் தனிமுத லொருநீ
　　சுவுந்தர மாறனா னதுவுங்
குமரவேள் வழுதி உக்கிர னெனப்பேர்
　　கொண்டதுந் தண்டமிழ் மதுரங்
கூட்டுணா வெழுந்த வேட்கையா லெனிலிக்
　　கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்.

—குமரகுருபரர்

வேலையில் வீழ்த்தகல்லு மென்குடம் புகுத்த வென்புஞ்
சாலையிற் கொளுவுந் தீயுந் தாங்கீர் வையை யாறுஞ்
சோலையாண் பனையும் வேதக் கதவமுந் தொழும்புகொண்ட
வாலையாந் தமிழ்ப்பூஞ் செல்வி.........

—குற்றாலத் தலபுராணம்.

நீராருங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகுஞ்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற் றிருநாடும்
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க விருந்தபெருந் தமிழணங்கே.

பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும்ஓர்
எல்லையறு பரம்பொருள்முன் னிருந்தபடி யிருப்பதுபோல்
கன்னடமுங் களிதெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும்
உன்னுதரத் துதித்தெழுந்தே யொன்றுபல வாயிடினும்
ஆரியம்போ லுலகவழக் கழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே.

—மனோன்மணீயம்,

1 முன்னிருந்த பாலி மொழியுங்கீர் வாணமும்
தன்னுங் கருப்பையிலே தோய்வதற்கு—முன்னரே
பண்டைக் காலத்தே பரவைகொண்ட முன்னூழி
மண்டலத்தி லேபேர் வளநாட்டின்—மண்டுநீர்ப்
பேராற்றருகிற் பிறங்கு மணிமலையிற்
சீராற்றுஞ் செங்கோற் றிறற்செங்கோ—நேராற்றும்
பேரவையி லேநாற் பெருமக்கள் சூழ்ந்தேத்தப்
பாரரசு செய்ததமிழ்ப் பைந் தேவி.

—தமிழ்விடு தூது.

சதுமறையா ரியம்வருமுன் சகமுழுது நினதாயின்
முதுமொழிநீ யநாதியென மொழிகுவதும் வியப்பாமே.

—மனோன்மணீயம்.

பழமறைகண் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங் கொண்டலே.

—மீ. பிள்ளைத்தமிழ்.

## சங்ககாலத்துத் தமிழகம்

கிருஷ்ணாநதிக்குக்கீழ் உள்ள நாடுகள் மூன்று இராச்சியங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இவற்றுள் மூவேந்தருடையவும் குறுநிலமன்னர் எழுவருடையவும் இராச்சியங்கள் அடங்கும். இவர்களை அன்றிச் சிறிய செல்வாக்குடைய தலைவர்கள் பலரும் விளங்கினார்கள். கடற்கரைப் பகுதிகள் மூவேந்தருக்குரியவா யிருந்தன. நடுப்பகுதிகளும் மலைகளும் குறுநில மன்னர் வசம் இருந்தன. கிழக்குக்கரையில் கிருஷ்ணாநதிமுதல் தெற்கில் இராமநாதபுரப் பகுதியிலுள்ள தொண்டிவரையில் சோழ இராச்சியம் இருந்தது. இவ்

---

1 மாகறல் கார்த்திகேய முதலியார் மொழிநூலிற் கண்டது.

விராச்சியத்தின் நடுவே காஞ்சிக்கு வடக்கிலுள்ள திருக்கோவலூரைச் சூழ்ந்த மலைநாடு மலையமான் என்னும் சிற்றரசனின்கீழ் இருந்தது. சோழநாட்டுக்குத் தெற்கில் பாண்டிய இராச்சியம் இருந்தது. இது கிழக்குக் கடற்கரையிலிருந்து மேற்குக் கடற்கரைவரையும் அகன்றிருந்தது. மதுரை, திருநெல்வேலி திருவிதாங்கூர், கோயமுத்தூரின் பகுதி, கொச்சி என்பன இதில் அடங்கும். இவ்விராச்சியத்துக் குட்பட்டிருந்த பொதிய மலையை ஆயும் திருநெல்வேலிப் பகுதியிலுள்ள கொற்கைத் துறைமுகத்தைச் சூழ்ந்த இடங்களை எவ்வியும் ஆண்டனர். பழனிமலையையும் அதைச் சூழ்ந்த நாடுகளையும் பேகன் ஆண்டான். இவனுடைய நாடுகளுக்கு வடக்கே மேற்குத்தொடர்ச்சிமலை ஓரமாகச் சேர நாடு இருந்தது. இது பாலைக்காட்டுவெளி (Palgat gap) வழியாகக் கோயமுத்தூர் வரையுஞ் சென்றது. இதற்குச் சரிநேரே (Parallel) தென் மைசூரில் பல சிற்றரசர்களின் நாடுகள் இருந்தன. அவர்களில் அரயம் நாட்டை இருங்கோவேளும், பறம்பு மலையைப் பாரியும் தகடூரை (தருமபுரி) அதியமானும், கொல்லிமலையை ஓரியும் ஆண்டனர். இருங்கோவேளின் நாட்டுக்கு வடக்கே கங்கர் நாடுகளும், தெற்கில் கோங்கு நாடும் இருந்தன. தமிழ்நாட்டின் வடக்கே (மேற்குக்கரையில்) உள்ள துளுநாடு நன்னன் ஆணைக்குட்பட்டிருந்தது; கிழக்கில் புல்லியின் நாடும், வடக்கில் வடுகர் நாடும் இருந்தன.

## முண்டர்

இந்தியாவிலே சூடியநாகபுரியில் முண்டர் (Mundar) என்னும் ஒரு மக்கட் கூட்டத்தினர் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் பேசும் மொழி தமிழுக்கு உறவுடையது. குலமுறை

யில் அவர்கள் திராவிடக் கூட்டத்தைச் சேர்ந்தோர். வரலாற்றாசிரியர்கள் சிலர் அவர்களே ஆரியருக்கும் தமிழருக்கும் முற்பட்ட இந்தியமக்கள் எனக் குறிப்பிட்டுள்ளார்கள். உண்மையில் அவர்கள் தமிழ்க் கூட்டத்தினரின் ஒரு பிரிவினரேயென்றும் அவர்கள் நீண்டகாலம் தமிழ்ப்பெருங் கூட்டத்தினின்றும் பிரிந்து தனித்து வாழ்ந்தமையின் அவர்கள் மொழி பழக்கவழக்கங்கள் ஆதியன மாறுபடாது வந்துள்ளன வென்றும், அவர்களின் மொழி மிகப் பழைய தமிழாகுமென்றும், இற்றை ஞான்றை ஆராய்ச்சி வல்லுநர் புகல்வர். 1

---

1. Dr. Grierson has recently proved that these languages belong to the same family. The Munda language of the Bengal hills is of a more archaic type than those of Madras and the linguistic evidence leads to the conclusion that both races came from the south and that they must have remained apart for a period sufficiently long to admit of the development of those peculiarities which differenciate the languages so called Kolarian or Munda Group from those of the other Dravidians.—Natives of Northern India P. 29 - W. Crooke B.A.

The proto - Austroloids are responsible for the introduction of neolithic culture and pottery in India but their linguistic legacy is more enduring and important. They are known as the speakers of Austro-Asiatic languages distributed over the widest area from the Punjab to New Zealand and from Madagascar to Easter Island. The Indian variety of the languages is known as the Munda, which accordingly is to be considered the earliest language spoken in India. A consideration of the Munda linguistic areas in India throws light on the course of proto-Austroloid migrations. These may have been from East to West or from West to East. Munda survives now on the inner Himalayan ranges between Ladukh Sikkim in the west of the Central Provinces and southwards among the Ganjam and Vizagapatam hills but not beyond the Godawari. Munda shows affinity not merely with the languages of south east Asia and the Pacific but also with the agglutinative Sumerian languages

1 "முண்டா மொழி (கொல்) மொன் கிமெர் (Mon Khmer) என வழங்கும். இஃது இந்து சினமொழிக் கூட்டத்தைச் சார்ந்தது. இது மகாதோக் குன்றுகளிலும் (Mahadao Hills) இமயமலையிலும் வாழும் மக்களாற் பேசப்படுகின்றது. சூடிய நாகபுரியிலேயே இது பெரிதும் வழங்குகின்றது. இம் மொழியைப் பேசுவோரின் எண் 300,000. இம்மொழிக்குரிய மக்கள் அங்கும் இங்கும் சிதறிக் காணப்படுதலின் அவர்கள் முற்காலத்தில் மிகப் பரந்து வாழ்ந்தார்களென உய்த்துணரலாம். சிமிட் என்னும் பாதிரியார் (Fr. Schimidt) அவர்களை அவுஸ்திரேலிய தொடர்புடைய மொழிகளை வழங்கும் மக்களோடு இணைத்து, இவர்கள் ஆசிய மக்களையும் அவுஸ்திரேலிய மக்களையும் இணைக்கும் சங்கிலிபோன்றவர்கள் எனக் கூறியுள்ளார். உண்மையில் அவர்கள் அவ்வாறே உளர். பிறிஸ்லுஸ்கி என்பார் (J. Przyluski) முண்டா மொழி தொன்மையுள்ளதென்றும் பழைய மொழிகளின் அடிப்படையில் அஃது உள்ளதென்றும், அஃது இன்றும் மலாய ஆசியாவிற் காணப்படுகின்றதென்றும் கூறுவர்.

---

This is considered that the various branches of the Austro-Asiatic family of languages originated at some common centre in central or south East Asia from which it spread in a more or less southerly direction.

The Munda speaking peoples are called by the General names, Mundas, Kolarians Kols and number of six million comprising Santals, Bhils, Kurumbas, Mundas, Savaras and other minor tribes like the Kuravas of Sirguja and Mirzapur.—Hindu civilization P. 34 - R. K. Mookerjee.

1. Ancient India and Indian Civilization P. 11 Paul Masson Oursel.

முண்டா மொழிகளை வழங்குவோர் பொதுநிறமுடைய கோல்லியர் (Kols); இவர்கள் நெளிந்த (சுருண்டதல்லாத) தலைமயிருடையர்; பழைய பர்மிய அசாம் இந்துசின அவுஸ்திரேலிய மக்களுக்கும் இலங்கை வேடருக்கும் இன முடையோர். சந்தாத்தீவின் பந்தின் (Bantin) என்னும் சாதியினரும் செலிபிசிமக்களும் இவ்வினத்தைச் சார்ந்தோர் என வெக்ஸ்பொன்ட் (Wxbonds) என்பார் காட்டியுள் ளார். இம்மக்கள் இருண்ட நிறமுடைய திராவிடவெள் ளத்திற் புகுந்து மறைந்தனர். திராவிடரின் உற்பத்தியை அறிய முடியாமையினால், ஆராய்ச்சியாளர் அவர்களை அவுஸ் திரேலியர், எதுருஸ்கானியர் (பழைய இத்தாலிய மக்கள்) பின்னிய உக்கிரியர் (Finno-ugrians)களோடு இணைத்தனர். திராவிடமென்பது தமிழ் என்பதன் உச்சரிப்பு வேறுபாடு."

குடியநாகபுரியில் முண்டர் மொழியை வழங்கும் ஓரி யர் என்னும் மக்களுக்கு குரங்குக்கொடியும், அதே குலக் குறியும் (Totem) உள்ளன என்றும் அவைபற்றி இவர்கள் குரங்கர் அல்லது குரங்குகள் என இராமாயணத்திற் கூறப் பட்டனர் என்றும் முண்டரும் அவர் நாடும் என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது.[1]

## சில முக்கியமான காலக் குறிப்புக்கள்

| | | | |
|---|---|---|---|
| இந்தியாவில் பழைய கற்காலம் | கி. மு. | 400,000 | வரையில் |
| மொகஞ்சொதரோ காலம் | ,, | 3500 | ,, |
| இந்தியாவுக்கு ஆரியரின் வருகை | ,, | 2000 | ,, |
| வேதகாலம் | ,, | 2000—1400 | |
| பாரதப்போர் | ,, | 1300 | |

1. The Mundas and their country - Sarat Chandra Roy.

| | | |
|---|---|---|
| பிராமணங்கள் | கி. மு. | 1200 |
| உபநிடதங்கள் | ,, | 1000—600 |
| கபிலர் (சாங்கியம்) | ,, | 700—600 |
| வான்மீகர் | ,, | 600 |
| மகாவீரர் | ,, | 527 (இறப்பு) |
| புத்தர் | ,, | 557—477 |
| போதாயனர் | ,, | 500 |
| யாஸ்கர் | ,, | 500 |
| அபஸ்தம்பர் | ,, | 400 |
| பாணினி | ,, | 400 |
| மயூர சந்திரகுப்தன் | ,, | 327-296 |
| மெகஸ்தீனர் | ,, | 305 |
| அசோகர் | ,, | 268-266 |
| பதஞ்சலி | ,, | 150 |
| கார்த்தியாயனர் | ,, | 150 |
| விக்கிரமாதித்த ஆண்டு தொடக்கம் | | 57 |
| சாலிவாகன ,, | கி. பி. | 78 |
| கரிகாற் சோழன் | ,, | 50 |
| இலங்கைக் கயவாகு | ,, | 173—195 |
| சேரன் செங்குட்டுவன் | ,, | ஷை |

---

| | | |
|---|---|---|
| கமுராபி | கி. மு. | 2000 |
| சலமன் | ,, | 900 |
| கோமர் | ,, | 700 |
| பதகோரஸ் | ,, | 570 |
| கெரதோதஸ் | ,, | 480 |
| கெசியற்ஸ் | ,, | 416 |

| | | |
|---|---|---|
| பிளாற்றோ | கி. மு. | 328 |
| அலக்சாந்தர் | ,, | 327 |
| அகஸ்தஸ்சிசர் | ,, | 26 |
| ஸ்ராபோ | கி. பி. | 20 |
| பிளினி | ,, | 79 மரணம் |
| பெரிபுளுஸ் | ,, | 80 |
| தலமி | ,, | 130 |
| பெதுருங்கேரியர் அட்டவணை | ,, | 222 |

சில குறிப்புகள்

1. The Indian God Shiva or Shiba father of Sebo appears in the Ural Altaic astronomy of the Akkadians the third star of their seven parent stars. - *History and Chronology of the mith making age*—P. 85 - J. F. Hewitt.

The name Sin was given first to the land of the Sumerians, the Euphratian Delta. This is called Shinar in the Bible, Singara by Greeks, Sindjar by the Arabian Geographers and was that ruled by the three eyed and two horned wild bull god. This was the three eyed Shiva of the Hindus, whose wife was the weaving Uma, the flax (Uma) Goddess. the Goddess mother of the flax weavers of Asia Minor who became the Egyptian Goddess Neith - Ibid - P. 250.

2. சிலப்பதிகாரத்தில்,

" ஆடித் திங்கட் பேரிருட் பக்கத்
தழல்சேர் குட்டத் தட்டமி ஞான்று
வெள்ளி வாரத் தொள்ளெரி யுண்ண
வுரைசான் மதுரையோ டரசுகே டுறுமெனு
முரையு முண்டே "

என வரும் சோதிடக்குறிப்பின் காலம் கி. பி. 202 என டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்காரும் கி. பி. 171 என K. G. சேஷ ஐயரும் முறையே குறிப்பிட்டுள்ளார்கள்.

3. 11-ம் பரிபாடலிற் காணப்படும் சோதிடக்குறிப்பின் காலம் கி. பி. 196 ஜூன் மீ 28உ (28th June 196 A. C.) என K. G. சங்கர் என்பார் குறிப்பிட்டிருக்கின்றார்—A Volume of studies in Indology.—P. V. Kane

# ஆதி எழுத்துத் தோன்றிப் பிரிந்து வளர்ச்சியடைந்த முறை

ஆதி எழுத்து (உருவெழுத்து)



## சமயம் தோன்றி வளர்ச்சியடைந்த படிமுறைகள்




3 அப்பர் அம்மை (கணவன் மனைவி).

4 ஞாயிற்று வணக்கம் (சிவன்)

5 திங்கள் வணக்கம்.

6 தீவணக்கம்.

7 ஞாயிறும் திங்களும் (அப்பர், அம்மை; மேற்கு ஆசிய நாடுகளில்).

8 இலிங்கம் (மலைமுகடுகளிற் கண்டு வழிபடும் ஞாயிற்றைக் குறிக்கும் செய்குன்றுகள்).

9 இலிங்கம் (கற்றூண்கள் செய்குன்றுகளின் தேய்வு))

10 அரசன் ஞாயிற்றின் புதல்வன் (அரச வழிபாடு; இது முற்காலத்திய அரச வழிபாட்டின் வேறுபட்டது).

11 கோயில்.

12 கோயிற் கிரியைகள்.

13 கடவுள் (நினைவுக்கு வராத பேராற்றலுடைய பொருள்.

14 தத்துவக் கொள்கைகள் (உயிர், உலகம், இறை [உபநிடத ஞானம்] என்பவைகளைப் பற்றிய ஆராய்ச்சி.)

15 சாங்கியம், புத்தம் (ஷை தத்துவக் கொள்கைகளின் சிற்சில பகுதிகள்.)

16 யோகம்.

17 திருமந்திரம், தேவார திருவாசகம், சித்தர்நூல்கள், சித்தாந்த நூல்கள் கூறும் தத்துவ உண்மைகள்.

---

ஆதிகால மும்மூர்த்திகள் அம்மை, அப்பர், குமாரன் (குமரன்); பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் கொள்கை ஆரியர் வருகைக்குப் பிற்பட்டது.

# BIBILIOGRAPHY.

## இந்நூல் ஆராய்ச்சிக்குப் பயன்பட்ட நூல்கள்.


1 A Book of Beginnings—Gerald Massey
2 A Brief History of Sanskrit Literature—Kokeleswara Sastri, M.A.
3 A History of Indian Literature—M. Winternitz
4 A Manual of Geology in India—R. D. Oldham
5 A History of Civilization in Ancient India—R. C. Dutt
6 Ancient Civilization—A Mackenzie
7 Ancient culture in Funan and Cambodia—C. S. Srinivasachari
8 Ancient Egyptian Civilization—G. Elliot Smith
9 Ancient Faiths—Thomas Innman
10 Ancient Geography of Asia—Nibon Chandra Das
11 Ancient Hebrew Social life and Customs—R. H. Kennett
12 An Ancient Historical Disquisition concerning the ancients had of India—William Robertson
13 An Essay on the Origin of South Indian Temples—N. Venkataramayya, M A., Ph. D.
14 An Ancient History of the Near East—R. H. Hall
15 An Imperial History of India—K. P. Jayaswai
16 Ancient India as Described by Ktesias
17 Ancient Indian Colonies of the Far East—Dr. R. C. Mazumdar

18 Ancient India—E. J. Rapson
19 Ancient India—Described by Megasthenes and Arrian
20 Ancient India and Indian Civilization—Paul Masson Oursel
21 Ancient India—Tribuvandas
22 Ancient India—Dr. S. K. Aiyengar
23 Ancient Indian Historical Traditions—Pargiter.
24 Antiquities of India—L. D. Barnett
25 Aryan Origin of Alphabet—L. A. Waddell
26 Aryanization of India—K. N. Dutt
27 Balfour's Cyclopaedia of India
28 Beginnings of South Indian History—Dr. S. K. Aiyengar
29 Baratavarsha—V. Venkatachalam Iyer
30 British Malaya—An account of the Origin—F. Swettenham
31 Ceylon—Parkar
32 Chera Kingdom—K. G. Sesha Iyer
33 Chandra Gupta Maurya and his times—Radda Kumud Mookerji
34 Chunningham's Ancient Geography of India
35 Collected works of Bhandarkar Vol 2.
36 Commemorative Essays presented to Sir R. G Bhandarkar
37 Crime and Custom in Savage life—B. Malinowski
38 Constructive Survey of Upanishadic Philosophy —R. D. Harnade
39 Cultural Heritage of India

40 Dictionary of Religion and Religions
41 Dravidian India—Sesha Iyengar
42 Dravidian Elements in Indian Culture—G. Slater
43 Dr. Krishnaswami Aiyengar's Commemoration Volume
44 Early History of Assyria—Sidney Smith
45 Elements of Hindu Icnography—Gopinath Rao
46 Early History of India—Vincent Smith
47 Encyclopaedia of Religions and Ethics
48 Epic India—C. V. Vaidya
49 Encyclopaedia Britannica
50 Early History of Dekkan—R. G. Bhandarkar
51 Excavations at Harappa—Madho Sarup Vats
52 Faiths of Man—Forlong
53 Further Excavations at Mohenjo-Daro—E. F. H. Mackay
54 Hinduism and Buddhism—Vol. I Sir Charles Elliot
55 Hindu Monism and Pluralism—Max Hunter Harrison
56 Hindu Civilization—R. K. Mookerjee
57 Hindu America—Chaman Lal
58 History of The Tamils—P. T. Srinivasa Iyengar
59 History of Religions—J. F. Moore
60 History of Orissa—R. D. Banerji
61 History of Hindustan—Author of Indian Antiquities
62 Historical Inscriptions of South India—Madras University
63 Hammurabic Code and Dinastic Legislation—Chilperic Edwards
64 Heradotus (English Translation)

65 Ilios—The City and Country of the Trojans—
Dr. Henty Schlieman
66 India the Empire of Swastika—Fr. Heras—
Coronation Souvenir Bombay 1937
67 Indian Historical Quarterly Volumes
68 India in premitive Christianity—Arthur Lillie
69 Indian Culture through ages—Volume I—S. V.
Venkateswara
70 Indian Cultural Influence in Cumbodia—B. R.
Chatterjee.
71 Indo-Aryans—Rajendra Lala Mitra—Vols. 1 & 2
72 India and the Western World, H. G. Rawlinson
73 India and the Pacific World—Kalidas Nag
74 India's Past—A. A. Macdonell
75 International Law and Customs in ancient
India—Paramanath Bandyopadhy
76 Indian Antiquary—Volumes
77 Journal of Indian History Vol. XVI—Part I
78 Journal of the University of Bombay July 1936
79 Karnaric Historical Review, July 1937
80 Konga History—S. Aiyaswamy Sastri
81 Linguistic Survey of India Volume IV—Grieson
82 Light in Mohenjo Daro—Fr. Heras—New
Review July 1936
83 Life in Ancient India—The age of The Mantras—
P. T. S. Iyengar
84 Lectures on the Science of Language 1864—
Maxmullar
85 Links with past ages—E. F. Orton
86 Lectures on the Ancient History of India—
D. R. Bhandarkar

87 Migrations of Early Culture—G. Elliot
88 Manual of Ethnography—H. Risely
89 Man and Thought In ancient India—R. K. Mukerji
90 Mythology of the Hindus—B. Charles Coleman
91 Makers of Civilization in Race and History—L. A. Waddell
92 Mohenjo-Daro and Indus Civilization—Sir John Marshall
93 Natives of Northern India—W. Crooke
94 New sight on the most Ancient East—V. Gordon Crindle
95 Native life in Travancore—Rev. Samuel Mateer
96 Origin and Development of Bangalee Language—S. K. Chatterji
97 Outline of Indian Philosophy—P. T. S. Iyengar
98 Outline of Science—Prof. Arthur Thompson
99 Outline of History—H. G. Wells
100 Ophiolatria—Serpent Worship
101 Origin and antiquity of man—G. Fredric Wright
102 Orayons of Chota Nagpore—S. Chandra Roy
103 Out posts of Science—Bernard Jaffee
104 Orissa and Her remains—Mana Mohan Ganguly
105 Origin of Saivaism and its History in the Tamil land—K. Subramaniam
106 Philosophy of the Lingayats—M. R. Sakhare
107 Pramasamhitha—Translation by Dr. S. K. Aiyengar
108 Premitive family—C. N. Starcke
109 Pre-Musalman India—Rangachari, M.A.

110 Pandian Kingdom—K. A. N. Sastri
111 Premitive Culture—Parts 1 & 2—E. B. Tylor
112 Pre-Historic India—P. Mitra
113 Pre-Historic ancient and Hindu India—R. D. Banerji
114 Rivers of Life or faiths of man In all lands—Major-General T. G. R. Forlong
115 Rama and Homer—A. Arthur Lillie
116 Rig-Vedic Culture—Abinnas Chandra Das
117 Rig-Vedic India „ „ „
118 Shells as evidence of the migrations of Early Culture—T. Wilfred Jackson
119 Short studies in fhe science of comparative religions—G. R. Forlong
120 Sketches chiefly relating to the History and manners of the Hindus—A. Craufurd
121 Syrian stone Lore—C. R. Conder
122 Studies in Chola History—K. A. N. Sastri
123 Studies in Dravidian Philology—Ramakrishnaiah
124 South Indian Architecture—G. Jouvean Dabreuil
125 Sun and the Serpent—Oldham
126 Studies in Indian Ancient History and Culture—Dr. Narendranath Law
127 The uphosims of the Yogic Philosophy with illustrative extracts from the Commentary of Boja-Rajah
128 The Philosophy oi the Upanishads-A. E. Gough
129 The Swastika—Will Hayes

130 The Ancient Quipu—L. Leland Locke
131 The ruling races of Pre-historic Times—H. E. Hewitt
132 The thirteen principal Upanishads translated—Robert Earnest Hume
133 Translations of the third International Congress for the History of Religions—Vol. I
134 The History of Aryan Rule in India—E. B. Havell
135 The Hittite Empire—John Garstang
136 The world's History Vol. 3
137 Twin Rivers—Selon Lloyds
138 The Land of Charity—Rev. Samuel Mateer
139 The Mundas and their Country—S. Chandra Roy
140 The Hindu Colony of Chamba—Prof. Phanindranath Bose
141 Tamil Studies—M. Srinivasa Iyengar M.A.
142 The History of Civilization
143 Town Planning in Ancient Dekkan—C. P. Venkatarama Ayyar, M.A., L.T.
144 The Riddles of Ramayana—C. V. Vaidya
145 The Civilization of Babylon and Assyria—Morris Jastow
146 The People of India—H. Risely
147 The Gates of India—Colonel Sir Thomas Holdich

148 The most Ancient East—V. Gordon Childes

149 The origin of Civilization and premitive condition of man—Lubbock

150 The custom of Polyandryas practiced in Ceylon —T. A. Gunawardna

151 Tiruvasagam—Pope's Translation

152 The palace of Minos at Knossos

153 The script of Harappa and Mohenjo-daro and its connection with other scripts—R. G. Hunter

154 Tamilian Antiquary Volumes

155 The chronology of the Tamils—K. N. Sivarasa Pillai

156 The position of women in Premitive Society—Casquoine Hartley

157 *Zenus*—Bernard Cook

158 Historical method in relation to Problems of South Indian History—K. A. N. Sastri

159 Geographical Dictionary of ancient and mediaeval—India—Nundo Laldey

160 Premitive Paternity—Edwin Sidney Hartland

161 Ancient India and South Indian History and Culture—S. K. Aiyengar

162 History and Chronology of the Mith Making age—J. F. Hewitt

163 Golden Bough—Vols. Sir G. Fracer

164 Rajavaliya—Edited by B. Gunasekara

165 A Volume of studies in Indology—P. V. Kane
166 The sacred Tree—J. H. Philpot
167 Worship of the serpent—J. B. Deane
168 Vedic India—Regozin
169 செங்கோன் தரைச்செலவு
170 தொல்காப்பியம்
171 சங்க நூல்கள்
172 மொழி நூல்—மாகறல் கார்த்திகேய முதலியார்
173 கருணாமிருத சாகரம்— I. ஆபிரகாம் பண்டிதர்
174 சிவஞானபோதம்
175 திருமந்திரம்
176 சிவஞானபோத மாபாடியம்
177 மனோன்மணீயம்—பேராசிரியர் சுந்தரம் பிள்ளை
178 தமிழகம்—ந. சி. க.
179 தமிழர் சரித்திரம்—ந. சி. க.
180 தமிழ் ஒப்பியல் அகராதி—வண - சுவாமி ஞானப் பிரகாசர்

---

நாவற் பிறந்திந்த நானிலமே லாம்பரந்து
பூவிற் பொதியுமணம் போனிலவி—மேவுந்
தமிழகத்திற் பண்டையுருத் தாங்கிவளர்ந் தோங்கும்
தமிழணங்கு வாழி தழைத்து !

தமிழ் இந்தியா முற்றும்

---